# எண்ணங்கள்

டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி







வானதி பதிப்பகம்
13, தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

# எண்ணங்கள்

டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி





வானதி பதிப்பகம்
13, தீனதயாளு தெரு
தி. நகர், சென்னை-17.

| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு : | ஜனவரி, | 1976 |
| இரண்டாம் பதிப்பு : | மே, | 1976 |
| மூன்றும் பதிப்பு : | நவம்பர், | 1977 |
| நான்காம் பதிப்பு : | பிப்ரவரி, | 1978 |
| ஐந்தாம் பதிப்பு : | ஜூலை, | 1978 |
| ஆறும் பதிப்பு : | ஏப்ரல், | 1979 |
| ஏழாம் பதிப்பு : | அக்டோபர், | 1979 |
| எட்டாம் பதிப்பு : | ஜூலை, | 1980 |
| ஒன்பதாம் பதிப்பு : | டிசம்பர், | 1980 |
| பத்தாம் பதிப்பு : | அக்டோபர், | 1981 |
| பதினோராம் பதிப்பு : | நவம்பர், | 1982 |
| பன்னிரெண்டாம் பதிப்பு : | செப்டம்பர், | 1983 |

திருநாவுக்கரசு தயாரிப்பு

விலை ரூ. 8-00

அச்சிட்டோர் :

மூவேந்தர் அச்சகம்,
சென்னை-14.

# பாதை தெரிகிறது

நடுக்கடலுக்குப் போய் தண்ணீர் மொண்டாலும் எந்தப் பாத்திரத்தில் மொள்ளுகிறோமோ அந்தப் பாத்திர அளவுதான் தேறும்.

அதைப் போல்தான் ஞானமும்.

பக்குவப்பட்ட மனோபாத்திரம் இல்லாதவர்கள், எந்த நாட்டைச் சுற்றி வந்தாலும், எத்தனை புத்தகங்கள் படித்தாலும் அவர்களுடைய உள்ளம் ஞானக் கொள்முதல் இல்லாத ஓட்டைப் பாத்திரமாகத்தான் இருக்கும்.

டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி அவர்களுடைய உள்ளம் ஒரு பிரமிக்கத்தக்க பாத்திரம். எந்நிலையிலும் தன்னிலை இழக்காத உரம்; தேர்ந்து தெளியும் நிதானம். துல்லியமான துலாக்கோல் போல் கணிக்கும் பக்குவம்; தொலைநோக்கு மிக்க அறிவுத் தீட்சண்யம்; இனிமை மாறாச் சொல்; இவற்றின் உருவம், அவர்.

அவர் சென்னையில் பேராசிரியராக இருந்தபோது அவரிடம் கல்வி பயின்ற மாணவன் நான். அவர் இன்று அமெரிக்கப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராகப் பணி யாற்றுகிறார். தம் அறிவுத் திறத்தால் லட்சோப லட்சம் தமிழ் மக்களால் தலைசிறந்த சிந்தனைவாதி எனப் போற்றப் படுகிறார். அவருடைய இன்றைய இந்த உயர்வுக்கான கூறுபாடுகளை, அன்றே அருகிலிருந்து உணர்ந்த நூற்றுக் கணக்கான மாணவர்களில் நானும் ஒருவன்.

தினம் தினம் ஆயிரக்கணக்கானவர்கள் வெளிநாடு களுக்குப் போகிறார்கள், வருகிறார்கள். அதேபோல்

எண்ணற்ருேர் சொந்த நாட்டைவிட்டுப் பிற நாடுகளில் வாழ்கிருர்கள். இவர்களில் பெரும்பாலோர் சாயத்தைப் பூசிக்கொண்டு வந்து நிற்பவர்கள்தாம். அதாவது, அவர் களுடைய பேச்சிலும் நடத்தையிலும், அவர்கள் சென்று வந்த நாட்டின் சாயத்தைப்படியவிட்டு, வந்து நிற்பார்கள். மூச்சுக்குமூச்சு 'அமெரிக்காவில் எப்படித் தெரியுமா...? ஜப்பானில் எல்லாம் எப்படித் தெரியுமா?' என்ற விதரணை யற்ற பிரதிபலிப்பாகத்தான் இருக்கும். சொந்த நிர்ணயம் இல்லாதவர்களைப் பற்றிக் குறிப்பிடும்போது The opinion of the last man, he met is his opinion என்று சொல்வார்கள்.

ஆனல், டாக்டர் உதயமூர்த்தி அவர்கள் அமெரிக்காவில் வாழ்ந்தாலும், ஓர் உயர்ந்த தமிழர்; தமிழ் நாட்டிலிருந் தாலும் ஒரு பக்குவம் மிக்க உலகக் குடிமகன்.

தன்னைச் சுற்றியிருக்கும் உலக நிலைகள், வாழ்க்கைப் பிரச்னைகள், லட்சியத் தொலைவு, எல்லாவற்றையும் அவர் அந்த நிலையிலும் மதிக்கத் தவறுவதில்லை; அதே நேரத்தில் அவற்றின் குறைநிறைகளை மதிப்பிடவும் தவறுவதில்லை.

அவருக்குப் பல அரசியல் தலைவர்கள் நெருங்கிய நண்பர்கள். அவர்களுடைய கருத்துக்களை மதிப்பார்; ஆனல் அவற்ருல் அவர் வழி நடத்தப்படுவதில்லை.

இந்தப் பக்குவம், ஒரு முதிர்ந்த சிந்தனுவாதியிடம்தான் அமையும்.

அவர் மனம் ஓர் அபூர்வமான போட்டோ பிலிம். தரமான பிலிமில்தான் படம் பிடிக்கப்படும். பொருளின் துல்லியமான பதிவைக் (Exposure) காணமுடியும். அதே போல் எந்த விஷயத்தைப்பற்றி டாக்டர் அவர்கள் அலசி ஞலும், அதன் குறை நிறைகளை முழுமைகளைப் புரிந்து வெளிப்படுத்தும் பக்குவம் பெற்றது அவருடைய அறிவு.

தமிழ் நாட்டைப் பற்றி அவர் அளவு வேறு எந்தச் சிந்தனுவாதியும் அலசி ஆராய்ந்து கணித்திருக்கிருர்களா என்பது சந்தேகமே.

அவர், தம் அரிய நண்பர் ஆனந்தவிகடன் மணியனுக்கு எழுதிய கடிதம் ஒன்றில் இப்படிக் குறிப்பிட்டிருக்கிருர்.

"அன்புள்ள மணியன்,

நம் வளர்ச்சிக்குக் குறுக்கே நிற்பதெல்லாம் நமது மனேபாவம்தான் என்பது என் எண்ணம். 'இருளடைந்த நாடிதென்று எவரோ சொன்னுர். இருளும் ஒரு பெருமையென எண்ணி வாழ்ந்தேன்' என்று பாடுகிருேம். இருளே இருள் என்று அறிந்தும் பெருமையென எண்ணி வியப்பதா? அல்லது அதை விளம்பரப் படுத்திக் கொள்ளும் மனேபாவத்தைக் கண்டு அயர்வதா? இதுதான் நம் சமூகத்திடையே ஊடுருவும் மனேபாவம். பின் ஏன், 'நம்மிடம் இல்லாதது எது?' என எண்ணி, மமதை கொள்ளமாட்டான்?

தமிழ்நாட்டில் நடைபெற்ற தமிழ் விழாவைப் பார்த்து, படித்து நான் பூரிப்படைந்தேன், தமிழனின் பண்பை, அறிவை உலகுக்குக் கூற— முக்கியமாக அதை உணராத இந்தி மாநிலத்திற்குக் கூற, நடத்தப்பட்ட நல்ல காரியம் என. எனினும், அதே சமயத்தில், கடந்த இருபது ஆண்டுகளாக நாம் என்ன செய்து வந்தோம் என்று யோசித்துப் பாருங்கள். நாட்டில் ஒரு தமிழ்ப் பண்டிதரை அறியுமளவுக்கு, நாடு ஒரு விஞ்ஞானியை அறியவில்லை. ஒரு சினிமா நடிகையை அறியுமளவுக்குத் திறம் படைத்த ஒரு தொழில் நிபுணனே மக்கள் அறிய மாட்டார்கள்,

ஒரு சங்கீத, நாடக, நாட்டியக் கலைஞரை அறியு மளவுக்கு, பலருக்கும் வாழ்வு கொடுத்து நாட்டை முன்னேற்றப் பாதையில் எடுத்துச் செல்லும் ஒரு அருணசலத்தையோ, சிதம்பரத்தையோ, சிவ சைலத்தையோ நாடறிந்திருக்கவில்லை. ஆண்டு தோறும் சிலப்பதிகார மாநாடு, திருக்குறள் மாநாடு என்று கூட்டுகிறோம். நாட்டின் மூலதன மான கல்விபற்றிச் சிந்திக்க, விவாதிக்க ஆண்டு தோறும் ஒரு கல்வி மாநாடு கூட்டுகிறோமா? வேலை வாய்ப்பும், வளமும் ஊட்டும் சிறு தொழிலதி பர்களை எல்லாம் கூட்டி அவர்கள் பிரச்னைகளைப் பற்றி விவாதிக்கிறோமா? தமிழ் விஞ்ஞான மாநாடு என்று ஒன்று உண்டா? என்பதைச் சிந்தித்துப் பாருங்கள்.

நாம் ஒரு தலைப்பட்சமாக வளர்ந்துவிட்டோம். சரித்திரத்தில் சில நூற்றாண்டுகளை மதம் ஆட்சி செய்ததைப் போல, இந்த நூற்றாண்டைத் தமிழும் கலையும் ஆட்சி செய்கின்றன.

நம் நாடு எதிர்காலத்தில் வெறும் தமிழ்மொழி யாலேயே, நாட்டியத்தாலேயே, இசையாலேயே முன்னேறிவிடப் போகிறது என்று யாராவது கூற முன்வருவார்களானால், நான் வாயை மூடிக் கொள்கிறேன். நம் நாடு விஞ்ஞானத்தாலும், மொழியாலும், கல்வியாலும்தான் முன்னேற வேண்டும். அப்படியிருக்க, நாம் அதற்கேற்ற சூழ் நிலையை அமைக்க வேண்டாமா?

உதயமூர்த்தி.''

ஒரு சிந்தனாவாதி இன்னொரு சிந்தனாவாதிக்கு எழுதிய இக் கடிதம், மணியனின் 'இதயம் பேசுகிறது' முதல் பாகத்தில் 163-ஆம் பக்கத்தில் இடம் பெற்றிருக்கிறது.

டாக்டரவர்கள் தமிழ் நாட்டின் வளர்ச்சியின்மை என்ற நோயை எவ்வளவு அழகாகப் புரிந்துகொண்டிருக்கிருர்கள்.

நம் நோயே, மனேபாவக் கோளாறுதான்.

அந்த மனேபாவம் ஆரோக்கியமடைய வேண்டும் என்ருல், புது ரத்தம் போல், புதிய எண்ணங்கள் நம் மனேபாவத்துக்குள் வெள்ளமாகப் பாய்ந்து நம் சிந்தனையை வளப்படுத்தவேண்டும். நல்ல சிந்தனைகள் விளைந்தால்தான் அரிய செயல்கள் கிடைக்கும். எந்தச் சாதனைக்கும் ஆணி வேர் உயர்ந்த சிந்தனைதான்.

அந்தச் சிந்தனைக்கு உரமான எண்ணங்களை, சமன் செய்து நெறிப்படுத்தப்பட்ட சிந்தனு முறையை, டாக்டர் அவர்கள் தமிழ் காணும் நல்லுலகத்துக்கு விகடன் மூலம் அளித்தார்கள். அந்தக் கருத்துக்களின் தொகுப்பே இந்த 'எண்ணங்கள்' என்ற நூல்.

அந்த எண்ணங்கள், புதியதோர் உலகம் செய்ய தமிழகத்தின் புதுமையானதொரு பொற்காலத்தை உருவாக்க, லட்சியப் பாதையாக அமையட்டும்.

சென்னை–4 ஏ. ஸி. முத்தையா.

# என்னுரை

எனது 'எண்ணங்கள்' புத்தக வடிவில் வெளி வருகிறது என்பதில் என் மகிழ்ச்சி அளவிடற்கரியது. இந்த எண்ணங்கள் எனக்கு உதவியிருக்கின்றன. என் வாழ்வை மேம்படுத்தி இருக்கின்றன. எனக்கு வந்த நூற்றுக்கணக்கான விகடன் வாசகர் கடிதங்களிலிருந்து எனது எண்ணங்கள் எப்படி அவர்கள் வாழ்வைத் தொட்டிருக்கின்றன, ஊக்கமூட்டியிருக்கின்றன, மாற்றியிருக்கின்றன என அறிந்து பெரு மகிழ்ச்சி அடைந்தேன்.

அபிராமபுரத்திலிருந்து பெண்ணுக வாழும் ஒரு ஞானத் துறவி, கண்டியிலிருந்து ஒரு கல்லூரி மாணவி, கோவையிலிருந்து ஒரு பெரியவர், அந்தமான், மலேசியா, டெல்லி, கல்கத்தா என நாடெங்கிலுமிருந்து—தமிழ்கூறு நல்லுலகிலிருந்து—எனக்குத் தினம் கடிதங்கள் வந்த வண்ணம் இருந்தன. நான் இக்கட்டுரைகளை ஆனந்த விகடனில் எழுதிய போது, அழகர்கோயில் பெருமாள் அர்ச்சகர் முதலாக, தையற்கடைப் பணியாளர் ஈருக, ''உங்கள் எண்ணங்களைப் 'பைண்டு' செய்து வைத்திருக்கிறேன்'' என்று பலபடப் பாராட்டி, தங்கள் அன்பைத் தெரிவித்துக் கொண்டார்கள்.

அவை அனைத்தும், என் எண்ணங்கள் தூய்மை பெறவும் மேலும் ஒருபடி நான் ஆத்மிகத் துறையில் முன்னேறவும் ஆசியாக எனக்கு உதவின. நான் அவர்களுக்கெல்லாம் எப்படி நன்றி சொல்ல முடியும்?

கடந்த பதினைந்து ஆண்டுக் காலமாக மன வளர்ச்சி சம்பந்தமான பல புத்தகங்களைப் படித்தேன். சுமார் இரு நூற்றுக்கும் மேற்பட்ட புத்தகங்களை வாங்கினேன். நான் என்னைத் திருத்திக் கொள்ள எடுத்துக் கொண்ட முயற்சி

களின் முனைப்புத்தான் இது. மன தத்துவம் பற்றியும் அதீத மனம் (Para Psychology) பற்றியும், உள சிகிச்சை பற்றியும் கிடைத்த நூல்களை எல்லாம் படித்தேன். படிக்கப் படிக்க, இவை எல்லாம் பற்றித் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு இவ்வாழ்க்கையில் கிடைத்ததே என மகிழ்ந்தேன். அதீத மனம் பற்றிய படிப்பு என்னை மத சம்பந்தமான—இந்து, புத்த, கிறிஸ்துவ மத சம்பந்தமான-பரம்பொருளைப் பற்றிச் சிந்திக்கவும், அனுபவம் பெறவும் தூண்டியது. இடையில், அமெரிக்காவிலுள்ள கார்ல்டன் கல்லூரிப் புத்தகவிற்பனை நிலையத்தில் டபிள்யூ ஐ பெவரிட்ஜ் எழுதிய "விஞ்ஞான ஆய்வுக் கலை" (The Art of Scientific Investigation) என்ற புத்தகத்தைக் காண நேரிட்டது. எப்படி விஞ்ஞானிகள் ஒரு எண்ணத்தைச் செயலாக்கி மகத்தான கண்டு பிடிப்புகளைச் செய்கிறார்கள் என்பதைப் பற்றிய ஆய்வு நூல் அது. ஆங்கிலத்திலேயே அது போன்ற நூல்கள் இல்லை. எப்படி எண்ணங்களை அமைத்து விஞ்ஞானிகள் வெற்றி கண்டார்கள் என்பதையும் வெற்றிக்கு அப்படி ஓர் எண்ண அமைப்பு முறை இருக்கிறது என்பதையும் அதிலிருந்து உணர்ந்தேன். இவ்வெண்ணம் என் ஆர்வத்தைத் தூண்டியது.

நான் வேலை பார்க்கும் கல்லூரித் தலைவரிடம் இப்படி ஒரு பாடம் கல்லூரி மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுக்க (Thought Process Studies) நான் விரும்புவதாகக் கூறிய போது, அவர் அதை வரவேற்றார். இதன் பலனாக ஓர் ஐந்து ஆண்டுகள் இதை நான் பாடமாக மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுத்தேன். என் மாணவர்களில் பலர், 'இது எல்லோரும் படிக்க வேண்டிய பாடம்' எனவும், இப்பாடம் தங்களுக்குச் சொந்த வாழ்க்கையில் பெரிதும் உதவியது எனவும் கூறினார்கள். மாணவர்களது உற்சாகம் என்னை மேலும் தூண்டியது. 'எண்ண அமைப்பு முறை'தான் வெற்றிக்கு வழி வகுக்கிறது எனவும், அவரவர்களது துறை ஆர்வத்திற்கேற்ப மனிதர்கள் விஞ்ஞானிகளாகவும், ராஜ

தந்திரிகளாகவும், தொழிலதிபர்களாகவும் மாறுகிறார்கள் என்பதையும் கண்டேன்.

இந்நிலையில்தான் நான் தமிழ் நாட்டைக் கவனித்து வந்தேன். எங்கும் நம்பிக்கை இன்மையும், நொந்த உள்ளமும், அவல சிந்தனைகளும், ஆற்றாமையும் மக்களின் சிந்தனைகளை ஆட்கொண்டிருப்பதைக் கண்டேன். நமது மனோபாவமே நம் வளர்ச்சிக்குக் குறுக்கே நிற்பதாக எனக்குப் பட்டது. இது எனக்கு வேதனை தந்தது.

ஆனந்த விகடன் பொறுப்பாசிரியர் நண்பர் மணியன் அவர்களுக்கு ஒரு கடிதம் எழுதினேன். "நாட்டிற்கு இன்று புதிய உயிர், புதிய ஜீவன் தேவை. கல்கிபோல், பாரதி போல் மக்களை வீறு கொண்டெழச் செய்யும் ஒரு மனிதன் தேவை. இன்றைய தமிழ் நாட்டின் நிலை—எண்ண நிலை—மிகவும் அவலம் நிறைந்ததாயிருக்கிறது. இதை மாற்ற உதவும் சில எண்ணங்களை எழுதினால் பயன்படுமோ என்று எண்ணுகிறேன்'' என எழுதியிருந்தேன். "உங்களது எண்ணங்களைத் தமிழ் மக்களுடன் பகிர்ந்து கொள்வதில் தடை என்ன?'' என்று திரு. மணியன் எழுதியிருந்தார்.

**'எண்ணங்கள்'** தனிப்பட்ட கட்டுரைகளல்ல. தமிழ் நாட்டில் பலர் எழுதுவது போல, அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சிந்தனையில் பட்டதை எல்லாம் அவ்வப்போது எழுதிய எண்ண வெளியீடுகள் அல்ல.

**'எண்ணங்கள்'** புத்தகம் ஒரு குறிக்கோளைக் கொண்டது. அதை அடையும் வழியைப் படிப்படியாக மேலே எடுத்துக் காட்டுவது. இது ஒரு முழுமை கொண்டது.

சூரிய கதிர்களை ஒருமுகப்படுத்தும் போதுதான் அது சூடுபெற்றுத் தீயாக மாறுகிறது. அதேபோல் எண்ணங்கள் ஒருமுகப்படுத்தும் போதுதான் பயன் கிடைக்கிறது. இது ஒருமுகப்படுத்தப்பட்ட எண்ணத் தொடர்.

வாழ்வைப் பற்றிய சிந்தனையில், நான் மூன்று முக்கிய விஷயங்களைக் கண்டேன். அவைதான் வெற்றியின் அடிப்படை என்பதை அறிந்தேன். அவை: கற்பனை உள்ளம், ஆழ் மனக் கணிப்பு (இது இப்படித்தான் என்ற உணர்வு), எதிர் பாராது அமையும் சம்பவங்கள்.

எதை நாம் அடைய விரும்புகிறோமோ அதை மனத்தால் கற்பனை செய்வது நிஜவாழ்க்கையில் அது நடைபெறுவதற்கு வித்தாகிறது. எண்ணங்களையும் யோசனைகளையும் அலசி மனத்துக்குள் ஊறப்போட்டால் திடீரென நமக்கு ஒரு ஐடியாவாக, ஒரு இது இப்படித்தான் என்ற உணர்வாக, நம் பிரச்னைக்கு வழி பிறக்கிறது. மூன்றாவதாக, எதிர் பாராது தெய்வாதீனமாக அமைந்தது என்று கூறுவதெல்லாம், ஒரு தொடர்ந்த உறுதியான ஆழ்மன எண்ண ஓட்டமும் நாம் விரும்பும் காரியங்களை எதிர்பார்ப்பதும் ஆகும்.

இந்த மூன்று அம்சங்களையும் பற்றி வாசகர்கள் தீவிரமாகச் சிந்திப்பது பெரிதும் பயன்தரும். கற்பனை உள்ளம் பற்றிய அற்புதமான புத்தகம், Claude Bristol என்பார் எழுதிய "The Magic of Believing" என்ற புத்தகம்.

பிரச்னைகளுக்கு வழி காண்பதில் ஆழ்மனம் எப்படி உதவுகிறது என்பதற்கு பெவரிட்ஜ் எழுதிய Art of Scientific Investigation-ம், அதிர்ஷ்டம் எதிர்பாராது கிடைத்த சந்தர்ப்பம் (Chance) என்பதுபற்றி, ஜேம்ஸ் ஆலன் எழுதிய 'As a man thinketh' என்ற புத்தகமும் மிகச் சிறந்த புத்தகங்களாகும்.

இந்த மூலக் கருவூலங்களும், இன்னும் எத்தனையோ நூல்களும் என்னுள் நிறைந்து, என் அனுபவ உரைகல்லில் உராய்ந்து, நம் நாட்டுக் கலாச்சாரம், சரித்திரம் என்ற பின்னணியில் முளைத்து வெளிவந்த காய்கறிச் செடிகளே, பழமுதிர் சோலைகளே என் 'எண்ணங்கள்.'

படியுங்கள், அடிக்கடி படியுங்கள், சிந்தியுங்கள். மந்திரம் என்பதெல்லாம் நம் மனத்தை நம்ப வைப்பது தான். நம் மனம் நம்பும்போது அங்கே அசாதாரண சக்தி பிறக்கிறது. அசாதாரண சக்தி அங்கிருந்து புறப்படுகிறது.

எனது கட்டுரைகளின் முதல் ரசிகையான இனிய எண்ணங்களை, குணங்களாக வாழ்ந்து காட்டும் என் மனைவிக்கு, என் புத்தகம் வெளிவரும் இந்நேரத்தில், முதலில் நான் நன்றி சொல்ல வேண்டும். காரில் செல்லும் போதெல்லாம் அது எப்படி, இது எப்படி என்று எண்ண அமைப்பு முறைபற்றிக் கேட்டு என்னை மகிழ்வித்துத் தானும் பயன் பெற்ற என் மகன் சித்தார்த்தனுக்கும், நடப்பனவற்றை எல்லாம் நன்கு புரிந்துகொண்டு அதில் தானே ஈடுபட்டு, எண்ண அமைப்பு முறைப் பள்ளியில் பேசிப் பரிசுகள் பெற்ற என் மகன் அசோகனுக்கும், இதை யெல்லாம் புரிந்து கொள்ளத் தேவையே இல்லாத என் மகள் கமலாவுக்கும் நான் நன்றி சொல்லவேண்டும். அவர்களுடன் செலவழித் திருக்கக் கூடிய நேரத்தை, அவர்களுக்குப் பயன்பட்டிருக்கக் கூடிய நேரத்தை, நான் சிந்தனையிலும் எழுதுவதிலும் செல விட்டேன். அவர்கள் காட்டிய பொறுமைக்கும் அன்பு.

'வாழ்க்கையின் பேருண்மை எது?' என்று அடிக்கடி நான் சிந்திப்பதுண்டு. வாழ்க்கையே, 'நல்லெண்ணம்' என்ற ஒரு சொற்றொடரில் அடங்கி விடுவதாக நான் எண்ணுகிறேன்.

சி. உதயமூர்த்தி

ஆசிரியர்

## வாழ்க்கைக் குறிப்பு

டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி தஞ்சை மாவட்டத்தில் விளநகரில் பிறந்தவர். அண்ணமலைப் பல்கலைக் கழகத்தில் ரசாயனத் துறையில் எம்.ஏ. பட்டமும், சென்னைப் பல்கலைக் கழகத்தில் எம்.எஸ்ஸி. பட்டமும் பெற்றபின், அமெரிக்கா சென்று, விஸ்கான்சின் பல்கலைக் கழகத்தில் 1966-ல் மருத்துவ ரசாயனத்துறையில் .டாக்டர் பட்டம் பெற்றார். இன்று அவர் விஸ்கான்சின் மாநிலத்தில் மவுண்ட் செனரியோ கல்லூரியின் விஞ்ஞானத் தலைவராகப் பணிபுரிகிறார்.

அவர், தமிழில் பல பத்திரிகைகளிலும் இருபதுக்கு மேற்பட்ட கதைகள் எழுதியிருக்கிறார். அவர் தினமணி கதிரில் எழுதிய விஞ்ஞானக் கட்டுரைகள் புத்தகங்களாக வெளிவந்திருக்கின்றன. 'தமிழகத்தின் கனிவளம்', 'உலகு சூழ் பெருங்கடல்' என்ற புத்தகங்களின் ஆசிரியர் அவர். அவர் ஆனந்த விகடனில் எழுதிய கட்டுரைகள் குறிப்பிடத்தக்கவை. 1962-இல் தமிழகத்து விஞ்ஞானிகளைப் பற்றியும், 1972-இல் தமிழ் நாடு எங்கே செல்கிறது என்ற கட்டுரைத் தொடரையும் பின் 1974-ல் எண்ணங்கள் பற்றிய மனோதத்துவக் கட்டுரைகளையும், 1975-இல் தலைவன் என்ற தலைப்பில் கட்டுரைகளும் அவர் எழுதியிருக்கிறார். தமிழ் நாட்டின்மீது அக்கறை கொண்டவர்.

# காணிக்கை

அறிவுக் கூர்மையைப்பற்றி எண்ணும் போதெல்லாம் என் தாயின் நினைவுதான் எனக்கு வரும். அதேபோல அன்பையும், உயர் பண்புகளையும் பற்றி எண்ணும்போது என் தந்தையைப்பற்றிய எண்ணங்கள் ஓடும்.

என்னை ஆளாக்கிவிட்ட என் பெற்றோரின் திருவடிகளில் இந்நூலைக் காணிக்கையாக்குகிறேன்.

சி. உதயமூர்த்தி

15

# எண்ணங்களே, வருக!

நாட்டு நடப்பை நான் அரசியலாக, சமுதாய வளர்ச்சியாகப் பார்ப்பதில்லை; அதை மனித எண்ணங்களின் கூட்டுச் சக்தியாகப் பார்ப்பதுண்டு. சமுதாயம் என்பது பல மனிதர்களின் கூட்டு, எண்ணச்சக்தி என்று நான் யோசிப்பதுண்டு. மனித எண்ணங்களைப் பற்றிய சிந்தனைதான் இந்தக் கட்டுரை. மனித மனத்தைப் பற்றி அறியும் நோக்கில் எழுந்தவைதான் இந்த எழுத்துக்கள். "சரியான எண்ணங்களை வளர்த்து விட்டால் சரியானபடி சிந்திக்கத் துவங்கிவிட்டால் வாழ்வு மகிழ்வுடன் அமையும்; வெற்றியால் நிறையும், சாதனைகளால் சிறக்கும்" என்ற கொள்கையில் பிறந்ததுதான் இக்கட்டுரை.

இக்கட்டுரை எழுதத் தூண்டுகோலாயிருந்தவை இரண்டு விஷயங்கள்.

ஒன்று ;எப்படி வாழ்வது, பிரச்னைகளை எப்படிச் சமாளிப்பது, எப்படிச் சரியான முடிவுகளை எடுப்பது, சிந்திப்பது என்பன போன்ற அறிவெல்லாம் பள்ளிகளில் போதிக்கப்படுவதில்லை. அவற்றைப் பெற்றோர்களும் சொல்லிக் கொடுப்பதில்லை. எல்லோரும் சிறிது சிறிதாக, அங்கொன்றும் இங்கொன்றுமாக, போகப் போகத் தாங்களே கஷ்டப்பட்டு உலகம் என்ற பள்ளியில் கற்றுக்கொண்டு வாழ்க்கையில் முன்னேறுகிறார்கள். ஆனால், இது வாழ்க்கைக்கு மிகமிகத் தேவையான அறிவு.

இரண்டாவது: இன்று நாட்டைச் சுற்றி ஓர் அவல மனநிலை சூழ்ந்திருப்பதைக் காண்கிறேன். இருள் பரவுவதைப் போல, மக்கள் மனத்தில் எண்ண மேகங்கள் மூடியிருப்பதை உணர்கிறேன்.

விலைவாசி உயர்வு, மக்கள் தொகைப் பெருக்கம், வேலையில்லாத் திண்டாட்டம், உணவுத் தட்டுப்பாடு என்று பல பிரச்னைகள் நம்மை மோதுகின்றன. பொருள் சம்பந்தமான இவ்விஷயங்கள் பெரிய விஷயங்களல்ல. ஏனெனில் இவை புற விஷயங்கள். இவற்றைப் பொருள் வளத்தினால் மாற்றிவிடலாம்.

ஆனால், மக்கள் மனநிலைதான் கவலை உண்டாக்கு கிறது. ஒரு பக்கம் லஞ்சம், ஊழல், அதிகாரம் என்று நேர்மையிலிருந்து நழுவிய மனநிலை; மறுபக்கம் மனத் தில் நம்பிக்கையற்ற கைவிடப்பட்ட சோகம்; இவற்றி லிருந்து தப்பிக்க, மறக்க, மக்கள் சினிமா, நாடகம், கலை என்று ஈடுபடும் நிலை—இவை எல்லாம் அறிகுறி கள்; நோய் கொண்ட மனத்தின் புற அடையாளங்கள்.

இன்று எங்கு பார்த்தாலும் ஒரு நொந்தநிலை—அழத் தயாராயிருக்கும் ஒரு பக்குவம்—கையாலாகாத் தனத்தின் எதிரொலிகளைக் கேட்கிறோம். மக்கள் எங்கோ நோக்குகிறார்கள்; யாரையோ எதிர்பார்க் கிறார்கள். அது மனிதனை அல்ல—தலைவனை அல்ல.

மனிதனின் ஆத்மா அழுகிறது.

'ஏன் இந்த நிலை! என்ன நேர்ந்தது நம் சமுதாயத் திற்கு?' என்ற கேள்விகள் நம் இதயத்தில் பெரியதாக—கவலைக்குறியாக—வளர்கின்றன.

பாவம் செய்துவிட்ட சமுதாயம் என்றோ, கடவு ளால் நிராகரிக்கப்பட்ட மக்கள் நாம் என்றோ, தலை

வர்கள் தவறிவிட்டார்கள் என்றோ உலகின் கடைசி நாள் வந்துவிட்டது என்றோ நம்பினால், நம் பிரச்னைகள் முடிந்துவிடும். ஆனால் அது ஒரு சமாதானமாக அமையுமே தவிர, எதிர்காலத்திற்கு—வாழ்க்கைக்கு வழி காட்டாது.

நம் நாடு எத்தனையோ பஞ்சங்களைக் கண்டிருக்கிறது. நம் முன்னோர் எத்தனையோ வறுமையில் வாழ்ந்திருக்கிறார்கள். பாரதி வறுமையில் வாழ்ந்தார்; பகைவனின் பார்வையில் பாண்டிச்சேரியில் வசித்தார். எனினும், எத்தனையோ நெருக்கடிகளிலும் ஒருமுறை கூட அவர் அழுது கவி பாடியதில்லை. அவர் கவிதையைப் படிக்கும்போது தெறிபபது வீரம், வீரம், வீரம். 'வயிற்றுக்குச் சோறுண்டு கண்டீர், இங்கு வாழும் மனிதருக்கெல்லாம்' என்று பாடுகிறாரே தவிர 'வயிற்றுக்கு—நாளைச் சோற்றுக்கு என்ன செய்வேன்' என்று பாடியதாகக் காணோம்.

பாரதிதாசனைப் படிக்கிறேன். அதே வீரம். 'கொலைவாளினை எட்டா, அந்தக் கொடியோர் செயல் அறவே' என்று போர் முழக்கமிடுகிறாரே தவிர' 'ஐயகோ! என் செய்வேன்! இப்படி ஒரு நிலை வந்ததே' என்று புலம்பவில்லை. சங்க காலப் பாட்டுக்களைப் படிக்கிறேன். 'வினையே ஆடவர்க்கு உயிரே' என்கிறது பாடல். 'தொழில், உழைப்பு—அதுதான் ஜீவன், உயிர்த்துடிப்பு, ஆத்ம ராகம்' என்று கூறுகிறாரே தவிர, 'அழுவதே ஆடவர்க்கு அழகு' என்று கூறவில்லை.

இத்தகைய பரம்பரை கொண்ட நாம் ஏன் இன்று இப்படி ஆகிவிட்டோம்? வறுமையைக் கண்டு புலம்பும்

நிலை, அதிகாரத்தைக் கண்டு அஞ்சும் மனேபாவம்; 'நம்மால் முடியாது' என்ற, பிச்சைக்காரர்களுக்கேற் படும் விரக்தி நிலை எண்ணவும் கூசுகிறது. இதை ஆத்ம வறுமை என்பதா? நோய் பிடித்த மனம் என்பதா? நம்பிக்கையற்ற கடைசி நிலை என்பதா?

மகத்தான ஞானிகளும், யோகிகளும் முனிபுங்க வர்களும், கலைஞர்களும், கவிஞர்களும் பிறந்த நாடு இது. கரிகாலனும், ராஜராஜனும், பாண்டியனும், செங்குட்டுவனும் தோற்றுவித்த பரம்பரை நாம். "'நீயே அது' என்ற உபநிஷத தத்துவம் கூறப்படாத அறிவுலக நூல் எதுவும் இல்லை" என்று சொல்லு மளவுக்கு நமது தத்துவம் போற்றப்படுகிறது. 'மனிதனின் எண்ணங்களே, மனிதனை உருவாக்கு கின்றன' என்ற புத்தரின் வாசகங்கள் இன்று உலக மொழிகளாகி விட்டன.

நாமோ, அத்தகைய மகத்தான எண்ணங்களின் சொந்த வீட்டுக்காரர்கள். நாமோ இன்று, அவல எண்ணங்களை வீட்டில் நிறைத்துவிட்டுக் கவலைப்படும் மனித உயிர்களாக மாறி வருகிறோம்; வறுமையைச் செயல் மூலம்—அதிக உற்பத்தி மூலம் போக்கிவிட லாம். உழைப்புத்தான் தேவை. எல்லோரது திறனை யும் பயன்படுத்துவதன் மூலம் வேலை தட்டுப் பாட்டைப் போக்கிவிடலாம். கற்பனைதான் தேவை. லஞ்ச ஊழல்களை நேர்மையான மனேபாவத்தின் மூலம் மாற்றி விடலாம்; நல்லெண்ணமும் உறுதியும்தான் தேவை!

எண்ணங்கள் விதைகள், செயல்கள் எண்ணங் களின் கனிகள். ஆகவே நாம் பயன் தரும் சிந்தனை

களை மேற்கொள்வதன் மூலம் நம் சூழ்நிலையை மாற்றி விட முடியும்.

எண்ணம்தான் எல்லாவற்றிற்கும் ஆணிவேர். எண்ணம் வலிமை மிக்கது. எண்ணம் மகத்தான சக்தி கொண்டது; மகத்தான சாதனைகளைப் புரிய வல்லது. டிரைன் என்ற தத்துவஞானி கூறினார்: "எண்ணங்களை உள்ளே விடுங்கள். முடியும் என்ற எண்ணங்களைத் திரும்பத் திரும்ப எண்ணுவதன் மூலம் மனத்தில் நம்பிக்கை பிறக்கிறது. நமது நம்பிக் கையைத் திரும்பத் திரும்பச் சிந்திக்கும்போது, அது செயலாகப் பரிணமிக்கிறது. திரும்பத் திரும்பச் செய் யும் ஒரு செயல் பழக்கமாகிறது. பல பழக்கங்கள் ஒரு மனிதன் (Character) குண நலன்களாகின்றன.

எண்ணம்—நம்பிக்கை—செயல் பழக்கம்—மனித குண நலன், எண்ணம் நம்பிக்கையாய், நம்பிக்கை செயலாய், செயல் பழக்கமாய், பழக்கம் குண நலனாய் மாறுகிறது.

முடியும் என்ற எண்ணம் கொண்ட ஒரு மனிதன் நாளடைவில் சாதனைகள் நிறைந்த பெரும் மனிதனாய் மலர்கிறான். சாதனைகள் புரியும் மனித சமுதாயம் சரித்திரத்தின் பொற்காலமாய் மலர்கிறது. எல்லாம் எண்ணங்களின் சக்தி.

# எண்ணம் ஒரு விதை

எண்ணங்களே செயல்களாகப் பரிணமிக்கின்றன. ஒரு விஷயத்தைப் பற்றித் தினமும் யோசித்துக் கொண்டிருந்தோமானால், நாம் அந்த எண்ணத்துடன் பழகத் துவங்கிவிடுவோம். நாளடைவில் அந்த எண்ணத்தில் நியாயம் இருப்பதாகப் படும். 'ஏன் செய்யக் கூடாது? என்ன தவறு?' என்ற எண்ணம் வேர் விடும்.

நல்ல எண்ணமும் அப்படித்தான்; கெட்ட எண்ணங்களும் அப்படித்தான். எண்ணம் ஒரு தீப்பொறி போல. தீப்பொறி விழுந்ததும் முதலில் கனிகிறது; பின் புகைகிறது; பின் 'ஓகோ' என்று எரிகிறது. எண்ணமும் அப்படித்தான்.

'திருடினால் என்ன?' என்று எண்ணத் துவங்கும் ஒரு மனம், நாளடைவில் திருடுவதற்கான காரணங்களைச் சொல்லிச் சமாதானப்படுத்துகிறது. பின் எப்படித் திருடுவது என்று மனிதன் திட்டமிடுகிறான். பின் எங்கே திருடுவது என்று தீர்மானிக்கிறான். நாளடைவில், திருட்டு எண்ணம் செயலைத் தூண்டுகிறது. மனிதன் திருடனாகிறான். அவன் திருடனான காரணம், புறச் சூழ்நிலைகள் அல்ல. அவன் மனம்—மனத்தில் பிறந்த ஓர் எண்ணம். ஒரு முறை திருடியவன், சிறையிலிருந்து வெளியே வந்ததும், எண்ணப் பழக்கம் மீண்டும் அவனைக் குற்றம் செய்யத் தூண்டுகிறது. எண்ணங்கள் வலிமை மிக்கவை. இதே போலத்தான் பொறாமையும், பிறர் மனை நயக்கும் பேதையர் உள்ளமும், மதுவின் போதையும். எல்லாம் எண்ணம்—எண்ணப் பழக்கம். எண்ணம் இலேசாக மனத்தில் ஊன்றி,

பழக்கத்திஞல் வலிமை பெற்று, பின் விசுவரூபமெடுக்கிறது.

''திருடன் மகன் திருட முயலும்போது அவன் என்ன நினைப்பான் என்பதை எண்ணிப் பாருங்கள்'' என்ருர் ஒருமுறை டாக்டர் மு. வ.

எண்ணத் தோட்டங்கள் — அங்கிருந்துதான் எருக்கும் கிளம்புகிறது; மல்லிகையும் மலர்கிறது.

பண்படுத்தப்படாத தோட்டத்தில் கரும்பும், காளானும், எருக்கும் முளைக்கின்றன. பண்படுத்திச் சரியான விதையிட்ட—செடி நட்ட—தோட்டத்திலிருந்து மல்லிகையும் முல்லையும் ரோஜாவும் மலர்கின்றன. எண்ணங்கள் விதைகள்; அவை காற்றில் மிதக்கின்றன. மனம் ஒரு தோட்டம். நாம்தான் தோட்டக்காரன். என்ன விதையைத் தேர்ந்தெடுக்கிருேம் என்பது, என்ன விதமான தோட்டத்தை நாம் விரும்புகிருேம் என்பதைப் பொறுத்தது.

பலர் இனிய மலர்ந்த தோட்டத்தை விரும்புவார்கள்; அதன் மணமே தனி. பலர் சுவை நிறைந்த பழத் தோட்டம் விரும்புவார்கள். அதன் ருசியே தனி. பலர் சவுக்கு மரம் பயிரிடுவார்கள்—விறகுக்கு. பலர் தேக்கும், தேவதாரும் பயிரிடுவார்கள். அவை நீண்ட நாள் வாழும், நெடிதுயர்ந்து நிற்கும் காட்சி நெஞ்சை நிறைக்கும்.

நான் பல தேக்கு, தேவதாரு மரங்களில் சுவை மிகுந்த கனிகளையும், மணம் நிறைந்த மலர்களையும், வாசம் மிகுந்த சந்தனத்தையும் கண்டிருக்கிறேன். அத்தகைய அசாதாரண அற்புதங்களை காந்தியாகவும், நேருவாகவும், பாரதியாகவும், அண்ணுவாகவும் கண்டு அதிசயித்ததுண்டு. நம்மிடையே இன்று வாழும் பல தலைவர்கள் என்னை அதிசயத்தில் ஆழ்த்தி இருக்

கிறார்கள். திருமதி இந்திரா காந்தியின் துணிச்சல், காமராஜரின் நாணயம், தொழில் மேதை சிதம்பரத்தின் திறமை, நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன் காட்டும் நாத உலகம், சிந்தையில் பதியுமுன் கமலா செதுக்கும் சிற்ப நாட்டியம், எம். எஸ். இசைக்கும் தெய்வீகம்—என் எண்ணங்கள் உணர்ச்சி வசப்படுகின்றன.

இவர்களைப் பார்க்கும்போது என் உள்ளத்தில் வியப்பும், மலைப்பும், பிரமிப்பும் ஏற்படும். அது கலைந்ததும் நான் பூமிக்கு வருவேன். இத்தகைய மகத்தான சாதனை புரியும் திறமைகளை இவர்கள் எங்கே பெற்றார்கள், எங்கே கற்றுக்கொண்டார்கள் என்று நானே கேட்டுக் கொள்வேன். சில சமயம் காந்தியின் சுய சரிதை பேசும்; நேருவின் வரலாறு கதை சொல்லும். சில சமயம் கற்பனை பேசும்.

**போ**யும் போயும் ஒரு குக்கிராமத்தில் பிறந்த இவர், பள்ளியில் தேற முடியாமல் திண்டாடிய இவர், இக்கட்டான சம்பவங்களைச் சமாளிக்க முடியாமல் திணறிய இவர், இன்று இத்தனை பெரிய தலைவராய்—மேதையாய் எப்படி ஆனார்? என்று உள்ளம் துழாவும்.

பேச்சுமேடையிலிருநதோ, கச்சேரியிலிருந்தோ சில சமயம் நினைவுகளை வீட்டுக்கு எடுத்துச் செல்வேன். சில சமயம் கல்லூரிக்குச் சென்று 'மைக்ராஸ் கோப்' பின் அடியில் வைத்துப் பார்ப்பதுண்டு. சில சமயம் எனது ரசாயன சோதனைக் கூடத்திற்கு எடுத்துச் சென்று, அவற்றைச் சோதனைக் குழாயிலிட்டுக் கலக்கிக் குலுக்கி, சூடுபடுத்தி வடிக்க முயல்வதுண்டு.

எல்லாவற்றிலும்—எல்லா மேதைகளிடமும் தலைவர்களிடமும் நான் கண்ட அணுத்துகள்—அடிப்படைத் துகள் எண்ணங்கள், எண்ணங்கள்—ஆசைகள்,

ஆசைகள்—ஒரு துடிப்பு. ஓர் ஆர்வம் வெறி, உழைப்பு. அடிப்படைத் துகள்கள் பல நிலையில் சேர்ந்து பல பொருள்களாக இப்பிரபஞ்சத்தை உண்டாக்கியிருப்பது போல, இவர்களது எண்ணங்கள் பல; கூட்டுத் தொகுப்பில் மலர்ந்து பரிணமிப்பதைக் கண்டேன்.

எண்ணங்களின் கூட்டுத் தொகுப்பு ஆசையாகவும், நம்பிக்கையாகவும், உழைப்பாகவும் மாறி 'மேதை—தலைவன்' என்று ஒளிவிடுவதை உலகில் காண்கிறோம். அத்தகையோரால் உலக சரித்திரமே மாற்றி எழுதப்படுகிறது. ஆம்! எண்ணங்கள் உலகை ஆள்கின்றன.

**க**னியைப் பார்க்கும் ஒருவன், அதன் ருசியைச் சுவைக்கிறானே தவிர, விதையைப்பற்றி எண்ணுவதில்லை. மலரை நுகரும் ஒருவன், அது வளர்ந்த விதத்தைப்பற்றி அக்கறைப்படுவதில்லை. அப்படித் தான் மேதைகளிடம் எண்ணங்களின் முடிவு நிலை கண்டு நாம் மனதைப் பறிகொடுக்கிறோம். பல சமயம் 'அதிர்ஷ்டக்காரன்' என்று நமது பொருமையைத் தெரிவித்துக் கொள்கிறோம. 'எல்லாம் அப்படி அமைந்தது அவனுக்கு' என்று கூறி நமது இயலாமையைச் சமாதானம் செய்து கொள்கிறோம்.

உண்மை இதுவல்ல.

அவன் நல்ல—சரியான எண்ணங்களை விதைத்தான், வளர்த்தான்; அறுவடை செய்கிறான். விஷயம் தெரியாதவர்கள் மனம் என்ற தோட்டத்தைப் பற்றியோ, நல்ல விதைகளின் வலிமையைப்பற்றியோ, மனத்தைப் பண்படுத்தும் முறைகளைப் பற்றியோ தெரிந்து கொண்டதில்லை; கேள்விப்பட்டதில்லை; சிந்தித்ததில்லை.

# எண்ணங்களின் வலிமை

எண்ணங்களின் சக்தி அனுபவ பூர்வமாகவும், விஞ்ஞான சோதனைகள் மூலமாகவும் நிருபிக்கப்பட்டிருக்கிறது. சில ஆண்டுகளுக்குமுன் ஓர் ஆஸ்திரேலிய விஞ்ஞானி ஆகாயத்திலிருந்த கருமேகக் கூட்டங்களை நோக்கி எண்ணங்களைச் செலுத்தினார். தம் சோதனைச் சாலையிலிருந்த வண்ணம் அந்த மேகக் கூட்டம் கலைய வேண்டும் என்று எண்ணினார். தொடர்ந்து—உணர்ச்சி வசப்பட்டு ஐந்து நிமிடங்களுக்கெல்லாம் மேகம் கலைந்தது. இதை மீண்டும் மீண்டும் செய்து காட்டினார் அவர்.

அதே போல ஒரு விஞ்ஞானி இரண்டு 'மைக்ராஸ்கோப்'பினடியில் இரு பாக்டீரியாக்களை வைத்துத் தினமும் ஒன்றின்முன் 'வளர வேண்டும், வாழவேண்டும்' என்றும், மற்றொன்றின் முன், 'அழிய வேண்டும், ஒழியவேண்டும்' என்றும் எண்ணி, திரும்பத் திரும்பக் கூறினார். சில நாளில் வளரச் சொன்னது வாழ்ந்தது; இறக்கச் சொன்னது செத்தது.

இவ்வுலகில், காரண காரியங்களின் தொடர்பை நாம் அறிவோம். ஒவ்வொரு காரியத்திற்கும் ஒரு காரணம் இருக்கிறது. ஒரு காரணம் ஒரு காரியத்தில முடிகிறது. இது உலக நியதி. அதை ஆங்கிலத்தில் cause and effect என்று கூறுவார்கள். அந்த அளவில் எண்ணம் ஒரு காரணம்; பலன் ஒரு காரியம்.

மனத்தில் கோப எண்ணங்களைக் கொள்ளுங்கள்; கோப உணர்ச்சி கிளம்புகிறது. சற்று நேரத்தில் கோபம் அடங்கும்போது நமக்கு நரம்புத் தளர்ச்சி ஏற்படுகிறது. கோப எண்ணங்கள் நம் உடல் நிலையை மாற்றி நம் சக்தியை வடித்துவிடுகின்றன. கோபமாயிருக்கும் போது நமக்குப் பசி யெடுப்பதில்லை. காரணம் கோப எண்ணங்கள்—உடலில் ரசாயன மாறுதல்களை ஏற்படுத்துகின்றன.

அதேபோல் மனதில் தவிப்பையும் பயத்தையும் கொண்ட எண்ணங்களை உலவ விடுங்கள். மனிதன் படபடப்படைகிறான். நெருக்கடியான நிலையில் இருப்பதை உணர்கிறான். நெருக்கடி நிலை உடலில் மாறுதலை உண்டு பண்ணுகிறது. முறுக்கேறிய நரம்புகள் வயிற்றில் புண்களை (Ulcer) ஏற்படுத்துகின்றன. மருத்துவர்களைக் கேளுங்கள், நெருக்கடிதான் வயிற்றுப் புண்ணுக்கு முக்கிய காரணம் என்பார்கள்.

நெருக்கடி ஒரு மனநிலை. தவிர்ப்பு, பயம் போன்ற எண்ணங்கள் உண்டாக்கி விடும் ஒரு நிலை அது. எண்ணங்களை மாற்றுங்கள். உடல் முறுக்குத் தளர்கிறது. இயல்பான நிம்மதியில் உடல் திளைக்கிறது.

இரவு வேளையில் நமது அறையில் திடீரென ஒரு புலி பாய்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். நம் குலை நடுங்குகிறது. ஆடுகிறோம்; ஓடுகிறோம்; புலி நம்மை ஒன்றும் செய்யவில்லை. எனினும், நம் பயம் நம்மை மூர்ச்சையடையச் செய்கிறது. சற்று நேரம் கழித்துப் புலி வேஷம் போட்டுக் கொண்டவன் தன் புலிச் சட்டையைக் கழற்றுகிறான் என்று வைத்துக்

கொள்ளுங்கள். நடுங்கிக் கொண்டே சிரிப்போமா? பயந்து கொண்டே திட்டுவோமா?

புலி நிஜமா, பொய்யா என்பதல்ல நமது உடல் நடுக்கத்திற்குக் காரணம். புலியைப் பற்றிய எண்ணம் —நம் மனத்தில தோன்றிய எண்ணங்கள்தான் நம்மை அலற வைக்கின்றன. உண்மையாக இருந்தாலும், பொய்யாக இருந்தாலும், எந்த எண்ணம் ஏற்படு கிறதோ அதற்கேற்ப நம் உடல் நிலை—இயக்கம்—மாறு படுகிறது. எண்ணங்களின் உண்மை—பொய்யைப் பற்றி நம் உடலுக்கு அக்கறையே இல்லை. எதுவாக இருந்தாலும் அந்த எண்ணத்திற்கேற்ப நாம் அசை கிறோம்; நடக்கிறோம். நம் வாழ்க்கை அமைகிறது.

எண்ணங்கள்தான், உணர்ச்சியாக சக்தியாக உடலில் மாறுகின்றன. எண்ணங்கள் நமது உடலின் ரசாயன அமைப்பையே மாற்றும் வல்லமை படைத் தவை.

இல்லற சுகத்தில்—ஆண் பெண் உறவில்— எண்ணங்களை மாற்றி அமைப்பதன் மூலம், அல்லது கட்டுப்படுத்துவதன் மூலம் உணர்வை, இன்பத்தை நீடிக்கலாம் என்று உள நூலார் கூறுகின்றனர்; அனுபவம் கூறுகிறது.

**சி**ல ஆண்டுகளுக்கு முன் புற்றுநோய் குணமான ஒரு பன்னிரண்டு பேரைப் பற்றிய தகவலைப் புத்தக மாக வெளியிட்டிருந்தார்கள். அவை அனைத்தும் நமது பொது அறிவுக்கும் மருத்துவர்களின் அனுபவ அறிவுக்கும அப்பாற்பட்டவை. அவற்றில் அநேக மாக எலலாவற்றிலும், நோயாளியின் மனநிலையே— நம்பிக்கையே—நோய் குணமாகக் காரணமாயிருந்திருக்

கிறது. மனிதனின் எண்ணம், நம்பிக்கையாக வேர் விடும்போது அசாதாரண சக்தி பெறுகிறது. அச் சக்தி எதைச் சாதிக்க விரும்புகிறோமோ அதைச் சாதிக்கிறது.

நமது ஊர் தீமிதியை எடுத்துக் கொள்ளுங்கள். எத்தனையோ விஞ்ஞானிகள், மேனாட்டார், ஆச்சரியத் துடனும் அதிசயத்துடனும் நம் தீமிதியைப் பற்றித் தெரிந்து கொள்ள முயன்றிருக்கின்றனர். பல கட்டுரைகள் அது பற்றி ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருக் கின்றன. மாரியம்மன் கோயில் தீமிதியில் என்ன நேரு கிறது? "மகமாயி! நீ காப்பாற்று!" என்று கூறிவிட்டு இறங்குகிறார், வேண்டுதலை நிறைவேற்றுபவர். எண்ணம்தான் நம்பிக்கையாய், சக்தியாய், அவர் உடலில் மாறுதலைத் தோற்றுவிக்கிறது. எண்ணங்கள் வலிமை கொண்டவை.

எண்ணங்களை நாம் உபயோகிக்க முடியுமா?

'முடியும்' என்கிறார்கள் மனோதத்துவ நிபுணர் கள்—உளசிகிச்சை மருத்துவர்கள். பல மருத்துவ மனைகளில் நோய்கள் உளசிகிச்சை மூலம் குணப்படுத் தப்படுகின்றன. இன்று அமெரிக்கத் துணை ஜனாதி பதியாயிருக்கும் ஜெர்ரி போர்டு* பலமுறை மன மருத்துவர்களிடம் சென்று சிந்தனைகளைச் சீர்படுத்திக் கொண்டு வந்திருக்கிறார்; எண்ணங்களை மாற்றுவதன் மூலம், ஆராய்வதன் மூலம், நெருக்கடி குறைகிறது என்கிறார் அவர்.

எமிலிகூ என்றொரு பிரெஞ்சு மனநோய் நிபுணர் இருந்தார். "நீ நன்றாயிருக்கிறாய். உன் உடல் குண

* பின்னர் ஜனாதிபதியானவர்.

மடைகிறது. உன் உடலில் அபிவிருத்தி தோன்று கிறது. முன்னைப்போல் ஓடுகிறாய்—விளையாடுகிறாய்'' என்று சொல்வதன் மூலம் பல நோய்களை அவர் குணப்படுத்தினார். நமக்கு நாமே எண்ணங்களைச் சொல்லிக் கொள்வதன் மூலம் (Auto suggestion) நாம் வளர முடியும், நிறைவு காண முடியும், முன்னேற முடியும், என்று காட்டியிருக்கிறார் அவர். அவரது திட்டப்படி, 'நான் ஒவ்வொரு நாளும் எல்லா வகை யிலும் முன்னைவிடச் சிறந்து வருவதை உணர்கிறேன்' என்று தினமும் படுக்கம்போகுமுன் நம் மனத்திற்குள் சொல்லிக் கொள்வதாகும். இந்த எண்ணங்கள் பயனளித்திருக்கின்றன! இந்த வார்த்தைகளை உண்மை யிலேயே உணர்ந்து, நம்பி அனுபவித்துச் சொல்லும் போதுதான் பலன் ஏற்படுகிறது. வெறும் எந்திரம் போல் ஒப்பிப்பது ஒரு பலனையும் தருவதில்லை!

இதையெல்லாம் பார்க்கும்போது, நமது பிரார்த் தனைகள், வேண்டுகோள்கள் எப்படிப் பலன் தருகின்றன என்பது விளங்குகிறதல்லவா? எல்லாம் எண்ணங்கள்தான்! எண்ணங்கள் மகத்தான சக்தி கொண்டவை. நினைத்ததை முடிப்பவை!

# ஞானிகளின் எண்ண நிலை

சில மேதைகளும் தலைவர்களும் என்னை அதிசயத்திலாழ்த்தியது உண்மை. ஆனால், பல சமயம் சில சாதாரண மக்கள் என்னை வியக்க வைத்திருக்கிறார்கள். மனித வளர்ச்சி, உயர் பதவியிலிருந்து எடை போடப்படுவதல்ல.

எத்தனை முறை நமது கிராமத்துப் பெரியவர்கள் நம்மைச் சிந்திக்க வைக்கிறார்கள். நகரவாசம் இருபதாம் நூற்றாண்டு நாகரிகம் என்று ஏதும் பரவாத கிராமத்தில், சலவைச் சட்டைக்கும் மெருகேறிய பூட்சுக்கும் மதிப்பில்லாத ஊரின் பெரியவர், தமது சாந்தத்தினால், கனிவினால், இனிமையினால், அனுபவத்தினால், தமது உறுதியினால், எத்தனை முறை நம்மை வியக்கச் செய்திருக்கிறார். நாணயம் என்பது ஒரு மனிதரைத் தட்டிப் பார்த்து உணர்வதல்ல. 'இத்தனை நாள் எப்படி வாழ்ந்து வந்திருக்கிறார்' என்ற வாழ்க்கைப் பேரேட்டின் தொகுதியைத்தான் நாணயம் என்கிறோம். 'திருடக்கூடாது, பொய் சொல்லக்கூடாது, ஏமாற்றக் கூடாது, சொன்ன வார்த்தையைக் காப்பாற்ற வேண்டும்' என்ற எண்ணங்களே வாழ்க்கைப் பேரேடாக மலர்ந்திருக்கின்றன. அவர்கள் பணம், புகழ், அதிகாரம் என்று எதையும் நாடாமல், ஒரு நிறைந்த வாழ்க்கையை வாழ்ந்து வருபவர்கள் அவர்கள். தங்களது குணநலன்களில் நமது தலைவர்களுக்கும் மேதைகளுக்கும் எந்தவிதத்திலும் குறைந்தவர்களல்ல. எண்ணங்களுக்கு ஏற்ப வாழ்க்கை மலர்கிறது; அவ்வளவுதான்.

சில பெரியவர்கள் வரும்போது அவர்களுடன் ஒரு பெருந்தன்மை வருவதைக் கண்டிருக்கிறீர்களா? சில நண்பர்கள் வரும்போது ஒரு கலகலப்பும் சிரிப்பும் அவர்களுடன் தொடர்ந்து வருவதைப் பார்த்திருக்கிறீர்களா? ஆனால் மற்றுஞ் சிலர் கடுகடுப்பையும் வெறுப்பையும் கொண்டு வருகிறார்கள். சிலர் சோகத்தையும், சிலர் நமது உற்சாகத்தை அடியோடு போக்கி விடும் ஓர் இருளையும் சுமந்து வருகிறார்கள்.

இது எப்படி நேருகிறது? சிலர் மகிழ்ச்சிக் கதிர்களையும், சிலர் வெறுப்புக் கதிர்களையும் அவர்களறியாமல் பரவவிடுகிறார்களா? ஆம். அதுதான் உண்மை. நம் எண்ணங்கள் எப்படியோ அப்படித்தான் நாம் ஆகிறோம். நாம் எப்படி ஆகிறோமோ அப்படிப்பட்ட எண்ண அலைகள்தான் நம்மிடமிருந்து உற்பத்தியாகிறது, பரவுகிறது. எந்த விஞ்ஞானிகளும் இதுவரை இக்கதிர்களை நிர்ணயிக்கவில்லை. நமது மூளையை ஊடுருவும் கதிர்கள் நியுட்ரினோ என்பவை. அவை ஒரு வேளை எண்ணச் சக்தியைச் சுமக்கும் கருவியாக—ஒளியாக இருக்கலாம் என்று அபிப்பிராயப்படுகிறார்கள் விஞ்ஞானிகள். மனிதனைச் சுற்றி ஒருவகை ஒளி இருக்கிறது என்றும், அந்த ஒளிக்கு நீலம், மஞ்சள், சிவப்பு, ஊதா, கறுப்பு என்று நிறமிருப்பதாகவும், அந்த நிறங்கள் நமது உணர்ச்சிக்கு ஏற்ப மாறுபடுவதாயும் சில சோதனைகள் மூலம் மனோதத்துவ நிபுணர்கள் கண்டு பிடித்திருக்கிறார்கள்.

விஞ்ஞானிகள் கண்டு பிடிக்கட்டும்; பிடிக்காமல் போகட்டும். மனிதன் தன் மனநிலையை, எண்ணங்களின் சக்தியைப் பரவவிடுகிறான் என்பதும், சிலர் மகிழ்ச்சியையும் சிலர் துக்கத்தையும் சோகத்தையும்

பரவ விடுகிறார்கள் என்பதும் நாம் அனுபவத்தில் காணும் உண்மை.

சில யோகிகள் முன், ஞானிகள் முன் நின்றிருக்கிறீர்களா? அது ஓர் அனுபவம். துரதிர்ஷ்டவசமாக நமது நாட்டில் அவலை நினைத்து உரலை இடித்த கதையாக, மூடநம்பிக்கைகளை ஒழிக்கப்போய் நமது ஞானிகளையும், யோகிகளையும், தவமுனிவர்களையும் புரிந்து கொள்ள முடியாத தடையாகப் பகுத்தறிவு திரையிட்டு நிற்கிறது. ஒரு சமயம் அறிஞர் அண்ணாதுரையுடன் இதுபற்றிப் பேசினேன். அவர் நமது ஞானிகளைப் பற்றிப் பேசியது என் உள்ளத்தைத் தொட்டது. அண்ணாவின் ஆசிவேண்டும் நமது ஞானிகளுக்கு என்பதில்லை, இதை எழுதுவதன் நோக்கம். எத்தனை பெரிய அறிவுக் கடலாகவும் அதே சமயத்தில் அடக்கத்தின் வடிவமாகவும் அவர் இருந்தாரென்பதை அறிந்து வியந்தேன்! பகுத்தறிவு காரண காரியம் காட்டும்—அறிவு. காரண காரியத்திற்கு அப்பால்—நம் புலனுக்கப்பால் இருக்கும் அறிவை எல்லாம் பற்றி இன்று நிறைய ஆராய்ச்சிகள் நடத்தப்படுகின்றன. இன்றைய பௌதிகவிஞ்ஞானிகளின் விஞ்ஞான ஆராய்ச்சி நம்மை வேறு உலகிற்கே அழைத்துச் செல்கிறது. அவற்றைப் படிக்கும்போது மனிதமனம் கற்பனை செய்திராத புதிய புதிய வைரச் சுரங்கங்களுள் இறங்குவது போலவும், பிரபஞ்ச வெளியில் பறப்பது போலவும் நமக்கு உணர்ச்சிகள்—அனுபவங்கள் ஏற்படுகின்றன. (Arthur Koestler எழுதிய Roots of coincidence என்னும் புத்தகத்தைப் படித்துப் பாருங்கள்).

அமெரிக்காவின் ஜீவன், இது ஒரு நடைமுறை உலகை உணர்ந்த நாடு என்பதாகும்; செயல் முறையில்

பலன் அளிக்கும் சிந்தனை மிகுந்தோர் நாடு என்பதாகும்; காரண காரியங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்துப் பிரச்னைகளுக்கு முடிவு காணும் நாடு இது.

ஆனால் இப்போது, மனித மனத்தில் ஒரு பகுதிதான் நினைவு அறிவு என்றும் அந்தப் பகுதியில் இயங்குவதுதான் காரண காரிய, தர்க்க வாதம் பகுத்தறிவு என்றும், விஞ்ஞானிகளும் மன நூலாரும் கண்டுபிடித்திருககின்றனர். இதற்கப்பால் நினைவுக்கு அப்பாற்பட்ட பணம், பிரபஞ்சத்துடன் இணைந்துள்ள மனம் இருக்கிறது என்று கூறுகிறார்கள். இதெல்லாம் எவ்வளவு உண்மை, இதெல்லாம் எப்படி நமது அனுபவத்தின் மூலம் நாம் அறிய முடியும் என்பதை எல்லாம் பின்னால் தனியே கவனிப்போம.

யோகிகளும், ஞானிகளும் இப் பிரபஞ்ச அறிவுடன் இப்பிரபஞ்ச சக்தியுடன் தொடர்பு கொண்டவர்கள்; தொடர்பு கொள்ளும் முறையை அறிந்தவர்கள்.

ரமண மகரிஷி முன் நின்ற இங்கிலாந்து பத்திரிகை நிருபர் பால் பிரண்டன் கூறுகிறார்: "என் மனத்தில் ஓர் அமைதி பிறந்தது. ஒரு நிறைவு ஏற்பட்டது. ஒரு மகிழ்வு பொங்கி வழிந்தது. நாங்கள் பேசிக்கொள்ளவில்லை. எல்லாவற்றையும் உணர்ந்தவர் முன்னிலையில் நிற்கிறோம் என்பதை என்னால் உணர முடிந்தது.

ஒரு நம்பிக்கை, அமைதி, மகிழ்வு, நிறைவு பரவுகிறது ஞானிகளின் முன்னிலையில். எங்கிருந்து வருகிறது இது? ஞானிகளின் அன்பும், கருணையும் தான் சக்தி நிலையில் நம்மை ஊடுருவுகின்றன. ஞானிகள் எண்ணங்களின் வடிவம். எண்ண சக்திகளின் உறைவிடம். எண்ண சக்திகளின் கதிர்வீச்சு.

ஏதோ பிராம்மணர்கள் ஆடும் நாடகம் என்றனர் என் பகுத்தறிவுவாத நண்பர்கள், ரமணரைப் பற்றி. ஆகவே நான், அவரைச் சந்தேகத்துடனும் இனிய நகைப்புடனுமே நோக்கி வந்தேன். அவர் இறந்து போனதும், ஒரு சமயம் கல்லூரி 'பிக்னிக்'கின் போது கல்லூரி பஸ்ஸை அங்கே நிறுத்தினர்கள்; ரமணர் அப்போது இல்லை. ஆனல் அவர் வாழ்ந்த அறை இருந்தது; ஆசிரமம் இருந்தது. அவர் அறைக்குள் நுழைந்தபோது பால்பிரண்டன் வருணித்த அதே உணர்ச்சியை நானும் உணர்ந்தேன். பேச முடியாத பேரின்பநிலை என்கிறுர்களே, அதன் பொருளை என்னல் உணர முடிந்தது. அவர் இறந்துவிட்டதாக என்னல் கொள்ள முடியவில்லை. அவரது கனிவும், கருணையும், அன்பும் அறிவும் எண்ணங்களாக அங்கே மிதப்பதை —நம்மை ஊடுருவுவதை—நான் உணர்ந்தேன்.

அடுத்து நமது ஞானிகள்—தவயோகிகளின் அருட் பார்வைக்காக ஏங்கிய நாட்கள் பல. எனது அமெரிக்க நண்பர்களுடன் இந்தியா வந்தபோது, காஞ்சியில் சென்று காமகோடி சங்கராச்சாரியார் சுவாமிகளை— பெரியவர்களைப் பார்த்தோம். என் உணர்வுகளைச் சொல்லுமுன் எனது அமெரிக்க நண்பர்களது செயலை விளக்குவதே போதுமானதாகும். என் உணர்வுக்கு நான் வருமுன், என்னுடன் வந்த சகோதரி—கிருஸ்துவ கன்னி மாதாவும், மற்றைய அமெரிக்க நண்பர்களும் அவர்முன்—அந்த ஞானப்பழத்தின்முன்—கருணையின் வடிவத்தின்முன்-கீழே விழுந்து நமஸ்கரித்துக்கொண் டிருப்பதைக் கண்டேன். கனிவு எனும் எண்ண சக்தி எங்களை ஊடுருவிக் கொண்டிருந்தது.

# எண்ணமும் இயங்கும் சக்தியும்

நமது தமிழ்ப் பாட்டு சொல்கிறது: 'நல்லார் ஒருவர் உளரேல், அவர் பொருட்டு எல்லோருக்கும் பெய்யும் மழை' என்று. நமது நாட்டு யோகிகளும் ரமணர்களும், சங்கரர்களும், ஞானசம்பந்தர்களும் தங்களுக்காக வாழ்ந்ததில்லை. துயரத்துடன் வந்தோருக்கு ஆறுதலையும், நோயுடன் துன்பப்படுபவர்களுக்கு நிவர்த்தியையும், சஞ்சலத்துடன் வருபவர்களுக்கு நிம்மதியையும் வழங்கிக்கொண்டிருந்தவர்கள் அவர்கள்.

எண்ணங்களின் சக்தி நம்மைச் சுற்றிப் பரவுகின்றன பிறரின் எண்ண சக்திக்குள் நாம் வரும்போது மாறுபாட்டை உணர்கிறோம். இந்தக் கருத்துக்களுடன், பாழடைந்த வீடுகளைப்பற்றி உலவும் பயங்கரக் கதைகளையும், விக்கிரமாதித்தனது சிம்மாசனம் புதைந்திருந்த மேட்டின்மீது அமர்ந்திருந்த மாட்டுக்காரச் சிறுவன் எப்படித் தீர்க்கமாக நியாயம் வழங்கினான் என்ற கதையையும் எண்ணிப் பாருங்கள்.

மனிதர்கள் சாகிறார்கள். ஆனால் எண்ணங்கள் சாவதில்லை. அவை காற்றில் மிதக்கின்றன.

கடந்த பத்தாண்டுகளுக்குமுன் இப்படிப்பட்ட கருத்துக்களை யாரேனும் அமெரிக்காவில் தெரிவித்தால் அவனைப் பைத்தியக்காரன் என்று எள்ளி நகையாடியிருப்பார்கள். ஏனெனில் மேற்கத்திய நாட்டு

விஞ்ஞானிகள் எதற்கும், "எங்கே ஆதாரம், எங்கே சோதனை, என்ன முடிவு கண்டாய்!'' என்று கேட்ப வர்கள். ஆனால் காலம் மாறி வருகிறது.

1920 வாக்கில், டியூக் பல்கலைக் கழகத்தில் ஜே. பி. ரைன் என்ற மனோ தத்துவ நிபுணர் மனித மனத்தின் அதீத சக்திகளைப்பற்றி முதன் முதலாகச் சோதனைகள் செய்யத் துவங்கினார். அவரது கருத்துக்களை—முடிவு களை விஞ்ஞான உலகம் ஏற்றுக் கொள்ளவில்லை. பல ஆண்டுகள்—பல சோதனைகள் என்று, அவரது கண்டு பிடிப்புகளின் விளைவாக 1960-லிருந்து பல பல்கலைக் கழகங்கள் இன்று இத்துறையில் ஆர்வம் காட்டி வருகின்றன.

அத்துடன் நமது நாட்டு யோகிகளும் இம்மாறு பாட்டுக்குக் காரணமாயிருக்கிறார்கள். நமது நாட்டி லிருந்து பல யோகிகள் இங்கு வந்து ஆசிரமங்களை ஏறபடுத்தி, தேடிவரும் சீடர்களுக்கு நமது யோகம், தவம், தியானம் பற்றிய செயல் முறைகளைப் போதித் தார்கள். இந்த ஆர்வம் விவேகானந்தர் இங்கு வந்த திலிருந்து துவங்கியது என்று கூறவேண்டும். 1920 வாக்கில் வடநாட்டிலிருந்து பரமஹம்ச யோகானந்தர் என்றொரு யோகி இங்கு வந்து நமது ஆத்மீக அறிவைப் பரப்பினார். பல ஆசிரமங்களை ஏற்படுத்தினார்.

1968ஆம் ஆண்டில் நம் நாட்டு மகரிஷி மகேஷ் யோகி இங்கு வந்தார். இவர் பௌதிகம் படித்தவர். சென்னைக்கு இவர் விஜயம் செய்தபோதுதான், அவர் கருத்துக்கள் ஒரு வடிவம் பெற்றதாக ஒரு சமயம் அவர் கூறினார். இவருக்கு வாய்த்த சீடர்கள் புகழ் பெற்றவர்கள். பீட்டில்ஸ் ஷர்லிமேக்லேன், மியாபாரோ போன்ற புகழ் பெற்ற இசையாளர்களாலும், நடிகை

களாலும், 'மகேஷ் யோகி யார்?' என்றும், அவரது தியான தத்துவம் பற்றியும் முதன் முறையாக மக்கள் டெலிவிஷன் மூலம் அறிந்து கொண்டார்கள். பின்னல் 'ஹரேகிருஷ்ண ஹரேராம்' என்ற சைதன்யரின் தத்துவம் கல்லூரிகளையும், அமெரிக்க வாழ்வையும் தொட்டது. அடுத்து இன்று பதினறு வயதான இந்தியத் துறவி பாலகுருவின் தெய்வீகக் கழகத்தின் மூலம், பல்லாயிரக்கணக்கான மக்கள் இந்தியாவின் மனத் தத்துவங்களைப் பற்றி அறிந்து கொள்கிருர்கள்.

இத்தனை நாளும் நம் யோகிகளை மந்திரக்காரர்கள் என்றும், மாயாஜால வித்தை செய்பவர்கள் என்றும் கருதி வந்த மேனடுகள், இன்று மனே தத்துவ ஆராய்ச்சி நூல்களில், நமது யோக முறைகளை 'கிழக்கத்திய மனத்தத்துவம்' என்று எழுதுகின்றன.

இந்த மகத்தான மாறுதலுக்குப் பல காரணங்கள் உண்டு. இத்தனை நாள்வரை மேனட்டு விஞ்ஞானம் நமது உடல் இயக்கங்களைப்பற்றி விவரிக்கும்போது நமது தசைகளை இயங்கு தசை என்றும், இயக்க தசை என்றும் இருபிரிவாகக் கருதின. அதாவது கை, கால், கண் முதலிய உறுப்புக்களின் இயக்கம் நமது கைக்குள் இருக்கிறது என்றும்; நமது இதயம், ரத்த ஓட்டம், நுரையீரல் முதலியவற்றின் இயக்கம்—தானே இயங்குவது என்றும; மனித இயக்கத்துக்கு அப்பாற்பட்டது என்றும் போதித்து வந்தது நாமும் இந்தியாவில் இன்று வரை இப்படித்தான் விஞ்ஞானத்தைப் போதித்து வருகிறேம்.

ஆனல், சில ஆண்டுகளுக்கு முன் நமது நாட்டிலிருந்து ராமயோகி என்பவர் இங்கு வந்தார். மென்னிங்கர் ஆராய்ச்சிக் கூடத்தில் விஞ்ஞான சோதனை

களுக்கு உட்பட அவர் இசைந்தார். விஞ்ஞானிகளின் முன்னிலையில், தமது வலது கையின் உஷ்ண நிலையை சுமார் 12 டிகிரிக்கு உயர்த்தினார். அதாவது இடது கையின் உஷ்ண நிலைக்கும் வலது கையின் உஷ்ண நிலைக்கும் சுமார் 12 டிகிரி வித்தியாசமிருந்தது. விஞ் ஞானிகள் அவரைப் பல பரிசோதனைகளுக்கு உட்படுத் தினர். தமது இதயத்தை சுமார் 17 விநாடிகள் அவர் நிறுத்திக் காட்டினார்.

எல்லாவற்றையும் மன எண்ணங்கள் மூலமும், மனக்கட்டுப்பாட்டின் மூலமும் விளைந்த யோக சாதனை களால் அவர் சாதித்தார். உடல் வளர்ச்சிக்கான யோக முறைகளை ஆசனங்கள் என்கிறோம். மனவளர்ச்சிக்கான முறைகளைத் தியானம் என்கிறோம். மனத்தின் சக்தி அபாரமானது. மகரிஷி மகேஷ் யோகி கூறினார்: "எண்ணங்கள் எங்கே பிறக்கின்றனவோ, அந்த இடத்தை நிசப்தப்படுத்தும்போது, நம்மை நாமே அறிந்துகொள்ள முடியும்" என்று.

நமது யோக சாதனைகளின் விளைவாக, விஞ் ஞானமே இன்று மாற்றி எழுதப்படுகிறது. மனிதன்—மேனாட்டு விஞ்ஞானி—இத்தனை நாள் எதை இயங்கு தசை என்று எண்ணி வந்தானோ அவை உண்மையில் இயக்கு தசைதான் என்று எண்ணும்போது, மேனாட்டு விஞ்ஞானக் கருத்துக்களே மாறுகின்றன.

இப்படி இயக்கு தசைகளைக் கட்டுப்படுத்தக் கற்றுக் கொள்வதன் மூலம் இதய நோய்களை, வயிற்றுப் புண்களை, ஈரல் நோய்களைக் குணப்படுத்த முடியும் என்று மருத்துவர் கூறுகிறார்கள்.

யோகிகள் எண்ணங்கள் மூலம்—மனத்தின் மூலம் —விஷயங்களை அணுகுகிறார்கள். இப்போது விஞ்ஞானி

கள், எண்ணங்களைக் கட்டுப்படுத்த முடியாதவர்களுக்கு, சில சோதனைகள் மூலம் இதயத்தைக் கட்டுப்படுத்தும் பயிற்சியை மனித இயல்பாக—பழக்கமாக—மாற்ற முனைந்திருக்கிறார்கள். அதன்படி சில எலிகளின் இதய ஓட்டத்தைச் சிறு கருவிகளால் குறைக்கிறார்கள். அப்படிக் குறைக்கும்போது நல்ல மகிழ்ச்சி தரும் உணவை எலிக்கு வழங்குகிறார்கள். இப்படித் திரும்பத் திரும்பச் செய்தபின், நல்ல உணவு பெறும்போது எலியின் இதயம் தானே மெதுவாகத் துடிக்கத் துவங்குகிறது. இதன் மூலம் உணவு வரும்போது இதயம் மெதுவாகத் துடிக்கவேண்டும் என்ற எண்ணம் எலியின் மனத்தில் பதிய வைக்கப்படுகிறது. பின் உணவைக் கண்டவுடன் இதயம் மெதுவாகத் துடிப்பது பழக்கமாகிவிடுகிறது.

இதே போல் மனித இதயத்தையும், வயிற்றுத் தசைகளையும், பிற இயங்கு தசைகளையும் நமது கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வருவதன் மூலம், உள்ளே ஏற்படும் நோய்களைக் குறைக்க முடியும் என்று கண்டார்கள்.

நினைவில் கொள்ளுங்கள்: நமது பழம் பெரும் யோக தத்துவங்கள் இன்று கிழக்கத்திய மனத் தத்துவம் என்று பேசப்படுகின்றன; ஆராயப்படுகின்றன.

# நமது எண்ணங்கள் நமது கதிர்வீச்சு!

இந்தியாவிலும் மனம் பற்றிய ஆராய்ச்சிகள் சமீப காலத்தில் துவங்கியுள்ளன. வட நாட்டில் ஆனந்த் என்பவரும், ராமமூர்த்தி மிஸ்ரா என்பவரும் நமது யோகிகளுடன் சேர்ந்து மனம் பற்றிப் பல சோதனைகளைச் செய்து வருகிறார்கள்.

சென்னையிலோ, தமிழ் நாட்டிலோ இத்தகைய ஆராய்ச்சிகள் ஏதும் நடப்பதாகத் தெரியவில்லை. சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு முன் டாக்டர் பால் பிரண்டன் என்ற பிரிட்டிஷ்காரர் யோகிகளைத் தேடி அகில இந்தியாவிலும் சுற்றியபோது, முடிவில் அவர் தமிழ் நாட்டுக்குத்தான் வந்தார். தமிழகம் எப்படி கலைக்கும், இசைக்கும் கோவில்களுக்கும் இந்தியாவின் உறைவிடமாகத் திகழ்கிறதோ, அதேபோல் ஆத்மிகத் துறையில், பால் பிரண்டன் வந்தபோது ரமணம்தான் தீப ஒளியாகத் திகழ்ந்தது.

நமது மனத் தத்துவம் பழமையானது; நமது ஞானிகள் போற்றற்குரியவர்கள்; நமது வணக்கத்திற்கு உரியவர்கள். இந்திய மக்களாகிய நாம் போற்றுபவர்கள்; புகழ்பவர்கள். நல்ல விஷயங்களைப் பயில்பவர்களல்ல.

எப்படிக் கடந்த இருபத்தைந்து ஆண்டுகளில் மேனுடுகளில் விஞ்ஞானம் மெதுவாக இறங்கி, பலனுக்கு அப்பாற்பட்ட அறிவை ஒப்புக்கொள்ளத் துவங்கியிருக்கிறதோ, அதேபோல் தமிழ நாட்டில் மூட நம்பிக்கையிலிருந்து விடுபடும் இயக்கம் பகுத்

தறிவு வாதமாக வளர்ந்து மலர்ந்திருக்கிறது. அங்கே ஒப்புக் கொள்ளத் துவங்கும் நிலை; இங்கே நமது ஊரில் ஒப்புக் கொள்ளத் தயங்கும் நிலை. ஏன் அங்கே ஒப்புக் கொள்ளத் துவங்குகிறார்கள் என்பதை விஞ்ஞான பூர்வமாகப் பார்த்தால், நமது தயக்கம் தெளிவு பெறும்.

எண்ண சக்தியை எப்படி ஆதாரபூர்வமாக நிருபித் திருக்கிறார்கள் என்று கவனிப்போம்.

அமெரிக்க உளவுத்துறையில் பேக்ஸ்டர் என்பவர் பாலிகிராப் (Polygraph) எனப்படும் கருவியை உளவுத் தகவல் தருபவர்கள் உண்மை சொல்கிறார்களா, பொய் சொல்கிறார்களா என்பதை அறிய உபயோகித்து வந் தார். அவர் வேலையிலிருந்து ஓய்வு பெற்றதும், ஒரு நாள் வாடியிருந்த செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றப் போனார். தண்ணீர் ஊற்றுவதன் மூலம் செடிகளில் மின்சாரம் பரவுவது அதிகரிக்கும்—மின்சாரத் தடங் கல்கள் (Resistance) குறையும் என்று எதிர்பார்த்து, செடியின் இலையை பாலிகிராப் கருவியுடன் இணைத்தார்.

ஆனால், அவர் எதிர்பார்த்ததற்கு மாறாக செடி மனிதர்களைப் போல தண்ணீர் பெற்ற நிறைவை—ஒரு தாகந்தீர்ந்த உணர்வை—ஒரு நிம்மதியை வெளிப்படுத் தியது. இந்த அனுபவம் அவரை மேலும் பல சோதனை களைச் செய்யத் தூண்டியது.

செடியின் இலையை எரிக்க எண்ணினார். மனிதர் கள், ஆபத்து வரும்போது எப்படி நடந்து கொள்வார் களோ, அதே போலச் செடி இயங்கத் துவங்கியது. இதில் ஆச்சரியம் என்னவென்றால், அவர் இலையை எரிக்கவில்லை. எரிக்கும் எண்ணம், அவர் மனத்தில் எழுந்த ஒரு விநாடிப் பிரிவில், பாலிகிராப் கருவி

பயத்தை—ஆபத்தைத் தெரியப்படுத்தியது. வேறு வார்த்தைகளில் சொன்னுல் டிரசினு (Dracena) என்ற அந்தச் செடி, அவர் எண்ணங்களை உடனடியாக உணர்ந்தது. இது 1966-இல் நடந்தது. அதிலிருந்து அவர் பல சோதனைகள் செய்தார்.

ஒரு சமயம் அவருடைய ஆராய்ச்சிக் கூடத்திற்கு கனடா தேசத்து விஞ்ஞானி விஜயம் செய்தார். அவர் உள்ளே நுழைந்ததும் அங்கிருந்த எல்லாச் செடிகளும் மயக்கம் போட்டு விழுந்தன; அத்தகைய உணர்வை பாலிகிராப் கருவி காட்டியது. இதைக் கண்டு வியந்த பேக்ஸ்டர் தமது விருந்தாளியைப் பற்றியும் அவர் தொழிலைப் பற்றியும் விசாரித்தார். கனடா தேசத்து விஞ்ஞானி கூறினுர்: அவர் தொழிலில், செடிகளில் இருக்கும் கரி, நைட்ரஜன், தாதுப் பொருள்கள்—இவற்றின் அளவை அவர் நிர்ணயிக்க வேண்டுமென்றும், அதற்காகத் தினமும் அவர் செடிகளின் இலைகளை வறுத்து, எரித்து, சாம்பலாக்கி தமது சோதனைகளைச் செய்யவேண்டும் என்று கூறினுர். அதாவது அவர் செடிகளை—தாவரங்களைக் கொல்பவர். அதைச் செடிகள் உணர்ந்து கொண்டன. அந்த விஞ்ஞானி கனடாவிலிருந்தவரை செடிகள் பாதிக்கப்படவில்லை. அவர் அறைக்குள் நுழைந்ததும் அவை மயக்கம் போட்டு விழுந்தன. கனடா தேசத்து விஞ்ஞானி தமது 'செடி கொல்லும் உணர்ச்சி'களைப் பரவவிடுகிருரா? அந்த எண்ணங்கள் அவரைச் சூழ்ந்திருக்கின்றனவா? அப்படித்தான் செடிகள் அறிந்தன.

நமது எண்ணங்கள் செயல்களாகி, பழக்கங்களாகும்போது, நமது எண்ணங்களே நமக்கு மறந்து போயிருக்கலாம். ஆனுல் நமது எண்ணங்கள் நம்மைச் சுற்றிப் பரவுகின்றன, பிறரைப் பாதிக்கின்றன

என்பதை மட்டும் மறுக்க முடியாது. எண்ணம் ஒரு சக்தி!

'அறிவுள்ள தாவரங்கள்' என்ருெரு தாவர நூல் புத்தகம் இருக்கிறது ஆங்கிலத்தில். அதில் நமது தொட்டாற்சுருங்கிச் செடிகளைப்பற்றி எழுதியிருக்கிறது. தொட்டாற்சுருங்கிச் செடிகளை நாம் தொட்டால், உடனே அதன் இலைகள் மூடிக் கொள்ளும். ஆனால், நாம் அதை வீட்டில் வளர்த்தால்—தினம் அதை அன்புடன்—தொட்டால், தடவி வளர்த்தால்—அவை நம்மை நண்பனுக ஏற்றுக் கொள்கின்றன. நாளடைவில் நாம் தொட்டாலும் அவை சுருங்குவதில்லை. பயப்படுவதில்லை. ஆனல் யாராவது வெளியார் வந்து தொட்டாலோ அவை உடனே மூடிக்கொள்ளும்.

செடிகள் இசையைக் கேட்டு மகிழ்கின்றன; வளர்கின்றன என்ற ஆராய்ச்சியைப்பற்றி நாம் கேட்டிருக்கிறோம். ஜகதீச சந்திரபோஸ், செடிகளின் நுட்ப உணர்வைப் பற்றிப் பல சோதனைகள் செய்தார். மனிதர்கள் போல 'சாவின் தவிப்பை' அவை அனுபவிப்பதை அவர் சோதனைகள் மூலம் காட்டினுர்.

செடி கொடிச் சித்தர் லூதர் பர்பாங்க் அமெரிக்காவில் பல புதுவிதக் கலப்பு விதைகளையும் செடிகளையும் உற்பத்தி செய்தவர். அவரும் நமது நாட்டு யோகி யோகானந்தரும் நண்பர்கள். லூதர் பர்பாங்க் செடி கொடிகளுடன் பேசுவதாக அவரது நண்பர்கள் கூறியிருக்கிருர்கள்.

நாம் செடியுடன் பேச முடியுமா? இது விஷயங்களைக் கொஞ்சம் அதிகம் நீட்டிப் பேசுவதாகாதா என்று சிலர் யோசிக்கக் கூடும். 'சிலர் செடிகள் நட்டால் வளர்கிறது; சிலர் நட்டால் வளருவதில்லை' என்பதை இக்கண்ணேட்டத்தோடு சற்று சிந்தியுங்கள்.

மனத்தில் அன்பான எண்ணங்களைக் கொள்ளுங்கள். பிறகு உங்கள் நாயுடன், மாட்டுடன், குதிரையுடன் பழகிப் பாருங்கள். நம்மில் எத்தனை பேர் இந்த 'வாயில்லா சீவன்கள்' என்று நாம் அழைக்கும் இந்த உயிர்களுடன் அன்னியோன்னிய நட்புக் கொண்டிருக்கிறோம் என்பது விளங்கும்.

எண்ணம் எண்ணியவுடன் அது பலனாக நிகழ்வதில்லை. நாம் அன்பாக ஒரு முறை எண்ணிவிட்டால் சிங்கம் நம்மைச் சுற்றி நாய்போல் வந்து கொண்டிருக்கும் என்று எதிர்பார்ப்பது மடமை. எண்ணம் தேக்கப் படவேண்டும்; வளர்க்கப்பட வேண்டும்; பிறகுதான் அது வலிமை பெறும்.

பாரதியாரை எண்ணுகிறேன். "மிருகங்களின் அரசனே! கவியரசன் வந்திருக்கிறேன்" என்று·கூறி, அவர் யானையினால் மிதிபட்ட கதை என் கண்களைக் கலக்குகிறது. அந்த யானை மதம் கொண்டிருந்த யானை. நியூட்டனின் ஆராய்ச்சி முடிவுகளின்மீது மெழுகுவத்தியைத் தள்ளி அந்தத் தாள்கள் எரிய ஓர் அப்பாவி நாய் காரணமாயிருந்தது போல, நமது கவியரசின் மதிப்பை அறியும் நிலையில் இல்லாத சித்தம் பேதலித்த யானை—கேடு செய்தது.

ஆனால் யாரவன்?

"காக்கை குருவி எங்கள் ஜாதி"

என்று சொந்தங் கொண்டாடிய மாபெருங் கவி. மாபெரும் எண்ண சக்தி.

காக்கை குருவியுடன் பேச முடியாது என்று யாராவது பாரதியிடம் சொல்லிப் பாருங்கள்! "அடே மூடா!" என்றுதான் அழைத்திருப்பார். இன்று விஞ்ஞானமும் அப்படித்தான் சொல்கிறது.

# சரித்திரத்தை மாற்றிய எண்ணங்கள்

நாய்களுக்கு நமது எண்ணங்களைப் புரிந்து கொள்ளும் சக்தியிருப்பதை நீங்கள் கண்டிருக்கக் கூடும். எங்கள் வீட்டு நாய் சில சமயம் தவறு செய்து விட்டு, குற்றவாளிபோல் விழித்துக்கொண்டு என் முகத்தை நோக்கியதை நான் நினைவுகூர்கிறேன். எண்ணங்கள், நமது மனதில் உணர்ச்சிகளாகப் பதிந் திருப்பதாக உள நூலார் கூறுகின்றனர்.

எண் ணங்களை, வார்த்தைக்கு அப்பாற்பட்ட ஒரு வித சக்தி மூலம் மிருகங்கள் உணர்ந்து கொள்கின்றன. ஓர் ஊரில் நாய்களைப் பட்டியில் விட்டுவிட்டு சொந்தக் காரர்கள் வெளியூர் சென்றுர்கள். அவர்கள் திரும்பி வரும் நாளன்று பட்டியிலிருந்த நாய்கள் மிக அசாதா ரண முறையில் குரைத்ததையும், பழகியதையும் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்ததையும் பட்டிக் காவலர்கள் கண்டார்கள்.

பிளாரிடா என்ற மாநிலத்தில் டால்பின் எனப் படும் சுரு போன்ற ஒருவகை மீன்களை வளர்த்துப் பழக்கப்படுத்தி, சோதனைக்கு உபயோகித்து வந்தார் கள். ஒரு நாள் அவற்றைக் கொண்டு கடலில் விட்டு விடுவது என்றும் இனி அவை சோதனைக்குத் தேவை யில்லை என்றும் தீர்மானித்தார்கள். அன்றிலிருந்து அங்கிருந்த சில டால்பின்கள் உணவருந்த மறுத்து விட்டன. நான்கு நாட்களில் தங்களைப் பட்டினி போட்டு மாய்த்துக் கொண்டன. ஏனெனில், அவை அவ்வளவு அன்புடன் வளர்க்கப்பட்டவை. அவற்ருல் பிரிவைச் சகிக்க முடியவில்லை.

எண்ணங்கள் பிற உயிர்களிடம், வாய்ச் சொல் மூலம் மட்டும்தான் பரவுகின்றன என்பதில்லை; ஏதோ ஒரு தனிச் சக்தியாக அவை பரவுகின்றன.

விஞ்ஞானத்தில் இதுவரை மூன்று முக்கிய சக்திகள் இருப்பதாகக் கண்டு பிடித்திருக்கிறார்கள். ஒன்று புவியீர்ப்புச் சக்தி; இரண்டு, மின்காந்த சக்தி; மூன்று கருப்பொருள் சக்தி. இம் மூன்று பெருஞ் சக்திகளுக்கும் எண்ண சக்திக்கும் இதுவரை ஏதும் தொடர்பிருப்பதாகத் தெரியவில்லை. மின்காந்த சக்தி புகாத காங்கிரீட் அறைக்குள்ளிருந்து எண்ணங்களை வெளியில் அனுப்ப முடியும். புவியீர்ப்புச் சக்திக்கு அப்பால் இருந்து வானவெளி வீரர் கேப்டன் மிச்சல், எண்ணங்களைப் பூமிக்கு அனுப்பி வைத்தார். ஆகவே, எண்ண சக்தி இதுவரை அறியப்படாத ஒரு தனி வகைச் சக்தி என்றும், அவற்றை 'மைண்டான்' (Mindon) மனச் சக்தி என்றும் பெயரிட்டிருக்கிறார்கள்.

சோவியத் ரஷ்யாவில் மனம் பற்றிய ஆராய்ச்சி அதிகம் நடைபெறுகிறது. அவர்கள் மனத்தை ஒரு 'ஜீவரேடியோ' என்று அழைக்கிறார்கள். மனம் மூலம் மாஸ்கோவிலிருந்து லெனின்கிராடிற்குச் செய்தி அனுப்பினார்கள். இதைப் பற்றி அறியும்போது அமெரிக்க அரசாங்கத்திற்குக் கவலை ஏற்படுகிறது. ஏனெனில் தனது சோதனைச் சாலையில் அமர்ந்த வண்ணம் ஒரு ரஷ்ய மன விஞ்ஞானி, நிக்சனின் மனத்தில் ரஷ்யாவைப் பற்றி என்ன எண்ணங்கள் ஓடுகின்றன என்று எளிதில் அறிந்து கொள்ளக்கூடும். பிறகு மாற்றுக்கு, தன் எண்ணம் ஒன்றைச் செலுத்தி நிக்சனின் மன ஓட்டங்களை மாற்றிவிட முடியும்.

இவை எல்லாம் கற்பனை அல்ல; நாளை நிகழக் கூடியவை. இதை அறிந்து, அமெரிக்க வானவெளி

ஆராய்ச்சிக் கழகம் இது பற்றிய ஆராய்ச்சிகளில் ரகசியமாகவும் மும்முரமாகவும் ஈடுபட்டிருக்கிறது. வானவெளியில் செயற்கைச் சந்திரனைப் பறக்க விடு முன், ஒரு சமயம் ரஷ்யாவின் விஞ்ஞான முன்னேற்றம் பற்றி ஜீன் டிக்சன் என்ற அமெரிக்கப் பெண்மணி தம்மிடமுள்ள ஒரு கண்ணாடிக் கோளத்தைப் பார்த்து ஜோசியம் கூறினார். அவர் அப்படியே தத்ரூபமாகச் செயற்கைக்கோளை விவரித்தார். அதன் பலனாக மறு நாளே அவர் ஒரு ரஷ்ய உளவாளியாக இருப்பாரோ என்று சந்தேகித்து, அமெரிக்க ரகசியப் போலீசார் அவர் வீட்டுக்கு வந்துவிட்டனர். கடந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என்று எல்லாவற்றையும் பார்த்துத் தீர்க்கமாக ஜோசியம கூறும் வல்லமை படைத்த, புகழ்பெற்ற பெண்மணி திருமதி டிக்சன்.

எண்ணங்கள் மூலம் உயிரற்ற ஜடப் பொருள் களைக்கூட ஆட்டி வைக்கலாம் என்பதை விஞ்ஞானி கள் கண்கூடாகக் கண்டிருக்கின்றனர்.

யூரி கெல்லர் என்ற இஸ்ரேல்காரர் ஒரு சமயம் தமது மன எண்ணங்களை ஒருமுகப்படுத்தி ஓர் உலோகத் துண்டை வளைத்துக் காட்டினார். எண்ணங் கள் நமது உடலை மாத்திரம் பாதிப்பதில்லை; பிற உயிர் களைப் பாதிக்கும், ஊடுருவும்; ஏன், உயிரற்ற திடப் பொருள்களைக்கூட ஆட்டிப் படைக்கும் வலிமை படைத்தவை அவை. ஆகவேதான், நாம் என்றும் நல்ல எண்ணங்களைப் பரவவிடுவது நல்லது.

உண்மையிலேயே, நம்மிடம் பெரிய ஜீவ ரேடியோ இருக்கிறது. மனம் என்ற அந்த எவரேடியோ மூலம் நாம் உற்சாகத்தையும், தைரியத்தையும், மகிழ்ச் சியையும் பரப்பலாம்—நாமும் மகிழ்வுடன் இருக்கலாம்.

அல்லது நமது வானொலி மூலம் அழுகுரலை, துக்கத்தை இயலாமையைப் பரப்பிக் கொண்டிருக்கலாம். இதன் மூலம் நாமும் நொந்து, பிறரையும் நோகச் செய்யலாம். நாட்டில் ஓரிரு அழுகுரல் தலைவர்கள் இருந்தால் போதும்; எல்லாவற்றிலும் குற்றம் கண்டு வாழ்வையே நரகமாக அடித்துவிட முடியும். ஓரிரு அழுகுரல் கவிஞர்கள் இருந்தால் போதும்; வாழத் தெரியாதவன் பொது மக்களது வாழ்க்கையில் தன் சோரத்தைச் சூடேற்றி நாட்டைச் சுடுகாட்டிற்கு அழைத்துச் செல்ல லாம். ஓரிரு அழுகுரல் மதத் தலைவர்கள், ஆண்ட வனைக் காட்டிப் பயமுறுத்தி மக்களை இருளில் கொண்டு செல்ல முடியும்.

ஒரு நாடு முன்னேறுகிறதா, பின்னேறுகிறதா, தேங்கிக் கிடந்து நாற்றமெடுக்கிறதா என்பது அந்த நாட்டின் பல்வேறு துறைத் தலைவர்களையும் மக்களை யும் பொறுத்தது; அவர்கள் கொண்டிருக்கும் எண்ணங் களைப் பொறுத்தது; அங்கே நல்லவர்கள் இருக்கிறார் களா, சுயநலக்காரர்கள் இருக்கிறார்களா அல்லது சோக கீதம் பாடுபவர்கள் இருக்கிறார்களா என்பதைப் பொறுத்தது. நல்லவர்களையும் தீயவர்களையும் எடை போட்டால் யார் மிஞ்சுகிறார்கள் என்பதைப் பொறுத்தது.

மக்களின் எண்ணத் தொகுதிதான் ஒரு நாட்டின் வளர்ச்சியாக, முன்னேற்றத்திற்கு வழிகாட்டியாக இருந்திருக்கிறது; அல்லது அழிவின் அறிகுறியாக அமைகிறது.

ரோம் சாம்ராஜ்யம் அழியுமுன், அது குடிபோதை யிலும் இன்ப போதையிலும் காலங்கழித்ததைப்பற்றிச் சரித்திராசிரியர்கள் எழுதுகிறார்கள். அசோக சாம்ராஜ் யத்தின் முக்கியத்துவத்தை அங்கே அன்று நிலவிய

எண்ணங்கள் மூலம்—இன்று நாம் உணர்கிறோம். சங்க காலத்தின் சிறப்பை, அன்று பாடிய கவிஞர் களின் எண்ணங்களிலிருந்து அறிகிறோம்.

நமது நாடு மகத்தான தலைவர்களை வழங்கியிருக் கிறது. காந்தி, நேரு, பாரதி, அண்ணா என்று அவர்கள் வழங்கிய எண்ணங்கள் எல்லாம் புனிதமானவை— உயர்ந்தவை. உண்மை, நேர்மை, வீரம், இனிமை என்று எல்லாம் மகத்தான எண்ணங்கள். நாம் இதை நினைவில் கொள்ள வேண்டும். புத்தரின் எண்ணங் களால் சரித்திரம் எப்படி மாறியது என்பதை எண்ணிப் பாருங்கள். புத்தர் தம்முடன் எண்ணங்களைத் தவிர வேறு என்ன கொண்டு வந்தார் என்பதையும் சிந்தித் துப் பாருங்கள். ஏசுகிறிஸ்துவின் எண்ணங்கள் எப்படி ஐரோப்பிய சமுதாயத்தை மாற்றி அமைத்தது என்பதை எண்ணிப் பாருங்கள். ஆபிரகாம் லிங்கன், காந்தி என்று இவர்களெல்லாம் எப்படிச் சில எண்ணங் களுடன் வந்து, உலகின் சரித்திரத்தை மாற்றி அமைத்தார்கள் என்பதை யோசித்துப் பாருங்கள்.

பாடினார் பாரதி.

**தேடிச் சோறுநிதந் தின்று—பல**
**சின்னஞ் சிறுகதைகள் பேசி—மனம்**
**வாடித் துன்பமிக உழன்று—பிறர்**
**வாடப் பலசெயல்கள் செய்து—**

அத்தகைய கீழான எண்ணங்களாலா உங்கள் உள்ளம் என்ற கோயிலை நிறைக்கப் போகிறீர்கள்? இல்லை. நல்ல எண்ணங்களை உள்ளே விடுவோம். அதனால் நாமும் உயர்வோம். நாடும் உயரும்.

# லட்சியப் பாதை

மனித எண்ணங்கள்தான், அதன் முடிந்த நிலையில் இன்று வீடாகவும் மாளிகையாகவும், சாலையாகவும், விமானமாகவும், கோட்டையாகவும் கலைப்பொருளாகவும் காட்சி தருகின்றன. ஒரு காலத்தில், இவையெல்லாம் வெறும் எண்ணங்களாக, யாரோ ஒரு மனிதன் மனத்தில் தோன்றின. பின் நடைமுறை அனுபவங்களாக—சாதனைகளாக அவை உருப்பெற்றன.

எண்ணங்களை ஆசைகள் என்றும், சபலம் என்றும், லட்சியம் என்றும், குழப்பம் என்றும், குறிக்கோள் என்றும் கூறுகிறோம். அவை அனைத்தும் எண்ணங்களின் பல நிலைகளைக் குறிக்கின்றன. அவை எல்லாவற்றிலும் பொருள் பொதிந்தது 'குறிக்கோள்' தான். ஒரு குறியை அடையும், ஓர் இலக்கை நோக்கிச் செல்லும்—எண்ண நிலையிலிருந்து சாதனை நிலைக்குக் கொண்டு செல்லும் பாதையின் ஆரம்ப இடம்தான் குறிக்கோள்.

வாழ்க்கையில் நமக்கு ஓர் லட்சியம் இருக்கவேண்டும். லட்சியம் ஒரு பெரிய பிடிப்பு. வேலையிலிருந்து ஓய்வு பெறுவோர்களில் பலர் இந்த மாற்றத்திற்கு ஆளாகின்றனர். வேலையில் இருக்கும்வரை உழைக்க வேண்டும் என்ற ஒரு துடிப்பு—ஒரு லட்சியம் இருக்கிறது. அவர்களுக்கு வேலையிலிருந்து ஓய்வு பெற்றதும் அவர்கள் வாழ்க்கை வேலை முடிந்துவிட்டதாக எண்ணுகின்றனர். இப்படிப்பட்டவர்கள் வெகு விரைவில் இறந்து போகிறார்கள். இதற்கு ஆதாரம் இருக்கிறது.

அப்படிப்பட்டவர்கள் முன்கூட்டியே வாழ்வில் வேறு பல லட்சியங்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும். சமுதாயப் பணி, கல்விப்பணி, எளியவர்

களுக்கு உதவுதல் என்று வாழ்வில் ஏதாவது ஓர் அர்த்தம் இருக்க வேண்டும.

லட்சியமில்லாத வாழ்க்கை நேற்று வாங்கிய காய்கறி போல, மறுநாள் வாடி வதங்கிப் போகும். தொண்ணூறுக்கு மேல் வாழ்ந்து மறைந்த ராஜாஜி யையும் பெரியாரையும் எண்ணிப் பாருங்கள். கடைசிக் காலம்வரை அவர்களுக்குத் தெளிவு இருந்தது. கடைசிக் காலம்வரை அவர்களுக்குப் பெரும் லட்சியம் இருந்தது.

குரசாவா என்ற ஜப்பானியர் எடுத்த 'இகிரு' என்ற சினிமாவில், ஒரு மனிதர் நடைப்பிணமாக வாழ்ந்து ஓய்வு பெறுகிறார். ஓய்வு பெற்றதும், தான் வாழும் இடத்தில் பள்ளிச் சிறுவர்களுக்காக ஒரு பூங்கா அமைககவேண்டும் என்ற லட்சியம் அவர் உள்ளத்தில் பிறக்கிறது. அதன் பிறகு மனிதர் அதிசயங்களைச் சாதிக்கிறார். அதுதான் கதை.

திருமதி இந்திரா காந்தி, சிறுவயதில் பொம்மைத் துருப்புக்களை வைத்துப் போர்ப்படை விளையாட்டு விளையாடுவாராம. அத்துடன் 'பங்களாதேஷ்' விடுதலை வெற்றி என்ற பின்னால் நிகழ்நத சம்பவத்தை இணைத் துப் பாருங்கள். இங்கிலாந்தில் முன்னாள் முதல்வரா யிருந்த ஹெரால்டு வில்சன் சிறுவயதில 'நம்பர் டென், டௌனிங் தெரு'வில்—இங்கிலாநது முதல்வர் குடியிருக்கும் மாளிகைமுன் நின்று படம் எடுத்துக் கொண்டாராம்.

லட்சியங்கள் எல்லாம் மகத்தானவையாகத்தான் இருகக வேண்டுமென்பதில்லை. நமது ஊரில் சென்னை யில இருக்கும் அடையாறு புற்றுநோய் மருத்துவமனை தோன்றக் காரணமாயிருந்தது, திருமதி முத்துலட்சுமி அம்மையரின் மனத்தில் தோன்றிய ஓர் எண்ணம், வைராக்கியம், லட்சியம்.

அவ்வை அகத்திலிருந்து அண்ணுமலைப் பல்கலைக் கழகம் வரை தோன்ற ஆரம்ப காரணமாயிருந்தவை லட்சியங்கள்தாம்.

குறிக்கோள் இரு வகைப்படும். ஒன்று, நீண்ட காலக் குறிக்கோள். இரண்டாவது, குறுகிய காலக் குறிக்கோள்.

பல குறுகிய காலக் குறிக்கோள்களில் மனிதன் காணும் வெற்றி அவனுக்கு நம்பிக்கையைத் தருகிறது.

நினைவில் கொள்ளுங்கள்; மாளிகைகள் இரவோடு இரவாக எழுந்து விடுவதில்லை; ஒவ்வொரு கல்லாக அடுக்கப்பட்டுத்தான் உயர்கின்றன.

எண்ணங்கள், எப்படிச் செயல்களாக—சாதனைகளாகப் பரிணமிக்கின்றன என்று பலர் கேட்கிருர்கள். அதைத் தெரிந்துகொள்வதற்கு நாம், முதலில் மனத்தைப்பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும்.

மனத்தைப் பற்றிய விஞ்ஞான பூர்வமான அறிவு இன்னும் ஒரு முடிவான நிலைக்கு வரவில்லை. மனத்தை எடுத்து (மனம் என்பது என்ன? அதைஎப்படிஎடுப்பது) சோதனைக்குழாயில் போட்டுக் குலுக்கி, அதிலிருந்து முடிவுகளை அறிய முடியாதபடி, மனம் அமைந்திருப்பதால் கடந்த 50 ஆண்டுகளில் மேற்கத்திய மனோ தத்துவ நிபுணர்கள்; மன ஆராய்ச்சியை விட்டுவிட்டு மனிதனின் நடைமுறைப் பழக்கங்களை (Behaviour) ஆராயத் துவங்கினுர்கள். உணர்ச்சிகளின் பிரதிபலிப்பாகத்தான் மனிதன் இயங்குகிருன் என்பது அவர்கள் கொள்கை. இதன் விளைவாக, மனிதனின் அதீத மனத்தின் இயல்புகளையோ, மனித மனத்தில் எங்கு அப்படிக் கற்பனை உதயமாகிறது, எங்கு எப்படித் தீர்க்கதரிசனம் பிறக்கிறது, எப்படி மனிதனின்

உள்ளுணர்வு மனித :வாழ்க்கைக்கு உதவுகிறது என்பது பற்றியோ அதிகம் அறிவு வளரவில்லை.

மாருக, மனச்சக்திகளைப்பற்றி நமது யோகிகளும் ஜப்பான் நாட்டு 'சென்' (தியான) புத்த மத குருமார்களும், சூபீ (Sufi) எனப்படும் அரேபியநாட்டுத் தியான முறைப் பயிற்சியாளர்களும் நன்கு அறிந்திருக்கின்றனர். இங்கெல்லாம் மன அறிவு மிக வளர்ந்த நிலையில் இருக்கிறது. கிழக்கத்திய மனோதத்துவம் அனைத்திற்கும் இந்தியாவே பிறப்பிடம்; நமது யோக சாதனைகளே அவற்றின் மூலம். இன்றைய மேற்கத்திய விஞ்ஞானிகள், மறந்து கிடக்கும் நமது சாதனைகளுக்கும், மேற்கத்திய தர்க்க ரீதியான அறிவுகளுக்கும் இடையே ஒரு பாலம் கட்டி வருகின்றனர்.

இதன் விளைவாக, நமது தத்துவங்கள் நடைமுறைப் பயிற்சியாக, காரண காரியம் கொண்ட பொது அறிவாக, உலகின் முன் வைக்கப்படுகிறது.

மனத்தைப் பார்ப்போம்.

மனத்தில் மூன்று நிலைகள் இருப்பதாகத் தெரிகிறது. முதலாவது, புலனறிவு, இதுதான் காரண காரியம் காட்டும் அறிவு. பேசுவது, நடப்பது, உணர்வது, சிந்திப்பது, விவாதிப்பதுபோன்ற காரியங்கள் பலவும் இங்குதான் நிகழ்கின்றன. இவை மனித மூளையின் இடது பாகத்தில் அமைந்திருப்பதாக மூளை மருத்துவர்கள் கருதுகிறார்கள்.

இரண்டாவது: ஆழ்ந்த மன அறிவு (Subconseious) இங்கு கார் ஓட்டுதல், டைப் அடித்தல், வேஷ்டி புடவை கட்டுதல் போன்ற பழக்கங்கள், இசை, கலை கற்பனையின் பிறப்பிடம்—இவை அமைந்திருக்கின்றன. சில சமயம் திடீரென்று யோசனை பிறப்பது இங்குதான். இது நமது மூளையின் வலது பாகத்தில் அமைந்திருக்

கிறது. மனிதனை "ஹிப்னடைஸ்' செய்யும்போது அவன் பழைய கால நினைவுகள் எல்லாம் இங்கிருந்து தான் புறப்படுகின்றன.

மூன்ருவது: பிரபஞ்ச அறிவு (Universal Mind) இது எங்கே இருக்கிறது என்று மருத்துவ ரீதியில் ஒன்றும் விளங்கவில்லை. ஆனுல் இந்த அறிவு 'பிரபஞ்சத்துடன் தொடர்பு கொள்கிறது. எதிர்காலத்தையும் இறந்த காலத்தையும் இது அறிகிறது. இவ்வறிவுடன் நமது ஞானிகள் தொடர்பு கொண்டிருக்கிருர்கள். நாமும் தொடர்பு கொள்ளலாம் என்பதைத் தவிர, அதிகம் தெரியவில்லை. மூன்ருவது கண் எனப்படும் (Pineal Gland) உறுப்புக்கு அத்தகைய தொடர்பு இருக்குமோ என நினைக்கின்றனர் பலர்.

நமது புலனறிவு பிரச்னைகளை அலசுகிறது. எல்லா பழைய நினைவுகளும் அனுபவங்களும் ஆழ் மனத்தில் பதிகின்றன. ஆழ்மனம், சில சமயம் கனவு கள் மூலமும் சில சமயம் உள்ளுணர்வு மூலமும் விஷயங்களை ஆராய்ந்து, நமது புலனறிவுக்கு வழி காட்டுகிறது.

இதுவல்லாமல், சில சமயம் ஆழ்மனம் பிரபஞ்ச அறிவுடன் தொடர்பு கொண்டு, நமக்கு வழி காட்டு கிறது. ஆனுல் இதைக் கையாளும் முறை நம் வசமில்லை.

நமது லட்சியத்தைப் பற்றித் தினமும் புலனறி வின் மூலம் சிந்திப்பதனுல், அது நாளடைவில், ஆழ் மனத்தில் பதிகிறது என்றும், ஆழ்மனத்தில் பதிந்த எண்ணங்கள் எப்படியோ பிரபஞ்ச அறிவுடன் தொடர்பு கொண்டு, காரியங்களை அதற்கேற்ப அங்கங்கே அமைக்கின்றன என்றும தெரிகிறது. காரியங்கள் இப்படி அமைவதைத்தான் 'தெய்வாதீன மாக அமைந்தது' என்று நாம் கூறுகிருேம்.

# மனம் எனும் சொர்க்கவாசல்

ஹக்குயின் என்ற புத்த ஞானியிடம் ஒரு புகழ் பெற்ற ஜப்பானிய நாட்டு வீரன் தன் சந்தேகம் ஒன்றைக் கேட்டான்: "குருவே, சொர்க்கம் என்றும் நரகம் என்றும் இருப்பது உண்மைதானா?"

ஹக்குயின் அவ்வீரனை நோக்கி, "நீ யார்?" என்று கேட்டார். "நான் நமது மாண்புமிகு சக்கரவர்த்தியின் பாதுகாவலன்" என்றான் அவன். "அட முட்டாளே, உன்னைப் பார்த்தால் பிச்சைக்காரன் போலத் தெரிகிறது. எந்த ராஜா உன்னை வீரனாக வைத்துக் கொண்டார்?" என்றார் ஞானி.

வீரனுக்குக் கோபம் பொங்கியது. உடனே தன் உடைவாளை உருவினான். ஹக்குயின் கூறினார்: "ஓ! கத்தி வேறு வைத்திருக்கிறாயா? நான் பந்தயம் கட்டுகிறேன். என் தலையைக்கூட வெட்ட முடியாத அளவுக்கு அது மழுங்கியிருக்கும் என்று" என்றார். வீரனுக்குக் கோபம் பொங்கியது. உருவிய கத்தியுடன் ஹக்குயின் முன் வந்தான். "இப்போது உனக்குப் பாதி பதில் கிடைத்துவிட்டது. நீ இப்போது நரகத்தின் கதவுகளைத் திறந்துவிட்டாய்" என்றார் புத்த குரு.

வீரன் பின்வாங்கினான். உடைவாளைத் தன் உறையில் செருகினான். அவரை வணங்கினான். ஹக்குயின் சொன்னார்: "இப்போது உன் கேள்வியின் மறுபாதிக்குப் பதில் கிடைத்துவிட்டது. நீ சொர்க்கத்தின் கதவுகளைத் திறந்துவிட்டாய்."

ஜப்பானிய ஞானி ஹக்குயின் பற்றிய இச்சிறு நிகழ்ச்சி, சொர்க்கமும் நரகமும் நம்மிடம்தான் இருக்கின்றன என்பதை அழகாகத் தெளிவுபடுத்துகிறது. ஆம்! நாம்தான் சொர்க்கத்தை உண்டு பண்ணுகிறோம்; நாம்தான் நரகத்தை உருவாக்குகிறோம். சொர்க்கமும் நரகமும் நம் மனத்தில்தான் இருக்கின்றன; அவை வெளியே இல்லை. அன்பு, இனிமை, உண்மை, மலர்ச்சி, வளர்ச்சி, உதவி, ஆரோக்கியம் என்ற எண்ணங்களை உள்ளே விடும்போது, நாம் சொர்க்கத்தை உருவாக்குகிறோம். வறுமை, பாவம், பயம் என்ற நோய் கொண்ட எண்ணங்களை உள்ளே விடும்போது, நாம் நரகத்தை உருவாக்குகிறோம்.

நமது மனம் ஒரு சொர்க்கவாசல். ஆகவே நல்ல எண்ணங்களை—உயர் எண்ணங்களை—உள்ளே விடுவதன் மூலம், நமது வாழ்விலும் நாட்டு வாழ்விலும் நாம் அதிசயங்களைச் சாதிக்கலாம்.

நாம் இன்று எப்படி இருக்கிறோம், எந்த நிலையில் இருக்கிறோம் என்பது, நாம் இதுவரை நம்மைப் பற்றிக் கொண்டிருந்த எண்ணங்களின் விளைவு, நமது எண்ணங்களின் உயரமே—நமது குறிக்கோளின் உயரமே—நமது உயரம். நமது குறிக்கோள்—நமது ஆசை எவ்வளவு சிறியதாயிருக்கிறதோ, அந்த அளவிற்கு நாம் சிறுக்கிறோம்.

தாலுக்கா ஆபீசில் குமாஸ்தாவாக வேலை செய்து கொண்டு நமது எண்ணங்கள் அதை விட்டுத் தாண்டாமல் இருந்தால், நாம் ஒரு மதிப்புக்குரிய, வயதேறிய, தாலுக்கா ஆபீஸ் குமாஸ்தாவாகப் பதவி ஓய்வு பெறுவோம். அல்லது, தாலுக்கா ஆபீசில் இருந்தாலும், நாட்டைப் பற்றிச் சிந்தித்தால் எண்ணங்களை

வளரவிட்டால், ஒரு நாள் நாம் நாட்டின் தலைவராகக வளரமுடியும், உயர முடியும்.

எண்ணமே முன்னேற்றத்தின் ஆணிவேர். எண்ணம் காந்த சக்தி கொண்டது. வசீகரிக்கும் தன்மை பெற்றது. ஆகவே நமது எண்ணங்கள் அதன் விளைவுகளைப் புறச் சூழ்நிலையில் உருவாக்கும். எங்கே போக ஆசைப்படுகிறோமோ, அங்கே போக வழி பிறக்கும்; பாதை அமையும்.

வாழ்க்கை என்பது, 'உள்ளிருந்து வெளியே போகும் ஒரு செயல்' என்கிறார்கள் அறிஞர்கள். நாம் அச்செயலைப் புரிந்துகொள்ள வேண்டும். விதை முளை எப்படித் தண்ணீர் பட்டவுடன் பூரித்து முளை விடுகிறதோ, அதே போல எண்ணங்கள், மனத்திலே வளம் பெற்று வெடிக்க வேண்டும். வெளி வரவேண்டும். அதற்கு நாம் உள்ளத்தைப் பயன்படுத்த வேண்டும்.

'எண்ணங்கள்' என்னும்போது, நம் மனத்தில் ஏற்படும் பலவித எண்ணங்களையும் நாம் பொதுவாகக் குறிப்பிடுகிறோம். அவை பரவி நிற்கின்றன; 'குறிக்கோள்' என்னும்போது, நமது எண்ணங்கள் ஒரு கொள்கையைச் சுற்றி, ஓர் ஆசையைச் சுற்றிப் பின்னப்படுகின்றன. எண்ணங்களைப் பரவவிடாமல் நேர்ப்படுத்தும்போது, அது ஓர் அமைப்பை—நெறியை அடைகிறது. மனித வாழ்க்கையில் குறிக்கோள் அவசியம்.

ஊருக்குச் செல்லும் நாம் ரயில்வே நிலையத்திற்குச் சென்று, "ஐயா, ஒரு டிக்கெட் கொடுங்கள்" என்று கேட்பதில்லை. இன்ன ஊருக்குப் போகிறோம் என்ற திட்டமிருக்கிறது நம்மிடம். ஏதோ ஒரு ரயிலில் ஏறி உட்கார்ந்துகொண்டு, ஏதோ ஒரு ஊருக்குப் பயணம் செய்தவர்களை இதுவரை நாம்

கண்டதில்லை! ஆனால் நம்மில் பலரோ ஒரு திட்ட மில்லாமல் வாழ்க்கைப் பயணத்தைச் செய்கிறோம்.

நாம் நம் மனத்திற்கு ஒரு திட்டத்தை, ஒரு தெளிவை, ஒரு குறிக்கோளைக் கொடுக்க வேண்டும். மனம் ஓர் அசாதாரணமான இயக்கம். நாம் அதனிடம் ஒரு தெளிவான குறிக்கோளைக் கொடுத்து விட்டோமானால்—மனத்திற்கு உத்தரவு போட்டு விட்டோமானால்—நிச்சயம் அது நம்மை அந்த ஊருக்கு அழைத்துச் செல்லும். மனம் ஒன்றும் பொய்ப்பதில்லை; ஏமாற்றுவதில்லை.

எத்தனையோ துறைகளில் வல்லுநர்களை நீங்கள் கண்டிருப்பீர்கள். அவர்களில் யாரையாவது பார்த்து, "நீங்கள் எப்படி இவ்வளவு திறமை பெற்றீர்கள்?" என்று கேட்டுப் பார்த்தால், அவர்கள் கதை, "சின்ன வயதிலேயே எனக்கு அப்படி ஒரு ஆசை உண்டு" என்றுதான் துவங்கும்.

எண்ணங்கள் நெறிப்படுத்தப்படும்போது, ஒழுங்கு படுத்தப்படும்போது, அது குறிக்கோளாகிறது; லட்சியமாகிறது.

அமெரிக்காவில் பொதுமக்களிடம் ஒரு 'சர்வே' செய்யப்பட்டது. அதிலிருநது கிடைத்த உண்மை, அறிஞர்களை அதிர்ச்சி அடையசசெய்தது. கணக் கெடுப்பில் பதிலளித்த பாதிப்பேருக்குக் குறிக்கோள் என்று ஒன்றும் இல்லை.

கல்லூரியில் படிக்கும் மாணவர்களை இது பற்றி விசாரித்தோம். சுமார் கால் பகுதியினருக்கு ஒன்றும் குறிக்கோளோ, லட்சியமோ இல்லை. மற்றொரு கால் பகுதியினருக்கு அவர்கள் குறிக்கோள் பற்றி ஒன்றும் தெளிவு இல்லை; குழப்பமான குறிக்கோள்களைக் கொண்டிருந்தனர்.

நமது ஊரில் இப்படி ஒரு கணக்கெடுப்பு செய்தால் மிக்க பயன் தரும் தகவல்கள் கிடைக்கும். நமது ஊரில் தெருவில் போவோரை, தெரிந்தவர்களைப் பார்த்துக் கேளுங்கள். பெரும்பாலும் அவர்கள் 'என்னமோ ஓடுகிறது!' 'ஆண்டவன் படியளக்கிறான்' என்று கூறுவதைக் காணலாம். 'வாழ்க்கை ஒரு போராட்டம்' என்று சிலர் கருதுகிறார்கள். ஆனால், பெரும்பாலானவர்களோ வாழ்க்கையை ஒரு நீரோட்டமாக எண்ணுகின்றனர்.

உண்மை என்னவெனில், வாழ்க்கையை நாம் எண்ணுகிறபடி, நாம் அமைக்க முடியும்—அதற்கு வேண்டிய மன உறுதி இருந்தால், திட்டங்கள் இருந்தால், இல்லாவிட்டால் நாம் அது போகிறபடி போக வேண்டியதுதான்.

வள்ளுவர் கூறுகிறார். 'விதியைப் புறமுதுகிடச் செய்யலாம்; ஒரு குறிக்கோளை நோக்கி ஓயாது உழைத்தால்' என்று. வாழ்க்கையில் நம்பிக்கை இல்லாதவர்களுக்குக் குறிக்கோள் ஏதும் இருப்பதில்லை.

குறிக்கோள் என்பது வெறும் ஆசையல்ல. ஆசைக்குமேல் அதில் நமக்கு ஈடுபாடு இருக்கவேண்டும். நம் குறிக்கோளை நாம் வடிவரூபத்தில் காண வேண்டும். உடலால் உணர வேண்டும்; ருசிக்க வேண்டும். நுகரவேண்டும். நாம் அத்துடன் வாழவேண்டும். விவேகானந்தர் கூறினார், "நீருக்குள் அமுங்கியிருப்பவன் வெளியே வர எப்படித் துடிக்கிறானோ அத்தகைய வேகம் நமக்கு வேண்டும்" என்று. அத்தகைய துடிப்பை, குறிககோள் அடையும்போது, எண்ணங்கள் 'சித்தி'யாக, சாதனைகளாக மலர்கின்றன.

# லட்சிய தீபம்

"மனிதன் எங்கே போக விரும்புகிருனே அங்கே தான் அவனது இருப்பிடம்" என்ருர் வான் பிரான் என்ற ஜெர்மன் நாட்டு ராக்கெட் விஞ்ஞானி. வான் பிரான் ஜெர்மனியிலிருந்து அமெரிக்கா வந்தவர். இருபது ஆண்டுகளாக அமெரிக்க வானவெளித் திட்டத்தை நிர்வகித்து வருகிருர். முதல் மனிதனைச் சந்திரனுக்கு அனுப்பி வைக்கக் காரணமாயிருந்த விஞ்ஞானி அவர். சந்திர மண்டலத்தைச் சில நாள் மனித வீடாக மாற்றிய சாதனையை நிகழ்த்திய அந்த மனிதர் கூறுகிருர், 'சந்திரமண்டலத்திற்குப் போக ஆசைப்பட்டால் போய் வரலாம்' என்று.

சில ஆண்டுகளுக்கு முன்புவரை யாராவது சந்திர மண்டலத்திற்குப் போய் வரலாம் என்று கூறியிருந் தால், நாம் என்ன கூறியிருப்போம் என்று எண்ணிப் பாருங்கள். ஆனுல் கொஞ்சங் கொஞ்சமாக வான வெளியைப் பற்றியும், ராக்கெட்டைப் பற்றியும், அறிந்து கொண்டவர்களோ புதிய எண்ணம் கொண்ட னர். முடியும் என்று நம்பினர்; மனிதனை அனுப்பி வைத்தனர்.

சொல்லப் போனுல், நமது வாழ்வில் பல காரியங் களை நாம் 'முடியாது' என்று சொல்லிவிட—நம்பிவிடத் தயாராயிருக்கிறேம். நமது காரண காரியம் காட்டும், தர்க்கவாத புலனறிவை வைத்துக்கொண்டு, நாம் விஷயங்களை எடைபோடுகிறேம். 'முடியாது' என்று முன்பே முடிவு கட்டிவிட்டால், போகிற பாதையின்

முகப்பிலேயே நாம் கதவை இறுகச் சாத்தி விடுகிறோம் என்றுதான் அர்த்தம். அதற்குப் பதிலாக 'முடியும்' என்ற எண்ணத்தை லேசாக மனத்தினுள் விடுங்கள். 'பார்க்கலாம்' என்ற ஒரு மனநிலையை ஏற்படுத்துங்கள். தொடர்ந்து 'முடியும்' என்று சில நாள் எண்ணும் போது தானே வழி பிறக்கும். நமது 'முடியாது' என்ற எண்ணங்களாலேயே நம் வளர்ச்சியை நாம் தடைப் படுத்திக் கொள்கிறோம். சந்திரமண்டலத்திற்குப் போவதுகூடச் சாதனையாய் மாறியிருக்கும்போது, ஏன் நமது லட்சியங்கள் சாதனைகளாய்ச் சிறக்க முடியாது?

குறிக்கோள் அல்லது லட்சியம் என்பது நம் மனத்தில் ஒரு சங்கிலித் தொடரான எண்ணங்களை ஏற்படுத்துகிறது. மனத்தின் ஆக்க சக்திகளை வெளியே வரச் செய்து அவற்றிற்கு வேலை கொடுக்கிறது. லட்சியம் மனத்திலே வலுப்பெறப் பெற, மனத்தின் ஆக்க சக்தி செயலாக மாறுகிறது.

செய்ய விரும்புவதை வாழ்க்கையில் நாம் சாதிக்க முயலவேண்டும். ஆனால் நம்மில் எல்லோரும் 'ஆசை'ப் படுகிறோம்; அவ்வளவுதான். ஆசை என்பது பாறை மீது ஓடும் தண்ணீர் போல. தண்ணீர் உள்ளே இறங்குவதில்லை. ஆசை என்பது மேலெழுந்தவாரியான நினைப்பு; அதற்கு வலுவில்லை. காரணம் ஆசைப் படுபவனுக்கே அது நடககாது என்று தெரியும். அடி மனத்தில, அது நடக்காது என்ற எண்ணம் ஓடும் போது, எப்படி ஆசை பலன் தரும்? நமது ஊரில் சினிமா உலகின்மீதும், சினிமா நடிகைகள் மீதும் ஆசைகள் கொண்டிருக்கும் இளைஞர் கூட்டம்தான் என் கண்முன் வருகிறது. ஓர் உருதுப் பழமொழி கூறுகிறது. 'ஆசைகள் குதிரைகளானல், பிச்சைக்

காரர்கள்கூடச் சவாரி செய்வார்கள்' என்று. வெறும் ஆசையினுல் காரியம் நிறைவேறும் அற்புதம் நிகழத் துவங்கினுல், சோம்பேறிப் பிச்சைக்காரர்கள்கூட ஆனந்தமாகக் குதிரையில் போவார்கள் என்கிறது பழமொழி. ஆசையை எண்ணிச் சப்புக் கொட்டும் ஆத்மாக்கள் இதைப்பற்றி ஆழ்ந்து சிந்திக்க வேண்டும்.

ஆசைகளில் நியாயம் இருக்கும்போது, நமது ஆசைகள் பிறர் உரிமைகளேப் பாதிக்காதபோது ஆசைகளில் நமக்கு உண்மையான ஈடுபாடு நிரந்தர மாகத் துவங்கும்போது, ஆசைகள் நமது மனத்தில் திடமாக வலுப்பெறும்போது, அவை லட்சியமா கின்றன.

இதுவரை நாம் எங்கிருந்தோம், எப்படி இருந் தோம் என்பதைப் பொறுத்ததல்ல லட்சியம். நீங்கள் எப்படி வேண்டுமாஞலும் இருந்திருக்கலாம், இதுநாள் வரை. நாளேய எதிர்காலத்தில் எங்கே போக விரும்பு கிறோம் என்பதைப் பொறுத்ததே, லட்சியம். லட்சியம் தீர்மானிக்கப்பட்டு விட்டால், நாளடைவில் பாதை அமையும். பாதையில் நடக்கத் துவங்கும்போது லட்சியம் தீபமாய், ஒளியாய் வழிகாட்டும்.

மனம் ஒரு சிறு குழந்தைபோல. அதை நாம் எப்படி வேண்டுமாஞலும் வளர்க்கலாம். குழந்தைக்கு நாம் உற்சாகம் ஊட்டி வளர்ப்பதுபோல, நம் மனத் திற்கு நாம் அடிக்கடி உற்சாகம் ஊட்டவேண்டும்; ஊக்கம் தரவேண்டும்.

மனிதன் ஆரம்ப நிலைகளில் மிகப் பெரிய லட்சி யங்களே—சாதிக்க முடியாத ஆசைகளே—மனத்தில் கொள்ளக்கூடாது. ஏனெனில், பெரிய சாதனேகளேச்

சாதிக்க முடியாதபோது ஏமாற்றம் ஏற்படுகிறது. "இந்தக் காரியத்தில் நான் இந்த முறை தவறி விட்டேன்'' என்று சொல்வதற்குப் பதில், "நான் எடுக்கும் காரியம் எப்போதுமே நடப்பதில்லை; என் அதிருஷ்டம். அப்படி நான் ஒரு தோல்வியாளன்; தோல்வியை அனுபவிக்கப் பிறந்தவன்'' என்று புலம்புகிறான்.

நாம் ஓரிரு முறை தோற்றுவிட்டால், அதற்காக "நாமே ஒரு தோல்வி'' என்று எண்ணக்கூடாது. மாறாக நம் லட்சியத்திற்கு—லட்சியப் பாதைக்கு நாம் ஒளி காட்டவேண்டும், 'அடுத்த முறை வெற்றி பெறுவேன்' என்று நம்பிக்கை தரவேண்டும்.

"எளிதாகச் சாதிக்கக்கூடிய சிறிய காரியங்களைக் கொடுத்து, குழந்தைகளுக்குப் பள்ளியில் உற்சாக மூட்டுங்கள்'' என்று கூறுகிறார்கள் மனநூலார். இப்படிப் பல சிறிய சாதனைகள் மனத்தில் ஒரு பழக் கத்தை ஏற்படுத்திவிடுகின்றன. ஒரு வெற்றி மன நிலையை அது அமைத்துவிடுகிறது. இந்த அனுபவம் பின்னால் பெரிய லட்சியங்களுக்கு வழிகாட்டுகிறது.

குழந்தைகளை வளர்க்கும்போது நமக்கு வீட்டிலும் குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும்போது ஆசிரியர்களுக்குப் பள்ளிக்கூடத்திலும் எத்தனை பெரிய பொறுப்பு இருக்கிறது என்பதை எண்ணிப் பாருங்கள். "ஏ, மக்கு! நீ உருப்படமாட்டாய்'' என்று கோபப்படும் ஆசிரியர், மாணவனின் எதிர்காலத்திற்கு எத்தனை கேடு புரிகிறார் என்பதைச் சற்றுக் கவனமாகச் சிந்தித்துப் பாருங்கள்.

"என் மகளுக்கு ஒரு காரியம் உருப்படியாகச் செய்யத் தெரியாது'' என்று திட்டும் தாய், அல்லது பெருமைப்படும் தந்தை, குழந்தையின் மனத்தில்

எத்தகையதோர் எண்ண அமைப்பை உருவாக்குகிறுர் என்பதை யோசித்துப் பாருங்கள்.

குழந்தை விழுந்து விழுந்துதான் எழுந்து நடக்கக் கற்றுக் கொள்கிறது.. குழந்தை விழும்போது நாம் தூக்கி விடுகிறேம். அல்லது நடைவண்டியை உத விக்குக் கொடுக்கிறேம். ஏனெனில் நடக்கப்போகிறது. அதற்கு நாம் உதவவேண்டும் என்று நமக்குத் தெரியும். மாருக, குழநதை தனது தீர்மானங்களில் தவறு செய்யும்போது, ஏன் பலர் கரித்துக் கொட்டுகிறேம்? "போனுல் போகிறது; அடுத்த முறை இப்படிச் செய்" என்று நாம் அல்லவா ஊக்கமூட்ட வேண்டும்? உடல் அளவில் அது வளர உதவும் நாம், மன அளவில் அது வளர உதவுவதில்லே.

நான்கு முறை கணக்கைத் தவருய்ப் போட்ட வுடன், ஆசிரியர் சொல்கிறுர், "உனக்குக் கணக்கு சுட்டுப் போட்டாலும் வராது" என்று. மாணவன் நம்புகிறுன். கிராமத்திலிருந்து நாட்டியம் கற்றுக் கொள்ள வந்த சிறுமியைப் பார்த்து, "ஏன் உனக்கு நாட்டியம்? சாணியை மிதித்துக் கொண்டிருக்க வேண்டிய கால்கள், உன் கால்கள்" என்று புத்திமதி கூறிய நாட்டியாலயத் தலேவியைப் பற்றி நீங்கள் என்ன நினேக்கிறீர்கள்?

இளம் உள்ளங்களே ஊக்குவித்து உற்சாகப்படுத்த வேண்டும். மாருக அவர்களேக் கேவலமாக்கிச் சிறுமைப் படுத்துவதன் மூலம் அவர்கள் எதிர்காலத் தையே நாம் நாசமாக்குகிறேம். எதிர்காலச் சமுதாயத் தையே பாழாக்குகிறேம்.

அதே போலத்தான் நம் மனமும், நம் சிறு சாதனே களேப் பாராட்டுவதன் மூலம் நாம் வெகு தூரம் போக லாம். சிறு சாதனேகளில் ஏற்படும் வெற்றி, லட்சிய தீபமாய் நமக்கு வழி காட்டும்.

# நம்பிக்கை எனும் வழிகாட்டி

எண்ணம் மனத்தில் ஒரு கணப் பிரிவில் தோன்றி மறையும் ஒரு நிகழ்ச்சியாய் முடியலாம்; வேர் விடாத லேசான ஆசையாய்த் தோன்றி மறையலாம். எங்கும் ஆசையாய்ப் பலநாள் இருந்து கரையலாம். எண்ணம் உறுதி பெறும்போது மனத்தில் அது நம்பிக்கையாய் வேர் விடுகிறது.

நம்பிக்கைதான் நோய்களைக் குணப்படுத்துகிறது. நம்ப முடியாத காரியங்களை நடைமுறை அனுபவங்களாக மாற்றுகிறது.

ஒரு சமயம், கைகால் முடக்கப்பட்டு மருத்துவம் பெறுவோர் மனையில் தீப் பிடித்துக் கொண்டது. அங்கிருந்த நோயாளிகளில் யாரும் நடக்கக்கூடியவர்களல்ல; கைவண்டியில் செல்பவர்கள்! 'நெருப்பு' என்றதும் எல்லோரும் 'உயிர் தப்பினால் போதும்' என்று எழுந்து ஓடத் துவங்கினர். மருத்துவமனையில் இருநத இரு நோயாளிகளைத் தவிர மற்ற எல்லோரும் உயிர் தப்பினர். இத்தனை நாள் எழுந்து நிற்கக்கூட முடியாதவர்களால எப்படி எழுந்து ஓட முடிந்தது? உயிர் வாழவேண்டும் என்ற எணணம் அவர்களுக்கு மகத்தான சக்தியைக் கொடுத்திருக்கிறது. இந்தச் சக்தி இத்தனை நாளும் அவர்களுள் தானே இருந்தது! பின் ஏன் அவர்கள் எழுந்து நடமாட முடியவில்லை? காரணம்; 'நம்மால் நடக்க முடியாது' என்று 'நம்பிக்'கொண்டு இருந்து விட்டனர் அவர்கள். அவர்களது நம்பிக்கையே அவர்களைக் கைவண்டி நோயாளியாக்கியது. மருத்துவ

மனையிலிருந்து தப்பிய பலர், நாளடைவில் இயல்பாகவே நடக்கத் துவங்கி, மருத்துவ மனையிலிருந்து நீங்கினர். எண்ணம் நம்பிக்கையாக மாறும்போது அது பல அதிசயங்களை நிகழ்த்துகிறது. நம்மில் பலரும் இப்படித்தான் எண்ணங்களால் முடக்கப் பட்டுக் கிடக்கிறோம்.

1930-ல் மசாசூசெட்ஸ் என்னும் மாநிலத்தில், மால்டன் என்ற ஊரில் ஒரு கத்தோலிக்கப் பாதிரியார் இறந்து போனார். சில நாட்களில் அவரது சமாதியைத் தரிசித்தால் தீராத நோய் எல்லாம் தீர்ந்து போகும் என்ற ஒரு வதந்தி பரவத் துவங்கியது. குருடர்களும், முடவர்களும், நோயாளிகளும் ஆயிரக் கணக்கில் வந்தார்கள்; 'சமாதியைத் தரிசித்தார்கள். கழி ஊன்றி வந்தவர்கள், ஊன்றுகோலைத் தூக்கி எறிந்துவிட்டுத் தாங்கள் குணமடைந்த உற்சாகத்தைத் தெரிவித்துக் கொண்டனர். இது நிகழத் துவங்கிய முப்பது நாளில், இந்த உண்மைகளை அறியவேண்டி கத்தோலிக்க மாநில மதகுரு, சமாதியை அடைத்துப் பூட்டிவிட்டார். ஆனால், நான்கு, மாத விசாரணைக்குப் பிறகு நிகழ்ச்சிகள் உண்மை தானென்றும் அறிந்து, மீண்டும் சமாதியின் கதவுகளைத் திறந்துவிட்டார்கள்!

இதில் முக்கியமான காரணம் நோயாளிகளின் மனநிலையே; சமாதி அடைந்த சாமியார்மீது நோயாளிகள் வைத்த அசாதாரண நம்பிக்கையே நோய் குணமாகக் காரணமாயிருந்தது. மனத்தில் நம்பிக்கை பிறந்தவுடன் உடலில் ஏதோ ஓர் அதிசயம் நிகழ்கிறது. அதே போலத்தான் நமது லட்சியங்கள் நம்பிக்கையாய் மாறும்போது, சாதனைக்கான பல அதிசயங்கள் நிகழ்கின்றன.

அமெரிக்கா, விஞ்ஞான பூர்வமாக எதையும் அறியும் நாடு. இங்கும், இன்னமும் நம்பிக்கை மூலம் மக்களைக் குணப்படுத்தும் மத குருமார்கள் இருக்கத் தான் இருக்கிறார்கள். இதில் விசித்திரம் என்ன வென்றால், சில தூயவர்களிடை பல ஆஷாடபூதிகளும் உலவுவதுதான். ஆஷாடபூதிகளின் இந்த செயல் களே பல விஷயங்களில் நமது அவநம்பிக்கைக் குக் காரணமாயிருக்கின்றன.

நமது ஊரில், இப்படி நோயைக் குணமாக்கும் சாமியார்களின் சமாதிகளும், பெண்களின், குழந்தை களின் மயான உறைவிடமும், அடிக்கடி செய்திகளாக வந்து பரபரப்பை ஊட்டிய வண்ணம் இருக்கின்றன. "உண்மையிலேயே வெளிமாற்றம் ஒன்றுமில்லை. இதில் மனித நம்பிக்கையே மனித உடல் மாற்றத் திற்குக் காரணமாயிருந்திருக்கிறது. இத்தகைய சமாதிகள் நம்பிக்கைக்கு ஒரு நல்ல ஊன்றுகோலைத் தருகின்றன'' என்று சிலர் விளக்கம் தருகின்றனர்.

சில மருத்துவர்கள், தங்களால் நோயைக் கண்டு பிடிக்க முடியவில்லை என்றால், 'மருந்து' என்று சொல்லி வர்ணத் தண்ணீரையும், 'ஊசி போடுகிறேன்' என்று கூறி ஊசி மூலம் வெறும் தண்ணீரையும் செலுத்துவதுண்டு. இது மருத்துவ முறைக்கு உட் பட்ட ஒழுக்கம்தான். இப்படிக் குணமாக்குவதை மருத்துவ அகராதியில் placebo என்பார்கள். 'சரி, வைத்தியர் நல்ல மருந்து கொடுக்கிறார்' என்ற நம்பிக்கையே பல நோய்கள் குணமாகக் காரணமாய் அமைகிறது.

அமெரிக்காவில், சில மனதத்துவ நிபுணர்கள் அமெரிக்க இந்தியர்களது 'குணமாக்கும் சடங்கு முறை'யைப் பல ஆண்டு அவர்களுடன் வாழ்ந்து பழகி அறிந்தனர். "நோயாளியின் மனத்தில், பலவித

சடங்குகள் மூலம் நம்பிக்கை ஏற்றுவதே நோய் குண மாகக் காரணமாயிருக்கிறது'' என்று அவர்கள் தங்கள் முடிவுகளை வெளியிட்டனர்.

மூன்று நண்பர்கள், தங்களது நண்பன் ஒருவன் மீது செய்த விளையாட்டைப் பற்றிய கதையை நீங்கள் கேள்விப்பட்டிருக்கக் கூடும்.

நல்ல மன நிலையுடனும் உடல் நிலையுடனும் அலுவலகத்திற்குச் செல்லப் புறப்பட்ட ஒருவனை, அவன் நண்பன் பார்த்து, "என்ன வந்தது உனக்கு? ஏன் இப்படி நோயாளிபோல் தோன்றுகிறாய்?'' என்றான். அடுத்த நண்பன் தற்செயலாகச் சந்திப்பது போல் அடுத்த தெருவில் அவனை நிறுத்தி, அவனது உடல் நிலையைப் பற்றிக் குறிப்பிட்டு, தன் அனு தாபங்களைத் தெரிவித்துவிட்டுச் சென்றான். மூன்று மவன் அலுவலகத்தில் அவனைச் சந்தித்து, "என்ன நேர்ந்தது உனக்கு?'' என்று அலறினன். மனிதன் உண்மையிலேயே அங்கு கிடந்த சோபாவில் சாய்ந்து விட்டான். அவனை மருத்துவமனைக்கு அழைத்துச் சென்றார்கள்! இதுதான் கதை.

ஆனால் இது கதையல்ல. உண்மையிலேயே பலர் 'என்னல் முடியாது' என்று நம்பிக்கையில் ஊறிப் போய் நோய்வாய்ப்பட்டு வாழ்க்கையைக் கழிக் கின்றனர். 'முடியாது' என்ற மனத்தை நம்ப வைத் திருக்கின்றனர்.

திடமான எண்ணங்களை உள்ளே விடுங்கள். உற்சாகம், ஊக்கம் என்னும் ஒளியைத் தூண்டி விடுங்கள். நம்பிக்கை திருவண்ணாமலைத் தீபமாய், விடிவெள்ளியாய் உள்ளே சுடர் விடட்டும். உங்கள் லட்சியப் பாதையில் அது உங்களை அழைத்துச் செல்லும்.

# எண்ணங்களை அடைகாத்தவர்கள்

ஆழ்ந்த நம்பிக்கைதான் வேண்டுகோளாக, பிரார்த்தனையாக வெளிப்படுகிறது. காரியங்கள் நிகழ்வதில் நம்பிக்கை எவ்வளவு முக்கிய காரணமாயிருக்கிறது என்பதை இப்போது மனநூலார் அறியத் துவங்கியுள்ளனர். எண்ணம் நம்பிக்கையாக வேர் விடும்போது அது மந்திர சக்தி பெறுகிறது. எந்த முடிவை நமது நம்பிக்கை எதிர்பார்த்ததோ அந்த முடிவைக் கொண்டு வரும்வரை அது சும்மா இருப்பதில்லை.

பலருடைய வாழ்க்கைச் சம்பவங்கள் இதற்கு எடுத்துக்காட்டாக இருக்கின்றன; இரண்டாம் உலக மகாயுத்த சமயத்தில் காப்டன் ரிக்கன் பேக்கரும் அவருடைய எட்டு உதவியாளர்களும் பசிபிக் கடலில் சிறிய படகில் திசை தப்பித் தத்தளித்தனர். சாப்பிட உணவு இல்லை; குடிக்கத் தண்ணீர் இல்லை; வழியோ தெரியவில்லை. அவர்களிடம் இருந்தது சிறிய பைபிள் புத்தகம். ஆகவே அவர்கள் அதைத் திறந்து, 'தண்ணீருக்கு எங்கே போவேன், சாப்பிட என்ன செய்வேன் என்று கவலைப்படாதே' என்ற மாத்யூவின் வாசகங்களைப் படித்தனர். படித்த ஒரு கண நேரத்தில் ஓர் அதிசயம் நிகழ்ந்தது. எங்கிருந்தோ ஒரு கடல்புறா காப்டனின் தலைமீது அமர்ந்தது. காப்டன் அதை எளிதாகப் பிடித்து அனைவருக்கும் அதை உணவாக வழங்கினார். மீண்டும் அரை மணியில் வானம் கறுத்து இடியுடன் மழை பெய்தது. அவர்கள் குடிக்க நல்ல தண்ணீர் கிடைத்தது.

அவர்களுக்கு இப்போது தாங்கள் பிழைத்துக்கொள்ளப் போகிறோம் என்ற நம்பிக்கை பிறந்தது. சில நாட்களில் இவர்கள் படகைப் பாதுகாப்பு விமானங்கள் கண்டுபிடித்தன. அவர்கள் காப்பாற்றப்பட்டனர். இந்த ரிக்கன் பேக்கரின் சம்பவம், ஒரு நடந்த உண்மைச் சம்பவம். அமெரிக்கா பூராவிலும், ரிக்கன் பேக்கரோடு உடன் இருந்த மற்ற ஏழு நபர்களின் சாட்சியத்துடன் இச்செய்தி வெளியாகியது; எங்கும் பேசப்பட்டது.

படிப்பதற்கு ஏதோ கதைபோல இருக்கும் இச் சம்பவங்களைப் பற்றிப் பலர் கண் சிமிட்டுவது உண்டு. ஏனெனில் அவரவர் வாழ்க்கையில் இப்படிப்பட்டதொரு நெருக்கடியும் இக்கட்டும் நேர்ந்து, அதன் விளைவாக, அனுபவம் ஏற்பட்டால் ஒழிய நாம் பிறர் அனுபவங்களை வெறும் கதையாக எண்ண விரும்புகிறோம்.

இப்படிப்பட்டவர்களுக்கென்றே மனோதத்துவ நிபுணர் ஆட்லர் ஒரு கதை கூறுவதுண்டு. ஒரு வாளியில், கறந்த பாலில் இரு தவளைகள் தவறி விழுந்தன. ஒரு தவளை எண்ணியது: 'நான் செத்தேன்; எப்படி இதிலிருந்து மீளப் போகிறேன்?' என்று புலம்பியது. உடனே அதன் கையும் காலும் சக்தி இழந்தன; சற்று நேரத்திற்கெல்லாம் அது முழுகிச் செத்தது.

இரண்டாவது தவளையோ 'இதிலிருந்து நான் எப்படியாவது தப்பவேண்டும்' என்று எண்ணிக் கையையும் காலையும் உதைத்துக் கொண்டது. இப்படி உதைத்துக் கொண்டதில் சற்று நேரத்தில் பால் நன்றாகக் கடையப்பட்ட நிலையை அடைந்து, அதிலிருந்து வெண்ணெய் மிதக்கத் துவங்கியது. சற்று நேரத்தில் அந்தத் தவளை மிதந்த வெண்ணெயின்மீது சௌகரியமாக உட்கார்ந்து கொண்டது.

எல்லாவற்றிற்கும் நம்பிக்கைதான் காரணம். நம்பிக்கை திடமாக இருக்கும்போது வழி தானே பிறக்கும்.

குறிக்கோள்களும், லட்சியங்களும் மனிதன் பிறந்த உடனேயே அவனுடன் தோன்றி விடுவதல்ல. ஐந்து வயதில் பள்ளிக்குப் போகும்போதோ பள்ளிப் படிப்பை முடிக்கும்போதோ—திருமணம் செய்து கொள்ளும் போதோ—அது உருவாவதில்லை. லட்சியங்களை எந்த வயதிலும் கொள்ளலாம். வயது ஒரு பொருட்டல்ல.

மனித லட்சியம் நமது சூழ்நிலைக்கு ஏற்ப மாறும்; சில சமயம் வளரும். ஒரு லட்சியத்தை முன் வைத்து ஒரு தொழிலில், ஒரு துறையில் இறங்கும்போதுதான் நமக்குப் புதிய புதிய வழிகள் தோன்றும். அவ்வப் போது தெரியும் காட்சிகளுக்கேற்ப மனிதன் இலட்சியங் களைப் பெரிதுபடுத்திக் கொள்கிறான்; மாற்றிக் கொள் கிறான்; பஞ்சாயத்து போர்டு தேர்தலில் இறங்கும் போதுதான், அடுத்த முறை சட்ட மன்றத்திற்கோ நாடாளுமன்றத்திற்கோ நின்றால் என்ன என்ற எண்ணம் பிறக்கும். ஒரு சிறு கதை எழுதும்போது தான், சினிமாவுக்குக் கதை எழுதினால் என்ன என்று தோன்றும்.

லட்சியங்களை அடிக்கடி மாற்றிக் கொண்டே இருப்பவர்கள எந்த ஊருக்கும் போவதில்லை. அவர்கள் நம்பிக்கையில்லாதவர்கள், அவசரப் பிரயாணிகள்.

லட்சியமும் நம்பிக்கையும் கொண்டோரே சரித்திர புருஷர்களாகத் திகழ்கின்றனர். மனித உருவிலோ, நிறத்திலோ, வயதிலோ, படிப்பிலோ, ஏதும் இல்லை. மனிதர்கள் அவர்கள் கொண்டிருக்கும் எண்ணங் களுக்கேற்ப வாழ்கின்றனர்; லட்சியங்களுக்கேற்ப உயர்கின்றனர்.

ஐ. பி. எம். எனப்படும் அமெரிக்காவின் கம்ப்யூட்டர் கம்பெனியின் தலைவர் வாட்சன், தம் மேஜைமீது 'சிந்தி' என்றொரு வாசகத்தை வைத்திருக்கிறார். 'மனிதர்கள் சிந்திக்க வேண்டும், இயந்திரங்கள் வேலை செய்ய வேண்டும்' என்பதுதான் அவர்கள் கம்பெனியின் வாசகம். புதிய புதிய பொருட்களை உற்பத்தி செய்யும் ஒரு டல்லஸ் நகரத்துத் தொழிலதிபரைச் சந்திக்கச் சென்றேன். அவர் மேஜைமீது, 'சற்று கனவு காணு' என்ற வாசகம் என்னை நோக்கிக் கொண்டிருந்தது.

நமது ஊரிலே, சிறிய வயதிலே, ஒரு மோட்டார் சைக்கிளைக் கண்டு மோகித்த துரைசாமி (ஜி. டி. நாயுடு)வின் மனத்திலே ஓடிய எண்ண அலைகளையும், அது நம்பிக்கையாய் ஊறிச் செயல்பட்ட வரலாற்றையும் எண்ணிப் பாருங்கள். தானே பத்திரிக்கை அடித்து அதைத் தெருவில் விற்ற சீனிவாசன் (ஜெமினி வாசன்) என்ற இளைஞனின் நம்பிக்கையைக் கொஞ்சம் எண்ணிப் பாருங்கள். காரைக்குடியில் இருந்த ஒரு நாடகக் கொட்டகையை சினிமா ஸ்டுடியோவாக்கி அங்கே படம் எடுக்கத் துவங்கிய திரு. ஏ. வி. எம்.மின் நம்பிக்கையைக் கொஞ்சம் கவனத்தில் கொண்டு வாருங்கள். 'அவர்களுக்கெல்லாம் வாழ்க்கையில் ஒரு குறிக்கோள் இருந்தது, அந்தக் குறிக்கோளில் அவர்களுக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தது' என்பது புரியும்.

நமது லட்சியம் என்ன, ஆசை என்ன, குறிக்கோள் என்ன, என்று நம்மை நாமே கேட்டுக்கொள்ள வேண்டும். எங்கே போக விரும்புகிறோம்; எப்போது போய் அடைய விரும்புகிறோம் என்பதில் ஒரு தெளிவு வேண்டும்.

மனித வளர்ச்சி பற்றியும் முன்னேற்றம் பற்றியும் பல நூல்கள் எழுதிய அறிஞர்கள் கூறுகிறார்கள்: "தனி அறையில் உட்கார்ந்து கொள்ளுங்கள்; வரிசைக் கிரமமாக உங்கள் லட்சியங்களை ஒரு தாளில் எழுதுங்கள். அதில் எது முக்கியம், எது முக்கியமில்லை என்பதைப்பற்றி யோசியுங்கள். நீண்டகாலத் திட்டம், குறுகிய காலத் திட்டம் என்ற லட்சியத்தைப் பகுத்துக் கொள்ளுங்கள்.

"எழுதும்போது எண்ணங்கள், தெளிவடைகின்றன. பின் உங்கள் லட்சியத்தை உங்கள் கண்படும் இடத்தில் வையுங்கள். தினம் அதைப் பற்றிச் சிறிது நேரம் சிந்தியுங்கள். உங்கள் ஆசையைப் பிரார்த்தனையாக்குங்கள். அப்போது எண்ணம் புலனறிவு நிலையிலிருந்து ஆழ்மனத்தில் பதியத் துவங்குகிறது ஆழ்மனத்தில் பதியத் துவங்கியதும், எண்ணம் நம்மை அறியாமல் நம்மைச் செயல்படுத்துகிறது. நம்மைச் செயல்படுத்தச் செய்வது மட்டுமல்ல, பிற மனிதர்களையும் சம்பவங்களையும் நமது லட்சியத்திற்கு ஏற்பக் கொண்டு அமைகிறது."

நெருக்கடியிலும், நோயிலும் இன்னல்களின் போதும் இந்த நம்பிக்கைதான் மனிதனுக்கு வழி காட்டுகிறது.

"நீங்கள் கூறுவது நியாயமாகப் படுகிறது. ஆனால் இது எப்படிச் சாத்தியமாகும்?" என்று தன் சந்தேகத்தை எழுப்பினான் சீடன். "பெட்டைக் கோழியைப் போய்க் கேள்" என்றார் ஞானி. பெட்டைக்கோழி சொல்லிற்று: "நான் என்ன கண்டேன்? முட்டையிட்டவுடன் நான் அதன்மீது உட்கார்ந்து அடை காப்பேன், அவ்வளவுதான், குஞ்சு தானே வெளிவரும். முட்டைக்குள் குஞ்சு எப்படி உருவாகிறது என்ற விஞ்ஞான உண்மைகள் எல்லாம நான் என்ன கண்டேன்? நீ வேண்டுமானால் அடைகாத்துப் பாரேன்" என்றது. "விஞ்ஞான உண்மைகளைத் தெரிந்து கொண்டுதான் அடை காப்பேன் என்றால் அதற்குள் முட்டைகள் அழுகிவிடுமடா முட்டாள்" என்றார் ஞானி.

# எண்ணம் பெறும் வடிவம்

சாதனைகளை நிகழ்த்துவது எப்படி? விரும்பிய காரியங்களை அடைவது எப்படி? இதற்கு ஓர் 'எண்ண முறை,' 'சிந்தனை முறை' இருக்கிறதா என்று பலரும் கேட்கிறார்கள்.

ஆம். ஓர் எண்ணமுறை இருக்கிறது. அதைப் படிப்படியாக உபயோகிப்பதன் மூலம் நம் விருப்பங்களைச் சாதனைகளாக்க முடியும். இம்முறை பலரால் உபயோகிக்கப் பட்டிருக்கிறது. சாதனையாளர்களின் அனுபவமும் இதற்குச சாட்சி கூறுகிறது. கனடா தேசத்து மூளை மருத்துவர் டாக்டர் பென்ஃபில்டு (Wilder Penfield) என்பவரின் சோதனைகள் இம்முறைகளுக்கு ஒரு விஞ்ஞான ஆதாரத்தைக் கொடுத்திருக்கின்றன. மூளையில் அவர் நிகழ்த்திய சோதனைகள்; மனத்தைப் பற்றியும் வெற்றியடையும மார்க்கத்திற்கு மனம் எப்படி வழி வகுக்கிறது என்பது பற்றியும், பல உண்மைகளை நமக்குத் தெரிவிக்கிறது.

நமது எண்ணங்கள் எப்படி நம் மனத்தில் உருவாகின்றன என்பதுபற்றி என்றுவது சிந்தித்திருக்கிறீர்களா? சிந்தித்தால் ஓர் உண்மை புலப்படும். நமது எண்ணங்கள், டைப்ரட்டரில் அச்சடிக்கப்படும் எழுத்துக்கோவையாக நம் மனத்தில் தோன்றுவதில்லை. எண்ணங்கள் மனத்தில் படங்களாக விரிகின்றன. டைப்ரைட்டர் என்று படிக்கும்போது நமது மனம் சட்டென்று அந்த உருவத்தை, வடிவத்தை, அத்துடன் தொடர்பு கொண்டுள்ள மேஜை, அலுவலகம் போன்ற

வற்றைத்தான் உடனடியாகப் படமாகக் காண்கிறது. மற்றும் சிலர் மனத்தில், டைப் அடிக்கும் மங்கையே தோன்றக் கூடும். கல், மண், மேஜை, பெண் என்னும் போது நாம் ஒரு வடிவம் கொண்ட பொருளை எண்ணு கிறோம். அப்படி இல்லாது வடிவமற்ற 'பரம்பொருள்' என்ற எண்ணம் தோன்றும்போது, நம் மனத்தில் என்ன எண்ணம் ஏற்படுகிறது? நாம் அறிந்தவகையில் 'பரம்பொருளை' கற்பனையில் காண்கிறோம். இரண்டும் இரண்டும் நான்கு என்ற ஒரு கூட்டலை எண்ணும் போதுகூட, மனத்தில் அந்த எண்களின் படம்தான் உருவாகிறது. இதுதான் மனத்தின் அடிப்படை உண்மை. எண்ணங்கள் மனத்தில் படரூபத்தில் கற்பனையில் விரிகின்றன.

புதிய கட்டடம் கட்டுமுன், அதன் அளவுகளைக் கட்டட நிபுணர்கள் படம் வரைகிறார்கள். அதற்குமுன் அக்கட்டட அமைப்பு—நிபுணர்களின் கற்பனையில் உருவாகிறது, தெரிகிறது. எழுத்தாளர்களைக் கேட் டால் கூறுவார்கள், அவர்களது கற்பனை எப்படி இயங்குகிறது என்று. கதாநாயகர்களுடனும், கதா நாயகிகளுடனும் தாங்கள் பேசுவதையும், சிரிப்பதை யும், ஓடுவதையும் பற்றி அவர்கள் கதை கதையாகக் கூறுவார்கள். பாரதியின் 'தீர்க்க தரிசனம்' பற்றிப் பேசுகிறோம். விடுதலை வருமுன்னே, தம் கற்பனையில் 'பட்டொளி வீசிப் பறக்கும் கொடியினையும் கம்பத்தின் கீழ் நிற்கும் வீரர்'களையும் அவன் கண்டான். நேருவுக்குச் சுதந்திர இந்தியாவைப் பற்றிய கனவு தீர்க்க தரிசனம் இருந்தது. இன்று நாம் காணும் ஒவ் வொரு பொருளும் ஒரு காலத்தில யாரோ ஒருவரது மனத்தில் வெறும் கற்பனையாய் இருந்தது. பின்னொரு நாளில் அவை உண்மை வடிவம் பெற்றன.

மகத்தான விஞ்ஞானி எடிசன் கூறுகிறார்: "நான் எதையும் வார்த்தைகளாகச் சிந்திப்பதில்லை. எல்லாவற்றையும் படமாகத்தான் பார்க்கிறேன்" என்று. "கற்பனைதான் உலகை ஆள்கிறது" என்றான் நெப்போலியன்; இரவு பூராவும் உட்கார்ந்து பிரெஞ்சு நாட்டுப் படத்தை வைத்துக்கொண்டு துருப்புகளை அங்கும் இங்கும் நகர்த்திக்கொண்டிருப்பானும் நெப்போலியன். அவனது கற்பனைகளே பின்னால் சரித்திரமாக மாறின. ஹென்றிகெய்சர் என்ற அமெரிக்காவின் பிரபல தொழிலதிபர் கூறினார்: "உன் எதிர்காலத்தை நீ விற்பனை செய்து கொள்ளலாம்" என்று. இவ்வளவு எளிதாக எதிர்காலம் இருக்கும்போது, நாம் ஏன் கற்பனை செய்ய மறுக்கிறோம்?

நம்மில் பலருக்குக் கற்பனையைப் பற்றிய இவ்வுண்மை தெரியாது.

நம்மில் பலருக்கு நம் கற்பனையில் ஒரு படத்தை நிரந்தரமாக வைக்க முடிவதில்லை; மன எண்ணங்களை நமது சமயக்குரவர்கள் ஒரு குரங்குக்கு ஒப்பிட்டார்கள். மனத்தில, எண்ணங்கள் தாவிக்கொண்டே இருக்குமாம். எண்ணம் தாவும்போது, அது ஒருமுகப்படுவதில்லை. ஒருமுகப்படுத்தாத எண்ணம்-நெறிப்படுத்தாத மனம்—எதையும் சாதிப்பதில்லை. மனக் கண்ணாடியில் ஒரு நிரந்தரமான படத்தை வைக்கும் போதுதான், அது கற்பனை என்ற முதல் இடத்திலிருந்து 'நம்பிக்கை' 'உண்மை' என்ற இரண்டாவது கட்டத்திற்கு மாறுகிறது. அதாவது, நமது புலனறிவிலிருந்து ஆழ்மனம என்ற பதவிக்குப் (Conscious to Sub-Conscious) போகிறது. ஆழ்மனப் பகுதிக்குப் போகும் எண்ணங்கள் அசாதாரண வலிமையை அடைகின்றன.

நமது வேண்டுகோள்கள், பிரார்த்தனைகள் பலனளிப்பது இம்முறையில்தான். நாம் நமக்கு வேண்டியதைப்பற்றித் தினமும் வேண்டிக் கொள்கிறோம்; தினமும் பிரார்த்திக்கிறோம். வேண்டுகோள் என்பது திரும்பத் திரும்ப நாம் ஆண்டவனிடம் கூறுவதாகும் அல்லது மனத்திற்குக் கூறுவதாகும். திரும்பத் திரும்ப நம் வேண்டுகோளைக் கற்பனையில் காண்பதாகும். இப்படிச் செய்யும்போது நாம் காணும் கற்பனை ஆழ் மனத்தில் பதிகிறது.

ஆழ்மனம் நமது கட்டுப்பாட்டில் முழுவதும் இல்லை. சில சமயம் பழைய நினைவுகளை நமது ஆழ் மனத்திலிருந்து நம் நினைவுக்குக் கொண்டுவர முடியும். சில சமயம் கொண்டுவர முடியாது. ஆனால் நமது நினைவு-அறிவில், ஒன்றை சதா எண்ணுவதன் மூலம் அந்த எண்ணத்தை ஆழ்மனத்திற்கு எடுத்துச் செல்ல முடியும்.

ஆழ்மனத்தில் நாம் இதுவரை அனுபவித்த உணர்ச்சிகள் எல்லாம் படமாகப் பதிந்திருக்கின்றன. வேறு வார்த்தைகளில் சொன்னால் நமது வாழ்க்கைச் சம்பவங்கள் அனைத்தும் உணர்ச்சிகளாக ஆகி மனத்தில் பதிந்திருக்கின்றன.

இங்குதான் டாக்டர் பென்ஃபீல்டின் முயற்சி விஷயங்களைத் தெளிவு படுத்துகின்றன. மருத்துவ சோதனைகள் ஆதாரம் கொடுக்கின்றன. காக்காய் வலிப்புக்கொண்ட சிலரை டாக்டர் பென்ஃபீல்டு குணப் படுத்த மூளை அறுவை செய்தார். மூளைமட்டும் மரத்துப் போகும் ஊசிப் போட்டு இச்சிகிச்சை செய்தார். இதனால் சிகிச்சை பெறுபவர் முழு நினைவுடன் இருக்க முடிந்தது. பேச முடிந்தது. டாக்டர் பென்ஃபீல்டு லேசான மின்

துருவங்களால் மூளையின் வலது முன் பகுதியைத் தொட்டார்.

உடனே அந்த மருத்துவ சிகிச்சை பெறும் நபர் "யாரோ பியானோ இசைக்கிறார்கள். என்னால் அப் பாட்டைக் கேட்க முடிகிறது" என்றார். டாக்டர், மின் துருவத்தைச் சற்று நேரம் எடுத்துவிட்டு, மீண்டும் வைத்தபோது, "மேரிமேரி என்ற பாட்டைப் பாடுகிறார் கள்" என்று வர்ணிக்கத் துவங்கினார்.

டாக்டர் பென்ஃபீல்டு சுமார் பதினைந்து ஆண்டு கள் இத்துறையில் சோதனைகள் செய்தார். அதன் விளைவாக அவர் கண்ட உண்மைகள் மன இயக்கங் களைத் தெளிவுபடுத்தின.

"நாம் அனுபவித்த அத்தனை உணர்ச்சிகளும் மனத் தில் சம்பவங்களாகப் பதிந்திருக்கின்றன; ஒரு டேப் ரெக்கார்டரைப்போல நாம் மீண்டும் அதைப் போட்டுக் கேட்க முடியும். ஒரு சம்பவம் திரும்ப ஞாபகத்திற்கு வரும்போது, மனிதன் அதே உணர்வுடன் அச் சம்ப வத்தை மீண்டும் அனுபவித்து வாழ்கிறான்; ஒவ்வொரு சம்பவமும் தனித்தனியே வெளிவருகிறது. எல்லாம் சேர்ந்து குழப்பமாக வருவதில்லை. மூளையின் பல பகுதி களில் பலவிதச் சம்பவங்கள்—உணர்ச்சிகள் பதிந்து கிடக்கின்றன" என்பதாகும்.

நமது ஆசைகள் மனத்தில் கற்பனைகளாக, படங் களாக விரிகின்றன என்று கண்டோம். டாக்டர் பென்ஃபீல்டோ வாழ்க்கைச் சம்பவங்கள் உணர்ச்சி களாக ஆழ்மனத்தில் பதிந்திருக்கின்றன என்றும், அவை மீண்டும் நினைவுக்கு வரும்போது பழைய நிகழ்ச்சிகளை அநுபவித்து மீண்டும் வாழ்கிறோம் என்றும் கூறுகிறார். ஆசைக்கும் கற்பனைக்கும்—ஆழ் மனத்திலிருக்கும் பழைய நினைவுகளுக்கும், சாதனைக் கும் ஏதாவது தொடர்பிருக்க முடியுமா? என்று யோசித் துப் பாருங்கள்.

# வெற்றிக்கு ஓர் எண்ணப் பாதை

டாக்டர் பென்ஃபீல்டின் சோதனையில் மூளையை மின் துருவத்தால் தொட்டபோது, எல்லோரும் பழைய நிகழ்ச்சிகளை மீண்டும் அதே உணர்வுடன் அறிந்து வாழத் துவங்கினர்.

ஒரு நாள் மாலை வெளியே உலாவப் போன ஒரு மூதாட்டி ஓர் இசை மெட்டைக் கேட்க நேர்ந்தது. அந்த இசை அம்மூதாட்டியைச் சோகத்திற்குள்ளாக்கியது. மனோதத்துவ நிபுணர்களிடம் சென்றார் அம்மூதாட்டி. புதிர் விடுபடவில்லை. 'ஏன் அது சோகத்தைத் தூண்டியது?' என்ற புதிர் திடீரென்று ஒருநாள் அவருக்கு நினைவு வந்தது. தாம் அந்த இசையைப் பியானோவில் இசைத்துக் கொண்டிருந்தபோதுதான் அவர் தாயின் உயிர் பிரிந்தது என்னும் பழைய ஞாபகம். ஆகவே அந்த இசையைக் கேட்டபோது, அப்போது நேர்ந்த சம்பவமும் மனத்தில் சேர்ந்து சோக உணர்ச்சிகளை—நினைவுகளை எழுப்பின.

டாக்டர் பென்ஃபீல்டு அபிப்பிராயப்படுகிறார். 'நமது ஆழ்மனத்தில் பழைய கால நிகழ்ச்சிகள் மட்டும் அல்ல; நமது முற்பிறப்பு நிகழ்ச்சிகள் சம்பவகளும்கூடப் பதிவாயிருக்கின்றன' என்று. இவரது கண்டுபிடிப்புகளைப் பெரிய அதிசயத்துடன் விஞ்ஞான உலகம் ஏற்றுக்கொண்டது.

'ஆத்மா சாவதில்லை' என்ற நமது தத்துவத்தைக் கொஞ்சம் யோசித்துப் பாருங்கள், இங்கே.

மனத்தில் முற்பிறப்பு நிகழ்ச்சிகளும் பதிவாகி யிருக்கிறதென்றால் மனம் என்ன, சாகா வரம் பெற்

றதா? மீண்டும் மீண்டும் அனுபவம் என்ற எண்ணக் கூட்டங்கள் அதன்மீது படிகின்றனவா? அப்படியானால் ஆத்மா அல்லது ஆழ்மனம் என்பதுதான் என்ன? பல வாழ்க்கையின் எண்ணக் கதிர்கள், எண்ணத் தொடர்கள், எண்ணக் கூட்டங்கள் ஒன்று திரண்டு ஒரு நூல் பந்தைப்போல் இருக்குமா? மனிதன் சாகும்போது, இந்த எண்ணப் பந்து மனித உடலிலிருந்து பிரிந்துவிடுகிறதா? ஆம், அப்படித்தான் தோன்றுகிறது.

இந்த எண்ணப் பந்து பிரிந்து எங்கே செல்கிறது? பின் மீண்டும் எந்த உயிருக்குள் புகுகின்றது? ஏன் புகுகின்றது?

நமது விஞ்ஞான அறிவு இதற்கெல்லாம் எந்த விளக்கத்தையும் தரவில்லை. நமது ஞானிகளும் யோகிகளும்தான் இதை விளக்க முடியும். ஞானம் பெற்ற புத்தரைக் கேட்போம்.

அவர் கூறுகிறார்: "நச்சுத் தோய்ந்த, அம்புபட்ட ஒருவன் புண்ணைக் குணப்படுத்தாமல், மருத்துவரை அழைக்காமல், மருத்துவரை அழைக்குமுன், 'இது எங்கிருந்து வந்த அம்பு! வடக்கிலிருந்தா தெற்கிலிருந்தா?—யார் எய்தது இதை? உயரமானவனா? குள்ளமானவனா? என்ன நிறம் கொண்டவன் அவன்? கறுப்பனா, வெள்ளையனா? எந்தச் சாதியைச் சேர்ந்தவன்?' என்றெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தால், இதற்கெல்லாம் விடை தேடுவதற்குள் அவன் இறந்து போகக் கூடும்" என்கிறார். அதாவது, "பிறந்திருக்கிறோம் இவ்வுலகில். வாழும் வழியைப் பார்ப்போம்" என்பதே அவர் உபதேசம். நாமும் இத்தகைய சிந்தனைகளைச் சற்று ஒதுக்கிவிட்டு, "எண்ணங்கள் எப்படி வாழ்வில் பயனளிக்கும்?" என்பதைக் கவனிப்போம்.

டாக்டர் பென்ஃபீல்டின் ஆராய்ச்சியில் வெளிப்படும் உண்மை, மனத்திற்குக் காலப் பாகுபாடில்லை; இறந்த காலம், எதிர் காலம் என்ற வேறுபாடில்லை என்பதாகும். ஏனெனில் டாக்டர் பென்ஃபீல்டு பழைய நிகழ்ச்சிகளை வரவழைக்கும்போது, நிகழ் காலத்தில் வாழும் ஓர் உணர்வை ஆழ்மனம் ஏற்படுத்துகிறது. ஏனெனில், அத்தகைய சோதனைக்கு உட்படுபவர் ''பியானோ வாசிக்கிறேன் இப்போது'' என்று நிகழ் காலத்தில்தான் கூறுகிறார்.

நாம் எதை விரும்புகிறோமோ அந்த எண்ணத்தை ஆழ்மனத்தில், நிகழ்காலத்தில் புகுத்திவிட்டால், அதை மனம் உண்மையாக ஏற்றுக்கொள்கிறது. எமிலிகூ என்ற பிரெஞ்சு மன மருத்துவரும் அதைத்தான் கூறினார். ''நான் வளர்ந்து வருகிறேன்; முன்னேறி வருகிறேன்; என் உடல் ஆரோக்கியமாக இருக்கிறது'' என்று. நிகழ்காலத்திலேயே மனத்துடன் பேச வேண்டும் என்று அவர் குறிப்பிடுகிறார்.

இது ஆழ்மனத்தில் நிகழும் நிகழ்ச்சியாகப் பதிவாகிறது; மனம் அதை நம்புகிறது. மனம் எதை நம்புகிறதோ அது வாழ்வில் உண்மையாக நடைபெறத் துவங்குகிறது. மனம் நம்பத் துவங்கியதும் (புலியைக் கண்டு பயந்தவனுக்கு ஏற்படும் உடல் மாற்றம் போல) நமது சூழ்நிலையில் மாற்றங்கள் நிகழ்கின்றன; புற வாழ்க்கை வாய்ப்புக்கள் நமக்குத் தோன்றுகின்றன.

பழைய சம்பவங்களின் நினைவுகளும், அத்துடன் தொடர்பு கொண்ட உணர்ச்சிகளும் வெளிவருவதை டாக்டர் பென்ஃபீல்டின் சோதனைகள் நிரூபிக்கின்றன. இதிலிருந்து தெரியும் உண்மை நமது

லட்சியங்களும், ஆசைகளும், எத்தனைக்கு எத்தனை தீவிரமாக—உணர்ச்சி கலந்து பதிய வைக்கப்படு கின்றன என்பதைப் பொருத்துப் பலன் இருக்கிறது என்பதாகும். திடீரென்று ஒரு புலியைக் காணும் உணர்ச்சி நம்மை மயிர்க்கூச்செறியச் செய்கிறது. அது வலுவான உணர்ச்சி.

அத்தகைய் வலுவை—அத்தகைய உணர்ச்சி ஆழத்தை, நமது லட்சியக் கனவுகளை எண்ணும் போது நம்மால் உருவாக்க முடியுமா, உருவாககு கிறோமா என்பதை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். அதைத்தான் விவேகானந்தர் கூறுகிறார்: "நீருக்குள் அமுங்கியிருப்பவனுக்கு வெளிவர ஏற்படும் துடிப்பு" என்று. அந்தத் துடிப்பு இருக்கும்போது எண்ணங்கள் வலிமை பெறுகின்றன. ஒரு சமயத்தில் ஏற்படும் ஆழ்ந்த உணர்ச்சிக்கு ஈடாக, நாம் பல முறை தினந் தோறும் நமது லட்சியங்களை எண்ணுவதன் மூலம் வலுவடையச் செய்யலாம் என்று அறிஞர்கள் கூறு கிறார்கள்.

நமது லட்சியம் ஈடேறுவது என்பது நமது தெளி வான லட்சியத்தையும், அதில் நமக்குள்ள ஆழ்ந்த ஈடுபாட்டையும் நமது லட்சியத்திலிருந்து வழுவாத நமது உள்ள உறுதியையும் நினைவு மூலம் நமது ஆழ் மனத்திற்கு நாம் மாற்றும் எண்ண வலிமையையும் (பிரார்த்தனையும்) பொறுத்ததாகும்.

வெற்றிக்கு மற்றொரு பாதைகூட இருக்கிறது. இதை 'எண்ண இணைப்பு' என்றும், 'முன்னைய நினைவு இணைப்பு' என்றும் கூறலாம்.

ஏதாவது சாதிக்க வேண்டிய காரியம் கைமுன் இருக்கும்போது, நாம் நமது பழைய வெற்றிகளை, சாதனைகளை நினைவு கூறவேண்டும் என்கிறார்கள். நாம் அடைந்த பழைய வெற்றிகளை நினைவு கூரும்போது, நம் மனம் பழைய சம்பவங்களில் திளைக்கிறது. பழைய சாதனை—ஒளி நிகழ்ந்த வெற்றிப் பாதை. அதை நினைவு கூர்ந்துகொண்டு புதிய காரியத்தைச் செய்யும் போது, நாம் இரண்டையும் இணைத்து விடுகிறோம். புதிய காரியம் பழைய எண்ணப் பாதையில் சென்று வெற்றியைக் கொண்டு வருகிறது. கை மேலுள்ள காரியத்தையும் பழைய வெற்றியையும் எண்ணும் போது, இரண்டும் இணைந்து புதிய காரியம் பழையபாதையில நடை போடுகிறது; வெற்றியைத் தருகிறது.

இக்கண்ணோட்டத்தோடு, உங்கள் நண்பர்களில் சிலருககு வெறறிமேல் வெற்றி என்று தொடர்ந்து ஏற்படும் நிலையை யோசித்துப் பாருங்கள். வெற்றிப் பாதை என்பது ஒரு மனநிலை. ஒரு வெற்றியை அடைந ததும் நம் மனத்திற்கு நம்மீதே நம்பிக்கை ஏற்படு கிறது.

நமது குழந்தைகளின் வாழ்வில், சிறுசிறு வெற்றி என்ற வாய்ப்புக்களை ஏற்படுத்துவது எத்தகைய வெற்றி மனநிலையை அவர்கள் உள்ளத்தில் ஏற்படுத தும் என்பதை எண்ணிப் பாருங்கள்.

# மனப்பயிற்சியும் சாதனையும்

'ஹிப்னுடிசம்' பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருக்கக்கூடும். இது மனிதனை ஒரு மயக்க நிலைக்கு— அரைத் தூக்க நிலைக்கு அழைத்துச் சென்று, அவன் மனத்திற்குச் சில கட்டளைகளைப் பிறப்பிப்பதாகும். மனம் அரைத் தூக்க நிலையிலிருக்கும்போது கண் மூடியிருக்கிறது; நமது புலனறிவு நமக்கு இருப்பதில்லை. அப்போது ஆழ்மனம் விழித்த நிலையில் இருக்கிறது. யோசனைகளை, கட்டளைகளை ஏற்றுக் கொள்ளும் நிலையில் இருக்கிறது. அப்போது 'ஹிப்னுடைஸ்' செய்பவர், "நீங்கள இப்போது வடதுருவத்திலிருக்கிறீர்கள். அதன் குளிரை உணர்வீர்கள்" என்று சொன்னுல் உடனே ஹிப்னுடைஸ் செய்யப்பட்ட மனிதர் குளிரால் நடுங்குகிறுர்; உடல் வெடவெடக்கிறது. ஹிப்னுடைஸ் செய்பவர், "உனது சுண்டு விரலில் உஷ்ணம் ஏற்படுகிறது. கொப்புளம் தோன்றுகிறது" என்று கூறினுல் அருகிலிருக்கும் மருத்துவர் ஒரு தர்மாமீட்டரைக் கொண்டு உஷ்ணம் ஏறியிருப்பதைச் சோதிக்கலாம்.

ஆழ்மனம் எதை நம்புகிறதோ அதை நிறைவேற்றுகிறது.

ஒரு நல்ல கண்ணியமிக்க மனிதனை ஹிப்னுடைஸ் செய்து, "நீ விழித்து எழுந்ததும் கோமாளிபோல் 'பார்ட்டி'யில் ஆடுவாய்" என்று சொன்னுல், அவன் தூக்கநிலையிலிருந்து எழுந்ததும் 'பார்ட்டி'யில் கலந்து கொண்டு கோமாளிபோல் ஆடுவதைக் காணலாம்.

[இதிலிருந்து ஹிப்னுடைஸ் செய்வது ஏதோ எளிது என்று யாரும எண்ணவேண்டாம். நமது ஊரில் பெண்களை ஹிப்னுடைஸ் செய்து எங்கும் அழைத்துச் சென்றுவிடலாம் என்று சில அறியாதவர்கள் ஆசையுடன் கூறக் கேட்டிருக்கிறேன். ஒரு நபரது பூரண ஒத்துழைப்பு இல்லாமல் ஹிப்னுடைஸ் செய்ய முடியாது. ஒருவரது பூரண ஒத்துழைப்பு இருக்கும்போது பின் என் ஹிப்னுடைஸ் செய்யவேண்டும். அப்படியே ஹிப்னுடைஸ் செய்யப்பட்டாலும், மனத்தின் ஆழ்ந்த நம்பிக்கைகளுக்கு எதிராக உடலுக்கு எந்தக் காரியம் செய்யப்பட்டாலும், உள்ளமும் உடலும இதை எதிர்த்து ஹிப்னுடிசத்திலிருந்து வெளி வந்துவிடும்; தன்னைப் பாதுகாததுக் கொள்ளும்.]

ஹிப்னுடிசத்தை இங்கு நான் விவரிக்கும் காரணம் நமது ஆழ்மனத்திற்கு இருக்கும் அபார சக்தியை விளக்கவே. புலியைக கண்டு பயந்த மனிதனின் கதையை முன்பு பார்த்தோம். ஆழ்மனத்திற்கு உண்மை—கறபனை என்ற அக்கறை எதும் இல்லை. எந்தக் கற்பனையை நாம் ஆழ்மனத்தில் போட்டாலும், அதை நிஜமாக நம்பி நிறைவேற்றும் அபார சகதி கொண்டது ஆழ்மனம்.

பழைய நிகழ்ச்சிகளை மீண்டும் ஞாபகத்திற்குக் கொண்டு வரும்போது, அத்துடன் அந்த உணர்ச்சிகளையும் நாம் அனுபவிக்கிறோம்—ஹிப்னுடைஸ் செய்யப்பட்டவன் வட துருவத்திலிருககிறோம என்ற எண்ணத்திலிருந்து குளிரை உணர்வது போல.

ஆனல் நடைமுறை வாழ்வில், ஆழ்மனத்திற்கு எண்ணங்களைப் புகவிடும் ஒரே முறை நமது நினைவு

மூலம் மட்டும்தான். சதா ஒன்றைப்பற்றி நினைப்பதே வேண்டுகோளாய், பிரார்த்தனையாய்—ஆழ்மனத்தில் புகுந்து பலனைத் தருகிறது.

ஒரு சோதனையில் 'பாஸ்கெட் பால்' விளையாடு பவர்களை இரு பிரிவாகப் பிரித்தார்கள். ஒரு பிரிவுக்கு தினம் மனத்தால் ஓர் ஐந்து நிமிடம் பந்து விளையாடு மாறும், பந்தைக் கூடையில் போடுமாறும் கூறினார்கள். மற்றப் பிரிவுக்கு எந்தப் பயிற்சியும் கொடுக்கவில்லை. இவ்விரு பிரிவுகளையும் பல்முறை விளையாடச் செய்ததில் மனத்தால் பயிற்சி பெற்ற பிரிவே வெற்றி பெற்றது. மனத்தால் திரும்பத்திரும்ப எண்ணுவது மிக்க பலன் தருகிறது. காரோட்டக் கற்றுக் கொள்ளும்போதும், விமானம் ஓட்டப் பயிற்சி பெறும்போதும், இம்மனப்பயிற்சி, செயலை, எவ்வளவு எளிதாக்குகிறது என்பது தெரியவரும். வட்டப்புள்ளி யைக் குறிபார்த்து அம்பு எறிவோரும், 'கால்ஃப்' பந்து விளையாடுவோரும் தங்கள் வெற்றிகளுக்கு மனப் பயிற்சியே காரணம் என்கின்றனர்.

இம்மனப்பயிற்சி, விளையாட்டில் மட்டும்தான் பயில வேண்டும் என்பதில்லை. எந்தத் துறையில் நாம் இருக்கிறோமோ, எந்த முடிவை—வெற்றியை நாம் விரும்புகிறோமோ, அதற்கேற்ப நாம் மனப்பயிற்சியை மேற்கொள்ளலாம்.

மனப் பயிற்சிக்குப் பதில், பல இடங்களில் இதற்கு ஒரு வடிவம் கொடுத்து, பல விஷயங்களை நாம் சடங்குகளாகச் செய்கிறோம்; பல சடங்குகள் உண்மையிலேயே நமது மன எண்ணங்களுக்குப் புற வடிவம் கொடுக்கப்பட்ட செயல்களாகும்.

மனத்தில் நாம் அடைய விரும்பும் கடைசி நிலையைப் படம் பிடித்துவிட்டால் போதும் என்று மனநூலார் கூறுகிறார்கள். நாம் அடைய விரும்பும் பதவியை, நிலையை மனத்தில் தெளிவாக்கி அப் படத்தை மனக்கண்முன் வைத்தால், நமது ஆழ்மனம் மற்றைய காரியங்களைத் தானே நிகழ்த்துகிறது. வாழ்க்கையில் வெற்றி பெற்ற பலரும் அவர்கள் எழுதிய எல்லாப் புத்தகங்களிலும் வலியுறுத்திக் கூறும் உண்மை இதுதான். 'கால்ஃப்' பந்து விளையாடும் அமெரிக்காவின் தலைசிறந்த விளையாட்டு வீரர் கூறுகிறார்: "'கால்ஃப்' பந்து போய்க் குழியில் விழுவதைத்தான் எண்ணிக் கொண்டிருப்பேன். அந்த நினைவு—என் உடல் இயக்கத்தையே ஆட்டிப் படைத்துச் சரியானபடி பந்தை அடிக்கிறது என்று நம்புகிறேன்" என்கிறார்.

அருகருகே உட்கார்ந்துகொண்டு மீன் பிடித்துக் கொண்டிருந்த இருவரில் ஒருவர் மீன்களைக் குவித்துக் கொண்டிருந்தார்; மற்றவர் தூண்டிலில் ஏதோ ஒன்றிரண்டு மீன் விழுந்துகொண்டிருந்தது. அதிக மாக மீன் பிடித்தவரைப் பார்த்து, "என்ன தந்திரம் செய்கிறீர்கள் இவ்வளவு மீன் விழ?" என்று கேட்டதற்கு அவர் சொன்னார்: "நான் தண்ணீருக்கு அடியில் போய் 'தூண்டிலில மாட்டிக்கொள், தூண்டிலில் மாட்டிக் கொள்' என்று கூறிக்கொண்டிருக்கிறேன். மீன்கள் ஒன்று மாற்றி ஒன்று மாட்டிக் கொள்வதாக என் மனத்தில் படம் ஓடுகிறது" என்று.

மனப் பயிற்சி போலவே, நாடக ஒத்திகையும், சோற்றுக்குத் தாளம் போட்ட நடிகர், ராஜா வேடம் போட்டுக்கொண்டு ராஜாவாக வாழ்க்கையை மாற்றிக்

கொண்டதை நீங்கள் கண்டதில்லையா? கதாநாயகர்களாக நடித்தவர்கள் நாயகர்களாகவே நிஜவாழ்வில் மாறி வருவதை நாம் பார்க்கிறோம். பெண் வேடம் போட்ட 'பிலிப் வில்சன்' என்ற பெரிய அமெரிக்க காமெடியன், 'பெண்வேடம் தன் பர்சனாலிட்டியையே மாற்றி விடுவதாக' அதை விட்டுவிட்டார். எப்படி மனத்தில் எண்ணுகிறோமோ, பயில்கிறோமோ அப்படியே நாம் ஆகிறோம்.

வாழ்வில் நாம் எப்போதும் ஏதோ ஒருவித நாடகப் பாத்திரத்தைத்தான் ஏற்று நடித்து வருகிறோம். நம்மைப்பற்றி நாமே கொண்டிருக்கும் எண்ணம்தான் இப்பாத்திரம்.

பலர் வெளியுலகில் தாலூக்கா ஆபீஸ் குமாஸ்தாவாகவும், பள்ளி ஆசிரியராகவும் பாத்திரம் ஏற்று உலவுகிறோம். நம்மைப்பற்றி நாமே கொண்டிருக்கும் எண்ணத்தால், பலர் அழுது புலம்பும் பாத்திரத்தை பயந்து சாகும் நாடக வேடத்தை, நம்பிக்கையின்மை, இயலாமை என்ற பாத்திரங்களை ஏற்று வாழ்கிறோம்.

குடிப்பது கூழானாலும், பெருக்குவது தெருவானாலும், நாம் நமது எண்ணங்களால், மனநிலையால நாம் அரசனாக உலவவேண்டும். நம் எண்ணம் மாறும் போது சூழ்நிலை மாறுகிறது; நம் எண்ணம் உயரும போது நம் சூழ்நிலை உயர்கிறது. நாம் உயர்கிறோம்.

ஆகவே, ராஜா வேடம் போடுங்கள். உங்களுக்குப் பிடித்த லட்சிய மனிதனை—லட்சியத் தலைவனை—மனத்தில் கொள்ளுங்கள். வாழ்க்கையில நீங்கள் ஒரு நல்ல பாத்திரத்தைத் தேர்ந்தெடுத்து நடியுங்கள். வாழ்க்கையும் சூழ்நிலையும் மாறுவதை நீங்கள் உணர்வீர்கள்.

# நம்மைப் பற்றிய கற்பனை

கற்பனை, உள்ளுணர்வு, வாய்ப்பு என்ற மூன்றிற்கும் நமது மன எண்ணங்களுக்கும் நெருங்கிய தொடர்பிருக்கிறது.

நாம் எதைப்பற்றியாவது தீவிரமாகச் சிந்திக்காமல் சற்றுநேரம் இருக்க முடியுமானால், நமது உடலும் மனமும் ஓர் ஓய்வு நிலையை அடைகின்றன. புலன் அறிவால் இயங்கும் வெளிமனம் ஓய்வு பெறும்போது நம் மனத்தில் கற்பனை ஓடுகின்றன; நாம் பகல் கனவு காண்கிறோம். நம் மனத்தில் அப்போது தோன்றும் எண்ணங்கள் நம்ப முடியாதவைகளாக இருக்கலாம். எனினும், நமது புலனறிவு அதைத் தர்க்க ரீதியாக வாதித்து அமைதிபடுத்துவதில்லை. நமது மனத்தில் ஓடும் கற்பனைகளை நாம் நெறிப்படுத்த முடியும். நமக்குப் பிடித்த ஒரு குறிக்கோளை எண்ணிக்கொண்டு நாம் அது சம்பந்தமான எண்ணங்களைக் கற்பனைகளை எவ்வளவு தீவிரமாக நாம் ஆசைப்படுகிறோம் என்பதைப் பொறுத்து அவை ஆழ்மனத்தில் பதிக்கின்றன. பின் நாளடைவில் நம் வாழ்வில் சம்பவங்களாக அமைகின்றன. மனத்தில் நிரந்தரமாக நிறுத்தப்படும் கற்பனை, நம் வாழ்வில் சம்பவமாக விரிகிறது; இது அனுபவமாகப் பலர் வாழ்வில் நிகழ்ந்ததற்கு ஆதாரங்கள் இருக்கின்றனவே தவிர, இது எப்படி நிகழ்கிறது என்ற அறிவு இன்னும் அறியப்படவில்லை.

ஆழ்மனத்தின் சக்தியை அறிய இங்கிலாந்தில் சில சோதனைகள் செய்தனர். ஒரு மனிதனை 'ஹிப்னடைஸ்' செய்து அவன் மயக்க நிலையிலிருந்தபோது அவன் ஆழ்மனத்திடம் கூறினார்கள். "இப்போது உன் உடலில் டி. பி. கிருமிகளைச் செலுத்தப் போகிறோம். இக் கிருமிகள் உன்னை ஒன்றும் செய்யாது. உனக்கு நோயுண்டாக்காது. ஏதும் உன் உடலுக்குக் கேடு விளைவிக்காது." பின் அந்த நபர் மயக்கம் தெளிந்து எழுந்தார். அவரைப் பலகாலம் சோதனை செய்ததில், டி. பி. யின் சிறு அடையாளம்கூட அவர் உடலில் தோன்றவில்லை. அதேபோல ஒரு பதினாறு வயதுச் சிறுவனுக்கு ஒரு தோல் வியாதி, பிறவிக் குறைபாடாக இருந்தது. வழக்கமாக இத்தகைய பிறப்புக் குறை பாடுகளை நிவர்த்திக்க முடிவதில்லை. ஆனால் அச் சிறுவனை ஹிப்னடைஸ் செய்து, அவன் உடல் இத் "தோல் வியாதியை இயல்பாக நாளடைவில் குணப் படுத்தும்" என்ற ஓர் எண்ணத்தை அவன் மனத்தில் பதிய வைத்தார் மேசன் என்ற ஆங்கில மருத்துவர். முதன் முறையாக ஒரு பிறப்புக் குறைபாட்டை ஆழ் மனத் தொடர்பு மூலம் மாற்றிவிட முடியும் என்று மருத்துவ உலகம் கண்டது. ஆழ்மனத்தில் பதியும் ஓர் எண்ணமானது எத்தனை வலுப்படைத்தது; அது என்னென்ன செய்யக்கூடும் என்பதை இச்சோதனைகள் நிரூபிக்கின்றன.

அதேபோல் நமது தோல்விகளுக்கும் சங்கடங் களுக்கும் காரணம், நமது ஆழ்மனத்தில் புகவிட்ட எண்ணங்களே என்று மனநூலார் கூறுகின்றனர். "என்னால் முடியாது" என்று சிலர் ஆழ்மனத்திடம் சொல்லி நம்ப வைத்திருந்தால், அவர்கள் எடுத்த காரியம் எப்படி வெற்றியடைய முடியும்? "எனக்கு எப்போதுமே பூஞ்சை உடம்பு" என்றும், "நான் எதிலும்

அதிர்ஷ்டக்கட்டை'' என்றும், ''நான் கஷ்டங்களை அனுபவிக்கப் பிறந்தவன்'' என்றும், பலவிதமாக நாம் அதைப்பற்றி எண்ணிக் கொண்டிருக்கிறோம். அது உண்மை என்று நாமே நம்பிக் கொண்டிருக்கும் போது, அப்படியே அது நிகழ்கிறது.

ஆகவேதான் மன நூலார் கூறுகின்றனர்: ''நாம் நம்மைப்பற்றிக் கொண்டிருக்கும் எண்ணங்களை ஆராய வேண்டும், அவற்றை ஒரு தாளில் எழுதித் தெளிவு படுத்த வேண்டும். எவ்வளவு முட்டாள்தனமாக, பைத்தியக்காரத்தனமாக, நம்மை நாமே சிறுமைப் படுத்திக்கொண்டிருக்கிறோம் என்பது தெளிவு பெறும்.''

நம்மைப் பற்றி நாம் கொண்டுள்ள மட்டமான அபிப்பிராயங்கள் சிறுவயதில் நம் பெற்றோர் கூறியதிலிருந்து விளைந்திருக்கலாம். நமது ஆசிரியர்கள் கூறிய வாசகங்களின விளைவாக எழுந்திருக்கலாம். நமது நண்பர்களின் கிண்டலாக, கேலியாக உருவாகி இருக்கலாம். ஏதோ ஒரு முறை கண்ட ஏமற்றத்தின் போது எழுந்த சோக எண்ணங்களின் விளைவாக இருக்கலாம்.

எதுவாக இருந்தாலும், நாம் அதைக் கெல்லி எரிய வேண்டும். இவ்வுலகில் ஆண்டவன் படைப்பில் நமக்கு இடம் உண்டு, நமக்கு உரிமை உண்டு என்று எண்ண வேண்டும். கடவுள் என்ற மகத்தான சக்தியின் துணை கொண்டு, அல்லது உங்கள்மீது அன்பையே பொழிந்த உங்கள் பெற்றோரின் நல்லாசி மூலம், 'நல்லதே நமக்கு நிகழும்' என்று நாம் நம்ப முற்படவேண்டும்.

நமது கெட்ட எண்ணங்களை அக்குவேறு ஆணி வேறாக அலசி, அதைத் திரித்து, கரைத்துச் சிறுமைப் படுத்தித் தூக்கி எறிய வேண்டும். இதற்கு மாறாக நம்பிக்கையையும் நல்ல எதிர்காலம பற்றிய கற்பனை

யையும் நம் ஆழ்மனத்தில் நாம் குடிபுகச் செய்யும் போதே, நம் சூழ்நிலை மாறுவதை நாம் உணரலாம்.

பலர் பழைய தோல்விகளை விரிவாக, ருசிமிக்க கதையாகப் பெரிதுபடுத்துவார்கள். பலர், பிறர் அனுதாபத்தை எதிர்நோக்கித் தங்கள் கஷ்டத்தைப் பெரிதுபடுத்திக் கூறுவார்கள். பலர் தங்கள் இயலாமையை மறைக்க வேண்டித் தங்கள் துரதிர்ஷ்டத்தை துணைக்குக் கூப்பிடுவார்கள். இதைத்தான் நாம் நோயடைந்த மனம், சிக்குப்பிடித்த சிந்தனை, வியாதியைச் சுமக்கும் எண்ணங்கள் என்கிறோம். கஷ்டங்களைப் பெரிதுபடுத்தினால் கஷ்டம்தான் பெருகும். நன்மையையும், மகிழ்ச்சியையும் பெரிதுபடுத்தும் போது நமக்கு நன்மையும் நம்மைச் சுற்றிலும மகிழ்வும் நிறையும்.

ஆகவேதான் பழைய தோல்விகளை—ஏமற்றங்களை நாம் மறக்க முயல வேண்டும். மாறாகப் பழைய மகிழ்ச்சி—வெற்றிச் சம்பவங்களை மனத்தில் அசை போடவேண்டும்.

"எண்ணங்களை ஆழ்மனத்தில் பதிக்க ஹிப்னடிசம் தேவையில்லை—அரைமயக்க நிலை தேவையில்லை. புலனறிவை ஓய்வு படுத்திவிட்டுக் கற்பனையை வளரவிடும் போது ஆழ்மனம் வேலை செய்கிறது" என்கிறார்கள் இன்றைய மன நூலார். "நாமாகத் தூண்டிவிடும் ஹிப்னடிச நிலைதான்—கற்பனை" என்று கூறுகிறார்கள் அவர்கள். அன்புடன், கனிவுடன் பிறர் கூறும் யோசனைகளை நாம் ஏற்றுக்கொள்ளும் நிலை, நாமாகத் தூண்டிவிட்ட ஹிப்னடிச நிலைதான் என்று மன மருத்துவர்கள் கூறுகிறார்கள். நினைவு நிலையிலேயே நல்ல எண்ணங்களை—யோசனைகளை மனத்துள் விடுவதும் ஒரு ஹிப்னடிசம்தான்.

# எதிர்காலத்தைப்பற்றிய கற்பனை

ஒரு குழந்தை ஒரு படம் வரைந்தது. அதன் தந்தை, "என்ன படம் வரைந்தாய் கண்ணே?" என்று கேட்டார். "மாடு புல் தின்கிறது" என்றது குழந்தை. "கண்ணே! மாடு இருக்கிறது. ஆனால் எங்கே இருக்கிறது புல்?" என்றார் தந்தை. "இல்லை அப்பா, மாடு புல்லைத் தின்றுவிட்டது" என்றது குழந்தை.

குழந்தைகளுக்கு கற்பனை அபாரம். குழந்தை வளர வளர, நாம் அதன் கற்பனைகளைக் குறைத்து விடுகிறோம். காரண காரியம் காட்டும் ஓர் உலகிற்கு —நடைமுறை உலகிற்கு வரும்போது குழந்தையின் கற்பனை குறைந்து விடுகிறது.

மழைத் தூற்றலை வருணிக்கிறார் பாரதி, 'வானை யும் பூமியையும் இணைக்கும் வைரக்கோல்கள்' என்று. என்ன கற்பனை!

மனத்தில் கற்பனை தோன்றத் தோன்ற நமது பிரச்னைகளுக்குப் பல வழிகள் பிறக்கின்றன. நமது பிரச்னைகள் எளிதாகின்றன. நாட்டுத் தலைவனுக்கு மட்டுமல்ல கற்பனை தேவை; அன்றாட வாழ்வு வாழும் வீட்டுத் தலைவனுக்கும் கற்பனை தேவை.

குழந்தைகளின் கற்பனைகளை, 'பொய்மை விளை யாட்டு' என்கிறோம். எழுத்தாளர்களின் கற்பனைகளைக் கதைகளாகவும் நாடகங்களாகவும் சினிமாவாகவும் ரசிக்கிறோம். நாட்டுத் தலைவனின் எதிர்காலக் கற்பனையை, 'தீர்க்க தரிசனம்' என்கிறோம்.

எப்படி ஒரு குழந்தையின் கற்பனை விளையாட்டாய் கிற்பதையும், ஓர் எழுத்தாளனின் கற்பனை நம்மில்

உணர்ச்சிகளை ஏற்படுத்துவதையும், ஒரு தலைவனின்—கவிஞரின் கற்பனை எதிர்காலத்தைப் புலப்படுத்தும் ஒரு முன்னோட்டக் கண்ணாடியாக விளங்குகிறது என்பதையும் கவனியுங்கள். குழந்தை பொய்மை என்று உணர்ந்து விளையாடுகிறது. ஓர் எழுத்தாளன் பிறர் மனத்தில் உணர்ச்சிகளை எழுப்பவேண்டும் என்று எண்ணுகிறான்; அதை எழுப்புகிறான். ஒரு தலைவனோ நாட்டின் எதிர்காலத்தைக் காண்கிறான். அதை அப்படியே உருவாக்குகிறான். கற்பனையை எந்த அளவுக்கு நம்புகிறோம் என்பதைப் பொறுத்தே அதன் சாதனை. கற்பனையை எத்தகைய கருவியாக உபயோகிக்கிறோம் என்பதைப் பொறுத்ததே பலன்.

கற்பனையை நாம் வெறும் பகல் கனவாகச் சுவைத்துவிட்டு நம் நடைமுறைக் காரியங்களைக் கவனிக்கலாம். கற்பனையை நாம் நிகழ வேண்டிய சம்பவங்களாக மனதில் விரித்துவிட்டு, நாம் பலனை ஆர்வத்துடன் எதிர்நோக்கலாம். நாம் எப்படி விரும்புகிறோமோ அப்படியே மனம் ஏற்றுக்கொள்கிறது.

கற்பனை மிகுந்த தலைவர்களுக்கும் கற்பனையில்லாத தலைவர்களுக்கும் உள்ள வேறுபாட்டை யாரும் எளிதில் காணமுடியும். கற்பனை நிறைந்த மேதைகளாலேயே நமது உலகம் இவ்வளவு முன்னேறி வந்திருக்கிறது.

கல்லை முதலில் சக்கரமாக அமைத்தவனின் கற்பனையை எண்ணிப் பாருங்கள். முதன் முதலில் அகப்பட்டதைப் பறித்துத் தின்பதற்குப் பதிலாகப் பயிரிட்டு அறுவடை செய்தவனின் கற்பனையை எண்ணிப் பாருங்கள். எங்கோ இருப்பவர்கள் பேசுவதைக் கேட்கும்படிச் செய்த ரேடியோவைப்பற்றி யோசித்துப் பாருங்கள். மாடில்லாத—குதிரையில்லாத

வண்டி ஒன்று ஓடும் என்று கற்பனை செய்த—காரைக் கண்டுபிடித்த மனிதனின் கற்பனையை யோசித்துப் பாருங்கள். கற்பனைதான் இவ்வுலகை உருவாக்கியிருக்கிறது. இவை அனைத்தும் ஒரு காலத்தில் இல்லாத பொருட்களாக—வெறும் கற்பனைகளாக இருந்தன. மனித மனம் கற்பனையை நிகழும நிகழ்ச்சியாக்கியது.

கற்பனை என்பது இல்லாத ஒன்றை மனத்தில் படமாகக் காண்பதாகும். பழங்குடி மக்களின் பேச்சு முறைகளைக் கவனித்தால், அவர்களுடைய வார்த்தைகள் எல்லாம் மனத்தில் படங்களை எழுப்பும் சம்பவங்களாகவே வர்ணிக்கப்படுகின்றன. மனிதன் எழுதத் துவங்கியபோதும் படங்கள் மூலமாகவே செய்திகளைப் பரிமாறிக் கொள்ளத் துவங்கினான்.

கற்பனை இரண்டு வகைப்படும். ஒன்று, பழைய நினைவுகளை மீண்டும் எண்ணிப் பார்ப்பது; மற்றொன்று இல்லாத ஒன்றை எதிர்காலத்தைப்பற்றி எண்ணிப் பார்ப்பது. இறந்த கால நிகழ்ச்சிகள்-நாம் அனுபவித்த நிகழ்ச்சிகள். அவையும் இல்லாத ஒன்றுதான். ஆனால் நிகழ்ந்ததைச் சுவைக்கும் நினைவுகளிலிருந்து பிறக்கும் அனுபவம் பயன் தரும்; அந்த நினைவுகள் ஏற்படுத்தும் உணர்வை நாம் நிகழ்காலத்தில் அனுபவிக்க முடியும். ஆனால் எதிர்காலக் கற்பனைபோல், அவை ஆக்க சக்தி படைத்தவை அல்ல.

பழைய சம்பவங்கள் ஆழ்மனத்தில் ஒரு பாதையை ஏற்படுத்தியிருக்கின்றன. மூளையின் செல்களான 'நியூரான்'களில் ஒரு பாதை வகுக்கப்பட்டிருப்பதாக மூளை மருத்துவர்கள் கூறுகிறார்கள். ஆகவே எதிர்க்காலக் கற்பனையைப் பழைய கால வெற்றியுடன் சேர்த்துச் சிந்திப்பது வெற்றிக்கு வழி வகுக்கும் என்கின்றனர் மன நூலார்.

நமக்குத் தெரிந்த பழைய நினைவுகளைக் கலைத்து வேறு விதங்களில் அவற்றைச் சேர்ப்பதன் மூலமும் மனத்தில் புதிய கற்பனையும் ஆக்க சக்தியும் பிறக்கின்றன.

கற்பனையை நாம் அளவோடு உபயோகிக்க வேண்டும். கற்பனை உலகிலே வாழ்பவர்கள், சில சமயம் நடைமுறை உலகை மறக்க—அதன் கஷ்டங்களிலிருந்து விடுபட அதை ஒரு கருவியாக உபயோகிக்கின்றனர். சில சமயம் இவர்களோ சித்த பேதம் கொண்டவர்களாக மாறுகிறார்கள். கற்பனை இல்லாதவர்களோ எதிலும் பிடிவாதத்தையும உறுதியையும் மேற்கொள்கின்றனர். அவர்களது நடைமுறை வாழ்வு செக்குமாடு சுற்றுவதைப்போல் வழக்கமான பாதையை மேற்கொள்கிறது. ஓர் உப்புச்சப்பில்லாத வாழ்க்கையை அவர்கள் வாழ்கினறனர்.

பர்னார்டு ஷா, "வெகு சிலர் ஆண்டொன்றுக்கு இரண்டு அல்லது மூன்று முறை சிந்திக்கின்றனர். வாரத்தில், ஒரிருமுறை சிநதிப்பவன் நான் என்ற சர்வ தேசப் புகழ் எனக்குண்டு" என்று தமக்கே உரிய அடக்கத்துடன் கூறுகிறார். சிந்தனை எனும்போது ஆக்க சிந்தனை—கற்பனையை அவர் குறிப்பிடுகிறார்.

விளம்பரக் கம்பெனிகளில் வேலை செய்பவர்களுக்கும், சினிமா உலகில் இருப்பவர்களுக்கும் மிகுந்த கற்பனை தேவை. ஒரு விளம்பரக் கம்பெனித் தலைவர் கூறுகிறார்:

"கற்பனை ஒரு வரப்பிரசாதமல்ல. மனத்தை நாளடைவில் அந்த வழியில் பழக்கப்படுத்துவதன் மூலம் நாம் கற்பனையை வளர்க்க முடியும்."

இன்று நம்மிடையே இருக்கும் பிரபல எழுத்தாளர்களின் ஆரம்ப காலக் கதைகளைப் படித்துப் பாருங்கள். கற்பனையை எவ்வளவு பழக்கப்படுத்தி முன்னுக்கு வந்திருக்கிறார்கள் என்பது விளங்கும்.

# உள்ளுணர்வு

நடந்து கொண்டேயிருக்கும்போது திடீரென்று ஓர் ‘ஐடியா’ தோன்றுகிறது. ஊருக்குக் கிளம்ப இருக்கும்போது ஏதோ ஒரு காரணத்தால் நாம் செல்வது தடைப்படுகிறது. “அப்படித்தான் நடக்குமென்று அப்போதே நினைத்தேன்” என்று சில சமயம் சொல்கிறோம். “என்னைக் கேட்காதீர்கள். இந்தத் தடவை நாம் வெற்றியடையப் போகிறோம் என்று என் மனம் சொல்கிறது!” என்று சில சமயம் சொல்கிறோம்.

இதைத்தான் உள்ளுணர்வு என்கிறோம். புலனறிவுக்கப்பாலிருந்து ஓர் எண்ணம் திடீரென்று நமக்குத் தோன்றுவதைத்தான் உள்ளுணர்வு என்கிறோம். உள்ளுணர்வு நமது ஆழ்மனத்திலிருந்து வருகிறது. நெருக்கடியான சமயங்களில், குழம்பிய நிலைகளில், உள்ளுணர்வு நமக்கு வழி காட்டுகிறது.

ஐன்ஸ்டைன் என்ற புகழ்பெற்ற விஞ்ஞானி கூறினார்: “என் வாழ்வில் நான் கண்டுபிடித்த விஞ்ஞான உண்மைகள் இரண்டே இரண்டுதான். அவை இரண்டும் என் உள்ளுணர்வு தந்தவை.” எடிசனின் விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளுக்கெல்லாம் அவருக்குத் தோன்றிய ‘திடீர் யோசனை’கள்தான் காரணமாம். காரண காரியங்களுக்கு அப்பாற்பட்ட சில யோசனைகள் திடீரென்று நம் மனத்தில் பிறக்கின்றன. இவை நம்மைக் காப்பாற்றுகின்றன; வழி காட்டுகின்றன.

“இத்தகைய மகத்தான உள்ளுணர்வைப் பற்றிய அறிவை நாம் கவனிக்காமல் பெரிதும் புறக்கணித்து விட்டோம்'' என்று கூறுகிறார், ஒரு ஹார்வர்டு பல்கலைக்கழக மனோதத்துவப் பேராசிரியர்.

மார்க்கோனி ரேடியோவைக் கண்டுபிடித்தார் என்பது நமக்குத் தெரியும். மின்காந்த அலைகள் மூலம், ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் செய்திகளை அனுப்பலாம் என்று அவர் சொன்னபோது, அன்றைய விஞ்ஞானிகள் அவரை மறுத்தனர். “மின்காந்த அலைகள் நேராகச் செல்லக்கூடியவை. ஆகவே அவை பூமியிலிருந்து புறப்பட்டால் வானவெளியில் போய்விடும்'' என்று அபிப்பிராயப்பட்டார்கள். வானவெளியில் ‘அயனக் காற்று' சூழ்ந்திருக்கிறது என்பதும், அது மின் காந்த அலைகள் மீண்டும் பூமிக்கே திரும்பிவிடும் என்பது பற்றியும் அப்போது யாருக்கும் தெரியாது.

மார்க்கோனிக்கு ஏதோ ‘ஒரு நினைப்பு' முடியும் என்று கூறியது. உண்மையும் அதுவாகவே அமைந்தது.

ஐரோப்பாவில், முன்பு, ஆஸ்பத்திரியில் பிரசவித்த பெண்மணிகளுக்கு ‘பர்யரீயுல்' ஜுரம் என்ற ஒரு வியாதி ஏற்பட்டது; அதன் விளைவாகப் பலர் மாண்டனர். காரணம், அப்போது டாக்டர்கள் பிண அறுவை அறையிலிருந்து நேராக வந்து பிரசவம் பார்ப்பார்கள். அவர்கள் கையிலிருந்த கிருமிகள் ஒட்டிக்கொண்டு. பிரசவித்த பெண்மணிகள் சுரம் கண்டார்கள். இது நிகழ்ந்தது பாஸ்டியூர் காலத்திற்கு முன்; அதாவது கிருமிகள் நோய்க்குக் காரணம் என்று அறியப்படாத காலம். சேம்பல் ஒய்ஸ் என்ற மருத்து

வர், "பிண அறுவையிலிருந்து வரும் மருத்துவர்கள், கைகளை வெகு சுத்தமாகக் கழுவிக் கொண்டு வர வேண்டும். அங்கிருந்துதான் இவ்வியாதி வருகிறது" என்று சொன்னார். அதாவது மருத்துவர்கள்தான் நோய்க்குக் காரணம் என்றார் அவர். "மருத்துவர்கள் கொலைகாரர்களா?" என்று மருத்துவ உலகம் வெகுண்டு எழுந்தது. சேம்பல் ஒய்ஸ் தம் காலத்திற்கு முன் ஓர் எண்ணத்தைக் கண்டார். அவர் கண்டுபிடிப்பு உண்மையானது. ஆனால் அதை உலகம் ஏற்றுக் கொள்ள—அதற்கேற்ற விஞ்ஞான ஆதாரங்கள் வெளி வர—நாளாயிற்று.

காரண காரியங்களுக்கு அப்பாற்பட்ட உண்மை களை உள்மனம்—உள்ளுணர்வு கூறுகிறது. நாம் அதை மதிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும்.

சகஜமாக, நமது புலனறிவு பழக்கப்பட்ட வேலை களில் ஈடுபட்டிருக்கும்போது உள்ளுணர்வு வேலை செய்கிறது. நாம் சைக்கிளை மிதிக்கும்போதோ, இசை யைக் கேட்கும்போதோ, பேப்பர் படிக்கும்போதோ, திடீரென்று உள்ளுணர்வு புது விஷயங்களுடன் புதிய செய்தியுடன் வெளிப்படுகிறது. சில கணமே இவ் வெண்ணங்கள் மனத்தில் நிற்கின்றன. நாம் அதை உடனே புரிந்து கொள்ளவும், உபயோகிக்கவும் பழகிக் கொள்ள வேண்டும்.

ஆர்க்கிமிடீஸ் தொட்டியில் குளித்துக் கொண் டிருந்தபோது "ஒரு பொருளின் கனபரிமாண அளவுக்குத் தண்ணீர் வெளியேறுகிறது" என்ற உண்மை தெரிந்தது. "கண்டுபிடித்து விட்டேன் கண்டுபிடித்துவிட்டேன்" என்று சொல்லிக் கொண்டு நிர்வாணமாகத் தெருவில் ஓடினார் அவர்! ஏனெனில் அந்நாட்டு ராஜா தனது கிரீடத்தின் கனபரிமாண

அளவையும் அதிலிருந்து அக்கிரீடத்தில் இருப்பது தங்கமா, செம்பா என்பதையும் நிர்ணயிக்குமாறு கூறி யிருந்தார் ஆர்க்கிமிடீஸிடம்.

பல சமயம் உள்ளுணர்வு நம்முன் கனவாக வெளிப்படுகிறது. நெருக்கடியான பிரச்னைகளை எண்ணிக்கொண்டு தூங்கும்போது திடீரென்று நம் கனவில் வழி பிறக்கிறது.

அப்படி ஒரு விசித்திரமான சம்பவம் நேர்ந்தது கெகுலே என்ற விஞ்ஞானிக்கு. அவர் காலத்தில் இருந்த ரசாயனப் பொருள்களின் அமைப்பு எல்லாம் ஒரு நூல்போல் நேர்கோடாகவோ அல்லது திராட்சைக் கொத்துபோல் ஒரு குலையாகவோதான் அமைந்திருப் பதாகக் கண்டிருந்தார்கள். ஆனால் பென்சீன் என்ற பொருளின் அமைப்பு இதற்கெல்லாம் ஒத்துவரவில்லை. பிடிபடாத இப்பிரச்னையுடன் கெகுலே ஒரு நாள் மதிய வேளையில் கண்ணயர்ந்தார். அவரது பகல் கனவில் ஒரு பாம்பு தோன்றியது. சிறிது நேரத்தில் பாம்பின் வாலைப் பாம்பு விழுங்கத் துவங்கியது. கெகுலே விழித் தெழுந்தார். "பாம்பின் வாலை அப் பாம்பே சாப்பிடு வதா?" இது என்ன புதிர்? அப்படி நிகழும்போது அங்கே என்ன தோன்றியது? ஒரு வளையம்! அதாவது பென்சீன் என்ற பொருளின் அமைப்பு ஒரு வளையம போலிருக்கிறது என்று தீர்மானித்தார். அது எல்லா உண்மைகளுககும் ஒத்து வந்தது. கனவில நமக்கு, சில வழிகள சில குறியீடுகளாக வருகின்றன.

கணித மேதை ராமானுஜம் தனது கணக்குகளுக் கெல்லாம் பதிலை நாமகிரிபேட்டை அம்மன் கொண்டு தருவதாகக் கூறியிருக்கிறார்கள்.

நமது ஆழ்மனத்திற்கு எங்கோ இப் பிரபஞ்சத் துடன் தொடர்பு இருக்கிறது. நாம் நெருக்கடிகளால் நிறைக்கப்படும்போது இப் பிரபஞ்ச அறிவு நமக்கு உதவுகிறது.

# உள்ளுணர்வு கனவாக வெளிப்படுகிறது!

**தை**யல் இயந்திரத்தை நாம் எல்லோரும் பார்த்திருக்கிறோம். தையல் இயந்திரம் வருமுன்னே நாம் ஊசி நூலால் துணி தைத்துக் கொண்டிருந்தோம். நமது ஊசியின் காது மேல் கோடியில் இருக்கிறது. இதை இயந்திரமாக அமைக்க, ரோவே என்ற அமெரிக்கர் முயன்றார். அவரோ, கை, கால் முடக்கப் பட்டவர். அவரது மனைவி துணி தைப்பவர்.

ரோவேயின் மிகப்பெரிய பிரச்னை, எப்படி ஊசியை இயந்திரத்துடன் நிரந்தரமாக இணைத்த வண்ணம் துணி தைக்குமாறு செய்வது? நாம் கையால் தைக்கும் போது முழுஊசியும் துணியில் புகுந்து புறப்படுகிறது. ஆனால இயந்திரத்தில அப்படிச் செய்வது சாத்தியமில்லை. இதறகு ஏதாவது ஒரு வழி இருக்கும் என்று எண்ணினார். தினம தினம் இதைப்பற்றிச் சிந்தித்து மண்டையைப் போட்டுப் பிய்த்துக் கொண்டார். ஒரு நாள் கனவு கண்டார். அங்கே ஆப்பிரிக்கா மாமிச பட்சணிகள் அவரைத் தின்றுவிடத் தீர்மானித்து, அவரைச் சுற்றி நடனமாடுகிறார்கள். "24 மணி நேரத்தில் நீ தையல் இயந்திரத்தைக் கண்டுபிடித்தால ஆயிற்று; இல்லாவிட்டால் உன்னைச் சாப்பிட்டு விடுவோம்!'' என்றார்கள். அவர்கள் கையில் ஈட்டி இருக்கிறது. "இது என்ன ஈட்டி? ஈட்டியின் முனையில் ஓர் ஓட்டை இருககிறதே?''

இத்தகைய கனவுடன் அவர் விழித்துக் கொண்டார். 'ஈட்டி முனையில் ஓர் ஓட்டை! ஈட்டி தைக்கும் ஊசியாக விரிந்தது. தைக்கும் ஊசியின்

அடிக்கோடியில் ஓர் ஓட்டை தெரிந்தது. தையல் இயந்திர ஊசியின் அடியில் காது வைத்து இயந்திரத் துடன் ஊசியை இணைத்தார். அது வேலை செய்தது.

ஆழ்மனம் 'திடீர்' நினைப்புக்களாகவும், கனவாக வும் வெளிப்படுகிறது. ஆழ்மனம் எங்கிருந்து இந்தச் செய்திகளைப் பெறுகிறது?

இத்தகைய கேள்விகளுக்குப் பீடர் ஹியூர்க்கோ வின் கதை ஓரளவு பதில் சொல்கிறது. பீடர் ஹியூர்க்கோ இன்று அமெரிக்காவில் வாழ்கிறார். ஹாலந்திலிருந்து இங்கு குடியேறினார். அமெரிக்காவில் ஐரோப்பாவில் நடந்த பல கொலைகளையும் திருட்டுக் களையும் துப்புத் துலக்க இவர் பெரிதும் உதவியிருக் கிறார் கண்ணை மூடிக்கொண்டு சிலசமயம் ஆழ்ந்து யோசிக்கும்போது, பல நிகழ்ச்சிகள் அவர் கண் முன் தெரிகின்றன. அதை அப்படியே விவரிக்கிறார். இதன் உதவிகொண்டு போலீஸ் குற்றங்களைக் கண்டு பிடிக் கிறது. பயங்கரமான கொலை, கொள்ளை, திருட்டு இவற்றைக் கண்டுபிடிக்க இவர் உதவியிருக்கிறார்.

இத்தனைக்கும் இவர், முன்னாளில், பெயிண்டராக வேலை பார்த்த ஒரு சாதாரண மனிதர். ஒரு நாள் ஓர் இரண்டாவது மாடிக் கட்டடத்தின் வெளிப்புறத்தில் பெயிண்ட் அடித்துக் கொண்டிருக்கும்போது ஏணி தவறிக் கீழே விழுந்தார். அப்படியே மயக்க நிலையில மூன்று நாட்கள் உயிருக்கு ஊசலாடினார். மூளையில் நல்ல அடிபட்டிருந்தது. உடல் குணமானவுடன் அவருக்கே பயமளிக்கும் வகையில், எதைப்பற்றியும் எண்ணியவுடன் பல விஷயங்கள் அவருக்குத் தெரிய ஆரம்பித்தன. மருத்துவர்கள் இவர் திறனைப் பல முறை சோதித்தார்கள். இவர் திறன் அதிசயிக்கும விதத்தில் இருநதது.

ஆழ்மனம் சிலசமயம் நமக்கு எதிர்பாராமல் உதவு கிறது. சிலசமயம் கனவில் வெளிப்படுகிறது. ஞானி களுக்கோ எல்லாச் சமயங்களிலும் இது உதவுகிறது. ஆனால் பீடர் ஹியூர்க்கோவின் வாழ்க்கையைப் பார்த் தால் மனித மூளையில் சில மாற்றங்களை ஏற்படுத்து வதன் மூலம் சாதாரண மனிதர்கள்கூட இதைப் பெற முடியும் என்று தெளிவாகிறது.

மனித மூளையில் ஏற்படும் மாறுபாடுகளால் இது விளையக்கூடும் என்பதற்குச் சரித்திரத்தில் மற்றொரு சம்பவம் இருக்கிறது. சார்ல் வாலஸ் என்ற விஞ்ஞானி டார்வின் போல பரிணாமக் கொள்கைபற்றி ஆராய்ந்து வந்தார். ஒரு சமயம அவர் மருத்துவமனையில் கடும் சுரம் வந்து படுத்திருந்தபோது, பல விஷயங்கள அவருக்குப் புலனாயின. தம் எண்ணங்களை ஒரு தாளில் எழுதி சார்லஸ் டார்வினுக்கு அனுப்பினார் அவர்.

டார்வின் அதைப் படித்ததும் அயர்ந்து போய் விட்டார். பல ஆண்டுக் காலமாக உழைத்து அவர் உருவாக்கிய 'வாழத் தகுதியுள்ளதே வாழ்கிறது' என்ற பரிணாமக் கொள்கையைத் தமக்கு முன் வாலஸ் எழுதி விட்டாரே என்ற எண்ணம் அவரை ஆட்கொண்டது. பரிணாமக் கொள்கைக்கு டார்வினுடன் வாலசுக்கும் பங்கு உண்டு என்ற உண்மையை விஞ்ஞான உலகம் ஏற்றுக் கொண்டது.

கடும் சுரத்தில் மூளையில் ஏற்பட்ட மாறுதல்கள் எப்படிப் பரிணாமக் கொள்கையின் தத்துவங்களை வாலசுக்குக் கொண்டு தந்தது என்பதைக் கவனி யுங்கள். பீடர் ஹியூர்க்கோ ஏணியிலிருந்து விழுந்தார். வாலஸ் கடும் சுரத்தின்போது சில உண்மைகளைக் கண்டார். மூளை மாறுபாட்டின் மூலம் ஆழ்மனத்தைத் திறக்க முடியும் என்ற உண்மை இதனால் விளங்கு கிறது.

"சில சிக்கலான பிரச்னைகள் தோன்றும்போது அதைப் பல வழிகளிலும் அலசுங்கள். தீவிரமாக எண்ணிவிட்டுப் பின் விட்டுவிடுங்கள். அதை மறந்து விட்டு வேறு வேலையில் ஈடுபடுங்கள். மனம் தானுகத் திடீரென்று வழி காட்டும்'' என்கிருர்கள் மனேதத்துவ அறிஞர்கள்.

நமது ஊரில் சிலருக்குச் சில சமயம் 'சாமி வந்து விடுகிறது.' அவர்கள் அப்போது புலனறிவில் இருப்ப தில்லை. அப்போது அவர்கள் கூறும் விஷயங்கள் பிரபஞ்ச அறிவிலிருந்து பெறப்படுகின்றன. இத் தகைய சோதிடங்கள், சாமியாடடம் எல்லாம் உலகின் எல்லாப் பகுதிகளிலும் காணப்படுகின்றன. எல்லாப் பழங்குடி மககளிடமும் இவ்வழக்கம் பயிலப்படுகிறது. இது ஒரு பழக்கமாக வளரும்போது பூசாரிகள் பிறரை நம்ப வைக்க இதை ஒரு கருவியாக உபயோகிக் கின்றனர். அப்போது நமக்கு எது ஆழ்மனம் காட்டும் உண்மை, எது பொய் என்பது பிடிபட வழியில்லை. ஆகவேதான் சிலசமயம் 'சாமியாட்டம்' வெறும் 'ஆள் ஆட்டமாக'—பொய்யாகப் போய்விடுகிறது.

நமது தினப்படி வாழ்வில் நாம் நமது ஆழ் மனத்தை உபயோகிக்கச் சில பயிற்சிகளை மேற் கொள்ளலாம். "அதாவது பாலையோ, அரிசியையோ அளக்கும்போது ஒரு குத்துமதிப்பாக நம்பி, அளந்து பழகுங்கள். டெலிபோன் மணி அடித்தால், யார் கூப்பிடுவார்கள் என்று எண்ணி எதிர்பார்த்துப் போய் எடுங்கள்; இன்று இன்னரிடமிருந்து கடிதம் வந்திருக் கும் என்று எண்ணித் தபால்காரரிடமிருந்து கடிதத் தைப் பெறுங்கள்'' என்று யோசனை கூறுகிருர்கள் சில ஆசிரியர்கள்.

நிகழப்போகும் நிகழ்ச்சிகள் எப்படி இருக்கும் என்று மனத்தில் ஓர் எதிர்பார்க்கும் பழககத்தை ஏற்படுத்துங்கள். உங்கள் ஆழ்மனம் உங்களுக்கு உதவும் என்கிருர்கள் அறிஞர்கள்.

# அதிர்ஷ்டமும் மனநிலையும்

**வா**ழ்வில் நமக்குப் பல சந்தர்ப்பங்கள் நேருகின்றன. வாய்ப்புக்கள் வாய்க்கின்றன. நம்மில் பலரும் அவற்றை அதிர்ஷ்டம் என்றும், பொசுப்பு, பிராப்தம் என்றும் சொல்லக் கேட்டிருக்கிறோம். சில சமயம் நமது இயலாமையை மறைக்கப் பிறரைப் பார்த்து, "அதிர்ஷ்டக்காரன், கொடுத்து வைத்தவன்'' என்று சொல்ல விரும்புகிறோம்.

பல விஞ்ஞானிகளின் வாழ்வில், தொழில் மேதைகளின் வாழ்வில், கலைஞர்களின் வாழ்வில் இது நேர்ந்திருக்கிறது. அவர்களைப் போய் நாம் கேட்டுப் பார்க்க வேண்டும். "ஐயா! எப்படி இது நேர்ந்தது உங்கள் வாழ்வில்?'' என்று பல விஞ்ஞானிகளின், தொழிலதிபர்களின் வாழ்க்கைச் சரித்திரத்தைப் படித்துப் பார்க்க வேண்டும், எப்படி நேர்ந்தது அவர்கள் வாழ்வில் என்று அறிய. திரு.வி.க. தமது 'வாழ்க்கை வரலாறு' என்ற நூலில் இத்தகைய தத்துவப் பிரச்னைகளை எடுத்து அலசுகிறார். நமது ஊரில் ஊழ்வினைக்கு—விதிக்கு—நாம் முக்கியத்துவம் பெரிதும் அளிப்பதால் நாம் 'அதது அவனவன் தலையில் எழுதியபடி நடக்கிறது' என்று நினைக்கிறோம். ஊழ்வினையின் பங்கு இருக்கலாம்; ஆனால் நாம்தான் நமது மன எண்ணங்களால் நமது அதிர்ஷ்டத்தை உருவாக்குகிறோம்.

வாழ்வின் மிக முக்கியமான பிரச்னை—நாம் நம் வாழ்வில் அதிர்ஷ்டத்தைத் தோற்றுவிக்க முடியுமா என்பதுதான். மிகப் பெரிய தத்துவ ஞானிகளும் மன

நூல் அறிஞர்களும் 'முடியும்' என்றுதான் கூறு கிறார்கள்.

விஞ்ஞான உண்மைகள் எப்படிக் கண்டு பிடிக்கப் பட்டன, என்பதை விஞ்ஞானிகள் சரித்திரமாக எல்லோரும் அறிந்துகொள்ளும் வண்ணம் எழுதி வைத்திருக்கிறார்கள். 'தயாராயுள்ள மனம், சந்தர்ப் பத்தைச் சந்திப்பதைத்தான் அதிர்ஷ்டம் என்று கூறு கிறோம் என்று விளக்குகிறார் பாஸ்டியூர். ஒரு விஷ யத்தைப்பற்றி ஆதியோடு அந்தம்வரை கரைத்துக் குடித்துவிட்டு வழி தெரியாமல் திண்டாடிக் கொண் டிருக்கும்போது, ஒரு சிறு சம்பவம் நேருகிறது. உடனே மனம் நமது பிரச்னையுடன அதை இணைத்து முடிவு காண்கிறது. சொல்லப் போனால் மனம் சதா 'பிரச்னைக்கு வழி என்ன?' என்று ஆராய்ந்த வண்ணம், எதிர்பார்த்த வண்ணம் இருக்கிறது. மனம் விழித்துக கொண்டிருககிறது. மனம் எதிர்பார்க்கும்போது, எதிர்பார்ப்பதே நேருகிறது. மனம் எதிர்பார்க்கும் நிலை யில் இருக்கும்போது எது நிகழ்ந்தாலும், மனம் அதை ஈடுபடுத்தி வழி காண முயல்கிறது. இதுதான் உண்மை.

அலெக்சாண்டர் ஃபிளெமிங், பெனிசிலின் கண்டு பிடித்தார். அதற்குமுன் காளான்களிலிருந்து கிருமி களைக் கொல்லும் பொருள் உற்பத்தியாகும் என்ற உண்மை யாருக்கும் தெரியாமலிருந்தது. அவர் மைக்ரோஸ்கோப்பில் வைத்துப் பார்த்தபோது, சில கிருமிகள் செத்திருந்ததையும், அவற்றிற்கருகில் சிறு பூஞ்சைக்காளான் முளைத்திருந்ததையும் கண்டார். அவருடைய ஆழ்மனம் கண்டு பிடிப்புகளை— ஆராய்ச்சி முடிவுகளை எதிர்நோக்கிக்கொண்டிருந்தது. புலனறிவுக்குட்பட்ட மனமோ ஒரு நிகழ்ச்சியைக

கண்டது. அந்நிகழ்ச்சிகளை—கிருமிகள் இறந்ததையும் அருகில் காளான் முளைத்திருப்பதையும் இணைத்தது. ஆழ்மனம் சந்தர்ப்பங்களைக் கொண்டு வந்து நிறுத்தியது என்று கூறலாமா? ஆம்; நாம் எதிர்பார்ப்பதற்கேற்பச் சந்தர்ப்பங்கள் அமைகின்றன. நமது புலனறிவு அதைப் பயன்படுத்திக் கொள்கிறது.

நியூட்டனின் கண்டுபிடிப்பும் இப்படித்தான். இப்பிரபஞ்சத்தில் எப்படிக் கோளங்களும் கிரகங்களும் நிற்கின்றன என்ற பெரிய பிரச்னை அவருக்குள் இருந்தது. பல நாள், பல மாதங்கள் யோசித்துக் கொண்டிருந்தபோது ஓர் ஆப்பிள் சிந்தனையைக் கிளறி விட்டது. ஒரு தொடர்பைக் காட்டியது. புவிஈர்ப்புச் சக்தி பிறந்தது.

எலிவிட்னி என்ற 24 வயது இளைஞர் பருத்திக் கொட்டையைப் பிரித்தெடுக்கும் யந்திரத்தைக் கண்டு பிடித்ததும் அப்படித்தான். "இதற்கொரு விடை இருக்கவேண்டும் என்று திடமாக நம்பினேன்" என்றார் அவர். சில நாட்களில் பருத்தியிலிருந்து கொட்டையைப் பிரித்தெடுக்கும் யந்திரத்தை அவர் செய்து முடித்தார்.

எல்லாக் கண்டுபிடிப்புகளையும் நாம் அலசி ஆராய்வோமானால் ஓர் மகத்தான உண்மை புலப்படும். 'ஓர் உறுதியான தொடர்ந்த எதிர்பார்க்கும் மனோபாவம் அவர்களிடையே இருந்தது' என்பதுதான் அது. எத்தனை முறை நீங்கள் ஒருவர் வீட்டுக்குப் போகும்போது, "உங்களைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்" என்றோ, "உங்களைப் பற்றித்தான் எண்ணிக் கொண்டிருந்தேன்" என்றோ சொல்லக் கேட்டிருக்கிறீர்கள்?

பென்சிலின் கண்டுபிடித்த ஃபிளெமிங்கின் வாழ்க்கையைப் பார்த்தால் அவர் மருத்துவரான விதமே ஒரு சந்தர்ப்பத்தால் நேர்ந்ததும், அவர் குறிப்பிட்ட மருத்துவ மனையில் பயிற்சி பெறச் சென்றதும் ஒரு குறிப்பிட்ட பாடத்தில் தம் கவனத்தைச் செலுத்தியதும்—எல்லாம் எதிர்பாராத சம்பவங்களாகத் தோன்றுகின்றன.

காம்மரெர் என்ற விஞ்ஞானியும், ஜங் என்ற மனோதத்துவ நிபுணரும் தங்கள் வாழ்நாளில் நிகழ்ந்த எதிர்பாராதசம்பவங்களை எல்லாம் எழுதித் தொகுத்து ஆராய்ந்தார்கள். அவர்கள் ஆராய்ச்சிப்படி 'எதிர்பாராத சம்பவங்கள்' எல்லாம் நீருக்குமேல் தெரியும் பனிக்கட்டி போல, புலனறிவுக்குப் புலப்படும் விஷயங்கள் என்றும், நீருக்கடியில் நம் கண்ணுக்குத் தெரியாமல் பெரிய பனிப்பாறையின் அடிப்பாகம் இருப்பது போல ஆழ் மனத்தில் பல விஷயங்கள் நிகழ்கின்றன என்றும், அதன் விளைவே இந்த 'எதிர்பாராத சம்பவங்கள்' என்றும் முடிவுக்கு வந்தார்கள். இப்படி நிகழும் சம்பவங்களில் ஓர் ஒழுங்கு இருப்பதாயும், அவை, ஒரு வசந்தகாலம், குளிர் காலம்போல, திரும்பத் திரும்ப நேர்கின்றன என்றும் கூறுகிறார்கள்.

பல தொழிலதிபர்களின் எண்ணங்களும் பல கலைஞர்களின் ஆசைகளுமே அவர்களது வாழ்வில் வாய்ப்புக்களாக, சந்தர்ப்பங்களாக அமைந்து, பிரமாதமான எதிர்காலத்திற்கு வழி வகுக்கிறது என்பதை அவர்களைக் கேட்டால் கூறுவார்கள்.

எதிர்காலத்தைப் பற்றி எதிர்பார்க்கும் மனோபாவமே—ஒரு தொடர்ந்த உறுதியான மனநிலையே அதிர்ஷ்டங்களை நம் வாழ்வில் ஏற்படுத்துகிறது.

# புலனறிவும் பகுத்தறிவும்

புலன்களின் மூலம் ஓர் உணர்வைப் பெறுகிறோம். பின்னால் அது அநுபவமாக நமக்கு அமைகிறது. 'தீ சுடும்,' 'பாகற்காய் கசக்கும்', 'ரோஜா மணம் வீசும்' என்று முதன் முறையாகக் குழந்தை கண்டுபிடிக்கும் போது உணரும் புலனறிவு பின்னால் அநுபவமாக உதவுகிறது. புதிய சூழ்நிலையில், மீண்டும் ஓர் அனுபவம் அதைப்போன்று ஏற்படும்போது, நமது பழைய அனுபவம் என்ற உரைக்கல்லில் புதிய அனுபவத்தை உரசுகிறோம். இப்போது நமது காரண காரியம் காட்டும் அறிவு—தர்க்கவாத அறிவு—பகுத்தறிவு வேலை செய்கிறது.

நமது அன்றாட வாழ்க்கைக்கு, காரண காரியம் காட்டும் பகுத்தறிவு மிக இன்றியமையாதது. மிகப் பெரிய மேதைகளுக்கு அடுத்த நிலையில் சிறந்து விளங்கும் பல மனிதர்களும் தலைவர்களும் காரண காரியம் காட்டும் பகுத்தறிவுவாதிகளாக விளங்கு வதைக் காணலாம்.

ஒரு மருத்துவர், நோயின் பல அறிகுறிகளைக் கண்டு, 'நோய் இதுதான்' என்று தீர்மானிக்கிறார். ஓர் அரசியல்வாதி, அரசியல் மேடைகளில் காரண காரியம் காட்டித் தம் வாதங்களைப் பொதுமக்கள் முன் வைக்கிறார். ஒரு வழக்கறிஞர் ஒன்றன்மேல் ஒன்றாகத் தம் வாதங்களைச் சோடித்து வழக்கின் நியாயத்தை நிரூபிக்கிறார். ஒரு கணக்கெழுத்தாளர் பற்று, வரவு,

லாபம், நஷ்டம் என்று படிப்படியாகக் கம்பெனியின் வரவு செலவினங்களை அமைத்து நிலையினைத் தெளிவு படுத்துகிறார். இவை அனைத்தும் தர்க்கவாத—காரண காரியம் காட்டும் அறிவு.

ஒரு கவிஞனது மகத்தான கவிதையைப் படிக்கும் போதோ, ஓர் ஓவியனின் சிறந்த ஓவியத்தைப் பார்க்கும்போதோ, ஓர் இசைமேதையின் புதிய ராக ஆலாபனையைக் கேட்கும்போதோ, ஒரு விஞ்ஞானியின் பெரிய கண்டுபிடிப்பைக் காணும்போதோ அவை அனைத்தும் 'திடீரென்று' புதிதாகப் பிறந்த அனுபவங் களாய் அமைவதை உணர்கிறோம். இத்தனை நாள் அறிந்துவந்த காரண காரியம் காட்டும் அறிவுக்குச் சம்பந்தப்படாத எண்ணமாக அவை அமைவதை உணர்கிறோம். இதைத்தான் ஆங்கிலத்தில் Lateral Thinking என்று கூறுகிறார்கள். காரண காரியம் காட்டும் அறிவு ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கப் படுவதாகையால், அதை Vertical Thinking என்று கூறுகிறார்கள்.

காரண காரியம் காட்டும் அறிவைப் பூமியில் குழி தோண்டுவதற்கு ஒப்பிடலாம்; கடைசியில் அடியில் நீர் சுரந்தால் அதைத் தோண்ட நாம் பாடுபட்ட அத்தனை உழைப்பின்மீதும் அதன் பலன் கட்டப் பட்டிருக்கிறது. 'நேரடிச் சிந்தனை' அதுபோலத்தான்.

நீர் இல்லாவிட்டால், அந்தக் குழியை மூடிவிட்டு வேறு இடங்களில் குழி தோண்டிப் பார்ப்பதற்கு ஒப்பானது வேறுவழிச் சிந்தனைகள்.

"முட்டையைச் செங்குத்தாக நிற்க வைக்க முடியுமா?" என்று கொலம்பஸ் கேட்டதாக ஒரு கதை உண்டு. எல்லோரும் முட்டை எப்படிச் செங்குத்தாக

கிற்கும் என்று யோசித்துக் கொண்டிருக்கும்போது, முட்டையின் அடிப்பாகத்தை ஒரு தட்டு தட்டி அதை உட்கார வைத்தார் கொலம்பஸ். நாமெல்லாம் அதிகம் இந்த 'நேரடிச் சிந்தனை'யிலேயே பழக்கப்பட்டிருக்கிறோம்; வளர்க்கப்பட்டிருக்கிறோம். "எப்படி முடியும்?" என்பது நேரடிச் சிந்தனை. அடியில் தட்டுத் தட்டி உட்கார வைப்பது வேறுவழிச் சிந்தனை.

உதாரணமாக, பழங்கள் மரத்திலிருந்து விழுவதை நாம் தினமும் பார்த்திருக்கிறோம். கேட்டால், 'இது உலக இயல்பு' என்போம். ஆனால் நியூட்டனுக்கோ பழம், பூமியை நோக்கி இழுக்கப்படுவதாகத் தோன்றியது. அதன் விளைவாக, புவிஈர்ப்புச் சக்தி பிறந்தது.

லண்டனில் ஒரு பணக்காரக் கிழவன் ஓர் ஏழை விவசாயிக்குக் கடன் கொடுத்தான். விவசாயியினால் பணத்தைத் திருப்பிக் கொடுக்க முடியவில்லை. ஆனால் விவசாயிக்கு ஓர் அழகுமிக்க பெண் இருந்தாள். அவளைத் தனக்குத் திருமணம் செய்து கொடுத்தால் கடனைத தள்ளிவிடுவதாகக் கூறினான் கிழவன். விவசாயியும் அவன் மகளும் இதற்கு உடன்படவில்லை. பிறகு கிழவன் ஒரு யோசனை சொன்னான்: "நமது முடிவைத் தெய்வத்துக்கு விட்டுவிடுவோம். இந்தக் காசுப்பையில் ஒரு வெள்ளைக் கூழாங்கல்லையும் கறுப்புக் கூழாங்கல்லையும் போடுகிறேன். உன் பெண் கையை விட்டுக் கறுப்புக் கூழாங்கல்லை எடுத்தால் அவள் என்னைத் திருமணம் செய்துகொள்ளவேண்டும். அவள் வெள்ளைக் கூழாங்கல்லை எடுத்தால் அவள் என்னைத் திருமணம் செய்து கொள்ள வேண்டாம். கடனைத் தள்ளிவிடுகிறேன்" என்றான்.

வேறு வழியில்லாததால் விவசாயியும் அவன் மகளும் இதை ஒப்புக்கொண்டனர். ஒரு நாள் மாலை கூழாங்கல் நிறைந்து கிடந்த தோட்டப் பக்கமாக மூவரும் நடந்து கொண்டிருந்தனர். அப்போது கிழவன் குனிந்து கூழாங்கற்களை எடுத்துப் பையில் போட்டான். அந்தப் பொல்லாத கிழவன் இரண்டு கறுப்புக் கூழாங்கற்களை எடுத்துப் பையில் போடுவதை அந்தப் பெண் கவனித்துவிட்டாள்...என்ன செய்வாள், அந்தப் பெண்?

நமது காரண காரியம் காட்டும் அறிவின்படி அந்தப் பெண் பையிலிருந்து கூழாங்கல்லை எடுக்க மறுக்கலாம். அல்லது இரண்டும் கறுப்புக் கற்கள் என்று காட்டி அவன் செயலை அம்பலப்படுத்தலாம். அல்லது ஒரு கறுப்புக் கல்லை எடுத்துத் தொலைத்து அவனை மணம் செய்துகொண்டு அவன் சாகும் நாளை எதிர்பார்க்கலாம்!

இவற்றைத்தான் நேரடிச் சிந்தனைகள் என்கிறோம். வேறு வழிச் சிந்தனையாளர்களோ ஒரு பிரச்னை சம்பந்தப்பட்ட பல்வேறு கோணங்களையும் யோசிக்கிறார்கள்.

கதையில் வரும் பெண், பையில் கையை விட்டாள். ஒரு கூழாங்கல்லை எடுத்தாள்; உடனடியாக அதைத் தவறவிட்டாள். கீழே கிடந்த மற்றக் கற்களுடன் ஒன்றாக அது மறைந்தது. "எனக்குக் கை நடுங்குகிறது" என்றாள் அவள்.

"நீங்கள், பையில் பாக்கியிருப்பது என்ன நிறக்கல் என்று பார்த்தால், நான் எதை எடுத்தேன் என்று சொல்லிவிடலாம்" என்றாள்.

பையில் பாக்கியிருப்பது கறுப்பு நிறக்கல். ஆத லின் எடுத்தது வெள்ளையாகத்தான் இருக்க வேண்டும். 'அவனை அம்பலப்படுத்தலாம்' என்றோ அல்லது மாட்டிக்கொண்டேன்' என்றோ எண்ணுவதற்குப் பதில் அந்தப் பெண் முற்றிலும் வேறுபட்ட வழியில் சிந்தித் தாள். அந்தத் தந்திரக்காரனைத் தனது சாமர்த்தியத் தினால் தோற்கடித்தாள்.

தெனாலிராமன் கதைகளெல்லாம் 'எப்படி வேறு வழிச் சிந்தனைகள் உதவுகின்றன' என்பதற்கு எடுத்துக்காட்டாய் அமைந்திருக்கின்றன.

இன்ன நிலையில், இப்படி நேரும் என்ற முடிவுக்கு வருவதில் பகுத்தறிவு பயன்படுகிறது. அன்றாட வாழ்வில் பகுத்தறிவுதான் பெரிதும் உதவுகிறது. ஆனால் பகுத்தறிவுக்கு ஓர் எல்லை உண்டு. மகத்தான விஞ்ஞானக் கண்டுபிடிப்புகள் எல்லாம் காரணகாரியம் காட்டும் அறிவின்—பகுத்தறிவின் எல்லைகளைத்தான் காட்டுகின்றன. 'நேரடிச் சிந்தனையையும் வேறுவழிச் சிந்தனை'யையும் நாம் உபயோகிக்கும்போது, நம் புலனறிவு பூரணத்துவம் பெறுகிறது.

# பிரச்னையும் பயிற்சியும்

காரணகாரியம் காட்டும் அறிவை அதிகம் பயன் படுத்தும் வழக்கறிஞர்கள், தொழிலதிபர்கள், கணக்குப் பதிவாளர்கள்—இவர்கள் வாழ்க்கையை நோக்கினால் ஓர் அமைப்பு புலப்படும். இவர்கள் வாழ்க்கையில் ஓர் ஒழுங்கும், நியதியும், கட்டுப்பாடும் மிகுந்து காணப்படும். ஓர் அதிகார மனோபாவம் கொண்டவர்களாகவும், தாம் சொல்லுவது சரி என்று வாதிப்பவர்களாகவும் பெரும்பாலும் இவர்கள் இருப்பார்கள். ஒரு பழகிய பாதையில் போய் வந்து கொண்டிருக்கும் இவர்கள், புதியனவற்றை ஏற்றுக்கொள்ளத் தயங்குவார்கள். இவர்களுக்குக் கற்பனை கொஞ்சம் குறைவாக இருக்கும், பொதுவாக.

இதெல்லாம் அவர்கள் தொழில் ஏற்படுத்தும் மனப் பழக்கங்களால் விளைந்தவை.

அதேபோல் கவிஞர்களையும், ஓவியர்களையும், தத்துவ ஞானிகளையும், ஐன்ஸ்டைன் போன்ற மாபெரும் விஞ்ஞானிகளையும் எடுத்துக்கொண்டால், இவர்கள் மேற்சொன்ன குணங்களுககு முற்றிலும் மாறுபட்ட குணங்களைக் கொண்டவர்களாயிருப்பார்கள். கட்டுப்பாடு குறைந்தும், மனிதத்தன்மை மிகுந்து, இளகிய மனோபாவம் நிறைந்தும், அதிகார மனோபாவம் குறைந்தும், புதிய விஷயங்களில, பொருள்களில் அதிக ஈடுபாடு கொண்டும், எதைப்பற்றிப் பேசும்போதும் மாறுபட்ட கருத்துக்களுக்கு வரவேற்பளிக்கும் நிலையிலும் இவர்கள் நடந்து கொளவார்கள்.

பொதுவாக மனிதர்களை இப்படிப் பாகுபாடு செய்ய லாமே தவிர, மனிதர்கள் எல்லாம் கலந்த மனநிலையும், பழக்கமும் கொண்டவர்கள். மனித வாழ்க்கையின் வெற்றிக்கு இந்த இருபெரும் பிரிவுகளும் கலந்த நிலை இன்றியமையாதது. ஒரு பிரிவினரைப் பகுத்தறிவு வாதிகள் என்றும் மற்றைய தொகுதியை வேறு வழிச் சிந்தனையாளர் என்றும் குறிப்பிடலாம்.

நமது ஊரிலே சற்று அசாதாரணமாக, பம்மல் சம்பந்த முதலியாரிலிருந்து 'சோ' வரை, வழக்கறிஞர் கள் பலர் மிகுந்த கற்பனை வளம் கொண்டவர்களாக இருக்கிறார்கள். அதே போலவே மூதறிஞர் ராஜாஜியி லிருந்து, கலைஞர் கருணாநிதிவரை பல அரசியல்வாதி கள் வெறும் பகுத்தறிவாளராய் மட்டும் இல்லாமல் கற்பனை உள்ளம் கொண்டவர்களாய் இருக்கிறார்கள். ஆனால் இவர்களெல்லாம் பொது விதிக்கு விலக்கு.

மனிதன், காரண காரியம் காட்டும் அளவுடன் கற் பனையையும், புதிய கோணங்களையும் கலந்து செயல் படும்போதுதான் சிந்தனை சிறக்கிறது.

விஷயங்களைத் தீர யோசித்து முடிவு எடுக்கும் போது நாம் காரண காரியப் பாதையைப் பின்பற்று வது நல்லது.

பிரச்னையை நான்கு கூறுகளாகப் பாகுபடுத் தலாம். பிரச்னை என்ன? என்ன முடிவை விரும்பு கிறோம்? முடிவை அடையும் பல வழிகள் யாவை? அவற்றில் எது சிறந்த வழி? ஆகியவையே அவை.

எந்த மனமருத்துவர் அறைக்குள் நுழைந்தாலும் அவர் முதலில் கேட்கும் கேள்வி, "உங்கள் பிரச்னை என்ன?" என்பதுதான். வியட்நாம் போரைப்பற்றி யோசித்தால், அமெரிக்கா தனது பிரச்னையைத் தெளிவாக்கவில்லை என்பது விளங்கும். "வியட்நாமில்

கம்யூனிஸ்ட் அல்லாத அரசாங்கத்தை நிறுவுவது முக்கிய பிரச்னையா? அல்லது அமெரிக்க அரசாங்கத் திற்கு ஏற்ற கட்சியை அரசியல் பதவியில் வைப்பது நோக்கமா? கம்யூனிஸ்ட் சைனுவைப் பயமுறுத்த ஏற்படுத்திய நடவடிக்கையா?'' என்று, பிரச்னையில் அவர்களுக்குத் தெளிவில்லை.

நமது சொந்த வாழ்க்கையிலும் இப்படித்தான் நமது பிரச்னைகளை அலசினால் நாம் விஷயங்களைக் குழப்பிக் கொண்டிருப்பது தெரியவரும். பிரச்னை களைக் குழப்ப நிலையிலிருந்து மீட்டு, தெளிவு படுத்து வதுதான் இதன் நோக்கம். அதேபோல் என்ன முடிவை விரும்புகிறோம் என்பதையும் தீர்மானம் செய்து கொள்ள வேண்டும். பின் அதற்கான பல வழிகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும். இந்நிலையில் சொந்த விஷய மாயிருந்தால் நெருங்கிய நண்பர்களுடனும் பொது விஷயமானல் சிறந்த அறிஞர்களையும் கலந்து ஆலோ சிப்பது நல்லது. ஆங்கிலத்தில் இதைத்தான் (Brain stormind) என்று கூறுவார்கள். அதற்கு அரசிற்கு அமைச்சரவை என்ற ஒன்றும், தொழிலகங்களுக்கு இயக்குநர் (Board of Directors) என்ற ஒன்றும் அமைத்திருக்கிறார்கள்.

பிறருடைய யோசனைகளைக் கேட்டு ஆராய்ந்து முடிவெடுப்பது நல்லது.

நமது முடிவெடுக்கும் திறனைப் பல விஷயங்கள் பாதிக்கலாம். நமது பழக்கங்களும் மனப்போக்கும் ஒரு புதிய பிரச்னையைத் தொலைவில் நின்று பார்க்க முடியாமல்—ஆராய முடியாமல் தடுக்கும்.

அடுத்து, நமது விருப்பு வெறுப்புகள் நம்மில் ஒரு பிடிவாதத்தை ஏற்படுத்திவிடும். சில சமயம் இதனால் பழைய அனுபவங்களுக்கு எதிராகவும் பிறர் யோசனை

களுக்கு எதிராகவும் நாம் முடிவு செய்ய நேரிடும். பெரும்பாலான சமயம் நமது உணர்ச்சிகள் நம் முடிவெடுக்கும் திறனைப் பாதிக்கும். சில சமயம் நமக்கு ஏற்படும் அளவுகடந்த உற்சாகமும் ஆர்வமும் நம் அறிவை மறைப்பதும் உண்டு. ஆகவேதான் விஷயங்களை இரண்டு நாளோ அல்லது இரண்டு வாரங்களோ ஊறப்போட்டுப் பிறகு அணுகுங்கள், ஆராயுங்கள் என்கின்றனர் மனநூலார்.

பிரச்னைகளைப் புலனறிவால் உணர்ந்து பகுத்தறிவால் ஆராயும்போது அவ்வப்போது நமது வழிமுறைகளை நாம் புதியனவாகப் பார்க்கக் கற்றுக்கொள்ள வேண்டும்.

அதாவது பிரச்னைகளில் தடை ஏற்படும்போது சற்றுப் பின்வாங்கிப் புதிய உத்திகளையும் புதிய திட்டங்களையும் யோசித்தால், நமது பழக்க வழக்கங்களை மாற்றுதல், அவசியமானால் குறிக்கோளை மாற்றுதல், இந்தப் பலனுக்கு இத்தகைய பாடு தேவைதானா என்று கணக்கிடுதல சிலவாகும்.

சில சமயம் பரீட்சார்த்தமாகச் சிறு அளவில் நமது திட்டத்தை நிறைவேற்ற முயல்வது பல உண்மைகளைத் தெரிவிக்கும்.

முடிவெடுக்கும் திறன்பற்றி ஏன் இத்தனை விவாதம்? ஏனெனில் அன்றாட வாழ்வில்—சிறு பிரச்னைகள் பெரும் பிரச்னைகள் என்று—நம் வாழ்க்கை பிரச்னைகளால் நிறைந்திருக்கிறது. பல சிறு பிரச்னைகளில் சரியான முடிவெடுக்கும்போது வாழ்க்கை பல சிறு வெற்றிகளால் அமைகிறது; பல சிறு வெற்றிகளே வாழ்க்கையின் சாதனையாக அமைகின்றன.

பிரச்னை என்ன, முடிவென்ன, வழி என்ன, சிறந்த வழி எது என்று ஒவ்வொரு முறையும் ஆராய்ந்து, முடிவெடுப்பது ஒரு நல்ல மனப்பழக்கத்தை ஏற்படுத்தும். முடிவெடுக்கும் திறன், பயிற்சியால் பெறப்படுவதே ஒழிய வரப்பிரசாதமல்ல!

# எண்ணம், செயலாய், பழக்கமாய்...

'ஒரு மனிதனின் பழக்க வழக்கங்கள் அவனை அறிந்துகொள்ள உதவும் நல்ல மனக்கண்ணாடி' என்று அறிஞர்கள் கூறுகிறார்கள்.

நல்ல எண்ணங்களிலிருந்து நல்ல பழக்கங்கள் ஏற்படுகின்றன. அதேபோல் நல்ல பழக்கவழக்கங்களை வலுக்கட்டாயமாக அனுசரிப்பதன் மூலம், நமது மன ஓட்டங்களை—எண்ணங்களை மாற்றலாம். சுத்தமான சலவை வேஷ்டியையும், சலவைச் சட்டையையும் அணிந்து புறப்படும்போது மனத்தில் எழும் ஒரு புத்துணர்ச்சியை, ஒரு திருப்தியை, பெருமையை ஒரு கணம் நினைத்துப் பாருங்கள். புதிதாகப் போகும் ஓர் அலுவலகத்தினுள் எல்லாம் கச்சிதமாக, ஒழுங்காக, துப்புரவாக இருக்கும் ஒரு நிலை, நம் மனத்தில் எப்படி ஒரு சுறுசுறுப்பை ஏற்படுத்துகிறது என்று எண்ணிப் பாருங்கள். மனம் துயரத்திலோ சோகத்திலோ மூழ்கும் போது ஓர் இனிமையான பாட்டை முணுமுணுத்துப் பாடுங்கள். நம் மனநிலை மாறுபடுவதை உணர்வீர்கள்.

பிரச்னைகளுடன் வரும் மன நோயாளிகளை முதலில் மன மருத்துவர் ஓர் இதமான சாய்வுநாற்காலியில் படுக்கச் சொல்லுகிறார். இதமான படுக்கை ஒரு நிம்மதியையும், பாதுகாப்பையும் தருகிறது. இதனால் எண்ண நிலை மாறுகிறது.

ஊமைத்துரை ஒரு துரும்பைக் கையிலெடுத்து அதை நான்காகக் கிள்ளி உள்ளங்கையில் வைத்து

ஊதுவாராம். அவரது உள்ள வேகத்தை இது வெளிப் படுத்துகிறது. திறமைமிக்க திரைப்பட இயக்குநர்கள் கதாபாத்திரத்தின் கோபத்தையோ உணர்ச்சியையோ வசன மூலம் வெளிப்படுத்துவதைவிட்டு, கதாபாத்திரத் தின் ஒரு சிறு·செயல் மூலம் மன ஓட்டங்களைக் காட்டு கிறார்கள்.

நமது புற நடவடிக்கைகளை மாற்றவும் அதன் மூலம் நம் மன நிலையை மாற்றவும் மன நூலார் பல வழி களைக் கூறுகின்றனர்.

"முகத்தில் ஒரு புன்னகையைத் தவழவிடுங்கள். கொஞ்சம் கம்பீரமாக நின்று பாருங்கள். தலை நிமிர்ந்து நடவுங்கள். நடக்கும் வேகத்தைச் சிறிது அதிகப் படுத்திப் பாருங்கள். கூட்டங்களில் முன் வரிசைகளில் உட்கார்ந்து பழகுங்கள். பிறருடன் பேசும்போது குரலை உள்ளே விழுங்காமல் தெளிவாக நிதானமாகப் பேசிப் பாருங்கள். பிறருடன் பேசும்போது, கண்களைக் கண்ட இடத்திலும் பரவவிடாமல் பேசுபவரை நேரே நோக்கிக் கண்களைச் செலுத்துங்கள்" என்கின்றனர் மன நூலார். தன்னம்பிக்கைக்கும் தைரியத்திற்கும் இதைவிட நல்மருந்து வேறில்லை என்கின்றார்கள் அவர்கள்.

நல்ல நண்பர்களுடன் பழகுவது நல்ல மனப் பழக்கங்களை ஏற்படுத்தும். சிறந்த அறிஞர்களுடன் பழகுவது நமது அறிவு நிலையை மன அளவில் உயர்த் தும். சிறந்த லட்சியவாதிகள் பேசக் கேட்பது நமது லட்சியங்களுக்கு ஒரு புதிய ஊக்கத்தை, உயிரைக் கொடுக்கும். இதைத்தான், 'இனம் போன்றினமல்லான் கேண்மை' என்று வள்ளுவரும், 'குலத்தளவே யாகு மாம் குணம்' என்று ஔவையும் கூறுகிறார்கள்.

மழை பெய்யும்போது, 'சனியன் பிடித்த மழை' என்பதோ, வெயில் எரிக்கும்போது 'பாழாய்ப் போன சூரியன்' என்பதோ நிலைமையினை மாற்றுவதில்லை. அப்படிப் பேசுவது நமது பழக்கம். மாறாக அமெரிக்காவில் குளிர் ஐம்பதுக்குக் கீழ் செல்லும்போது, "காற்று இல்லாமல் இருக்கிறது நம் அதிர்ஷ்டம்" என்பார்கள். அவர்களுடைய மனநிலை, 'இயற்கை நிலையை நம்மால் மாற்ற முடியாதபோது வீணாகக் குறைபட்டுக் கொள்வானேன்? குறைபடுவது மேலும் சங்கடத்தை அதிகமாக்குமே தவிர குறைக்காது. ஆகவே சந்தோஷமான மனநிலையை ஏற்படுத்துவதன் மூலம் புறச் சூழ்நிலையின் கொடுமையைச் சற்றுக் குறைக்க முடியாதா?" என்பதுதான் அவர்கள் வாதம்.

அதேபோல் நல்ல புத்தகங்களின் கருத்துக்களில் மனத்தைத் தினந்தோறும் ஈடுபடுத்துவது நல்ல பழக்கம் என்னும் விதைகளை விதைப்பதற்கு ஒப்பாகும். அழுகுரல் மனிதர்கள் நம் சக்தியை வடித்துவிடுகிறார்கள். அவர்களுக்கெதிராக நாம் நம்மைக் காத்துக் கொள்ளவேண்டும். நம்மை அறியாது நாம் ஏற்படுத்திவிட்ட சில மனப்பழக்கங்கள், கிடைப்பதை விட்டுவிட்டுக் கிடைக்காததை எண்ணிப் பொருமும் மனநிலை; காரியங்களை முடிக்காமல் பாதியில் விட்டுவிடும் அவநம்பிக்கையும், தாழ்வு-மனப்பான்மையும், கையாலாகாத்தனமும்; பிறர் என்ன சொல்வார்களோ என்று எதற்கும் அஞ்சும் பேதமை; சென்றதை எண்ணிக் குமையும் சீரழிவு; சிறிய விஷயங்களைப் பெரிதுபடுத்தும் சிலரது பொழுது போக்கு; எதிலும் குற்றம் கண்டு பிடித்துக்கொண்டு தம் வாழ்க்கையையும் பிறர் வாழ்க்கையையும் நரகமாக அடித்துக் கொள்ளும் சிலரது சிந்தனை ஓட்டம்; தன்னைத்தானே எதற்கும் நொந்து கொண்டு, தன்னைத்

தானே தாழ்த்திக்கொண்டு வாழும் ஜீவாத்மாக்களின் மனநிலை—இவை அனைத்தும் எண்ணமாய், நம்பிக்கையாய், பழக்கமாய்ப் போய்விடும் அபாயம் உண்டு. இவற்றை உணர்ந்து நம்மை நாம் காத்துக்கொள்ள வேண்டும். அதில் நாம் கவனமாயிருக்கவேண்டும்.

இதற்கு மாறுபட்ட நல்ல மனோபாவங்கள் நமது வாழ்வில் ஒளியூட்டும்; மகிழ்ச்சி தரும்.

வாழ்வில் தொட்டாற் சுருங்கியாய் இல்லாமல் ஒரு சகிப்புத்தன்மையை வளர்ப்பது; காரியங்களைக் கண்டு பயந்து அஞ்சுவதற்குப் பதில், துணிந்து செய்யத் துவங்குவது, சோம்பேறித்தனமாய்க் காரியங்களை ஒத்திப் போடுவதற்குப் பதில் அதில் சிறிது சிறிதாக நுழைந்து வெற்றி காண்பது—இவை அனைத்தும் மனிதனின் மனநிலையிலிருந்து, மனிதன் குண நலனாக மாறுகின்றன.

மனத்தில் ஒரு ஹாஸ்ய மனோ பாவத்தை வளர்ப்பது; நமது குறைகளைக் கண்டு நாமே நகைப்பது—ஒரு வளர்ந்த பண்பு. நமது குறைபாடுகளைப் புரிந்து கொள்ளவும், போக்கவும் இது உதவும். ஒரு நகைச் சுவையாளன் தன்னைச் சுற்றிலும் சிரிப்பை, கலகலப்பைப் பரவ விடுகிறான். மக்கள் எல்லோரும் அவனைச் சுற்றியிருக்க விரும்புகின்றனர்.

நல்ல பொழுது போக்குகளில் ஈடுபடுவது நமது ஆக்க சக்திகளை வெளிக் கொண்டுவர உதவும். எண்ணம் மட்டும் போதாது, எண்ணங்களை வாழ்க்கையில் கடைப்பிடிக்கும் பழக்கங்களாக மாற்றவேண்டும் நாம்.

நல்ல பழக்கங்களை ஏற்படுத்துமுன் நமக்கென்று சில வாழ்க்கைத் தத்துவம் வேண்டும்; தலைவர்கள், மேதைகளின் வாழ்க்கையிலிருந்து வடித்த மூன்று தத்துவங்களை முக்கியமாக அறிஞர்கள் குறிப்பிடுகிறார்கள்.

'நான் துடிப்பு நிறைந்த மனிதன்'; 'நீங்கள் முக்கியமானவர்கள்' என்ற நினைவும் செயலும்; 'நான் என்ன செய்ய முடியும் பிறருக்கும், என்னைச் சுற்றியிருக்கும் சமூகத்திற்கும்?' என்பவைதான் அத்தத்துவங்கள். சிந்தித்துப் பார்க்க நிறைய இருக்கிறது அதில்.

# உழைப்பே குறுக்கு வழி

எந்தப் பிரச்னையை அலசுவதாயிருந்தாலும் சரி நாளை எந்த உயர்பதவிக்கு நாம் போவதாகத் திட்ட மிட்டாலும் சரி, நாம் நம்மை அதற்கேற்பத் தயார் செய்துகொள்ள வேண்டும்; நம்மை வளர்த்துக்கொள்ள வேண்டும். நமது தகுதிகளை உயர்த்திக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் அவ்வுயர் பதவி எதிர் பாராத விதமாய்க் கிடைத்தாலும் நாம் அருகதை அற்றவர்களாய்ப் போய், நமது அறிவும் அனுபவமும் பற்றாக் குறையாய் நின்று, நம்மைக் காட்டிக் கொடுத்துவிடும்.

பலரைப் படிக்காத மேதை என்று புகழ்கிறோம். அந்த மேதைகளும், உண்மையில் பள்ளிப்படிப்பு என்ற கட்டடத்தில் ஏறி இறங்கியிருக்க மாட்டார்களே ஒழிய, அவர்கள் துறையில் நல்ல பூரண ஞானம் பெற்றவர்களாயிருப்பார்கள். "தமிழ்நாட்டில் எந்த ஊரில் என்ன தொழில் நடைபெறுகிறது, எந்த ஊரில் எந்த ஆறு ஓடுகிறது, எந்த ஊருக்குக் கட்டை வண்டியில் போகவேண்டும் என்பதெல்லாம் எனக்குத் தெரியும். இதெல்லாம் பூகோளப் பாடமில்லை என்றால் நான் படிக்காதவன்தான்'' என்றார் திரு. காமராஜ், ஒரு வெளி நாட்டுப் பத்திரிகையாளரிடம். அரசியல் என்ற உலகில் எவ்வளவு அறிவும் அனுபவமும் கொண்டவ ராக இருந்தார் அவர் என்பதை எண்ணிப் பாருங்கள். 'இதனை இதனால் இவன் முடிக்கும் என்றாய்ந்து அதனை அவன்கண் விடல்' என்று ஒரு தலைவனின்

குணங்களைப் பற்றி அற்புதமாக விளக்கும் குறளுக்கு இலக்கியமாகத் திகழ்ந்தவர் திரு. காமராஜ். தொண்டனாகத் துவங்கி, சத்தியமூர்த்தியிடம் பயிற்சி பெற்று, பலகாலம் பின்னணியில் இருந்து அவர் தம்மைத் தயார் செய்து கொண்டார். அதுபோலவே எதைப் பற்றி நாம் ஆசைப்படுகிறோமோ அதை அடைய, அதைப் பற்றிய பூரா விவரங்களையும் நாம் தெரிந்து கொள்ள வேண்டும். நம்மைத் தயார் செய்து கொள்ள வேண்டும்.

நூல்களைப் படிப்பதன் மூலம் நம்மை நாம் தயார் செய்து கொள்ளலாம். அறிஞர்களுடன், அத்துறை வல்லுநர்களுடன் பழகுவதன் மூலம் நம்மை நாம் தயார் செய்து கொள்ளலாம். பல மைல் தூரம் நடந்து சென்று, சட்டப் புத்தகங்களை இரவல் வாங்கிப் படித்து வழக்கறிஞரானார் ஆபிரகாம் லிங்கன்.

நாளைக்கு அதிவேகமாகச் செல்லும் ஒரு விமானத்தைக் கண்டுபிடிக்கப் போகும் ஒரு மனிதன், பொறியியல் பற்றி ஏதும் அறியாமல் திடீரென்று எதையும் கண்டு பிடித்துவிட முடியாது. ‘தூங்கும்போது யாரும் ஞானியாகி விடுவதில்லை’ என்கிறது ஒரு பழமொழி. தியானம் புரிவோர் தூங்குகிறாற்போல் இருந்தாலும், அவர்கள் மனத்தை ஒருமுகப்படுத்துவதில் கடுமையாக உழைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதை விளக்குகிறது பழமொழி.

இரவோடிரவாக ஒரு விதை, மரமான கதையை நாம் கேட்டதில்லை. அதுபோலவேதான் ஆசைப்படும் ஒரு மனிதன் இரவோடிரவாக, ஒரு விஞ்ஞானியாகவோ, ஒரு கலைஞனாகவோ, ஒரு தலைவனாகவோ மாறுவதில்லை.

ஒரு மனிதன் பாறையைப் பிளக்க அதன்மீது சம்மட்டி கொண்டு அடிமீது அடியாக அடித்துக் கொண்டிருந்தான். கடைசியில் நூறுவது அடியில் பாறை பிளந்தது. அந்தப் பாறை உடைப்பவன் சொன்னான்: ''நூறுவது அடியில்தான் பாறை பிளந்தது. ஆனால் எனக்குத் தெரியும், அதற்குமுன் அடித்த, 99 சம்மட்டி அடிகளும் அந்தப் பாறை பிளப்பதற்குக் காரணமாக இருந்தன என்பது.''

பொதுமக்களுக்குப் பாடுபட எவ்வளவு தூரம் நேரு தம்மைத் தயார் செய்து கொண்டிருந்தார் என்பதை நமது சுதந்திர வரலாறு கூறும். நாட்டில் அரசியல் மறுமலர்ச்சியையும் ஒரு விழிப்பையும் ஏற்படுத்த மகாத்மாகாந்தி—எப்படித் தன் வாழ்க்கையை அமைத்துக் கொண்டார் என்பது, அவரது 'சத்திய சோதனை'யைப் படிப்போருக்கு விளங்கும்.

தன்னைத் தயார் செய்துகொண்ட மனிதன் குறிக்கோளை அடையத் திட்டம் வகுக்கிறான். ஆனால் வெற்றியோ, திட்டத்தை நிறைவேற்றும் செயல் திறனைப் பொறுத்திருக்கிறது.

பலருக்கும் ஆசையிருக்கிறது; லட்சியம் இருக்கிறது; திட்டமிருக்கிறது. ஆனால் அதைச் செயல் படுத்த வரும்போதுதான் மனிதர்கள் வித்தியாசப் படுகிறார்கள். சிலர் சோம்பலடைந்து செயலை ஒத்திப் போடுகின்றனர். சிலருக்குத் தங்கள் எண்ணத்தின் மீதே அவநம்பிக்கை பிறக்க ஆரம்பிக்கிறது. இந்நிலையில், மனித மனம் காரியங்களைச் செய்யாமலிருக்க ஒரு தகுந்த சமாதானத்தைத் தேடுவதில் முனைகிறது; இவர்களும் ஒரு வகை முடவர்களே!

இதைத்தான் பலரும் 'சோடா பாட்டில் உற்சாகம்' என்று வேடிக்கையாகக் குறிப்பிடுவதுண்டு. சோடா பாட்டிலைத் திறந்தவுடன் அது நொங்கும் நுரையு மாய்ப் பொங்கி பிரவகிக்கும். ஆனால், சிறிது நேரத்தில் எல்லாம் அடங்கி, பாட்டிலில் பாதி அளவில் வெறும் தண்ணீராய் அது நிற்கும். சோடாபாட்டில் உற்சாகம் கொண்டவர்கள் ஆரம்ப சூரர்கள்.

இவ்வுலகில் நிகழும் எதுவும் காரண காரியத் தொடர்பில் நிகழ்கின்றன. இது உலக நியதி. ஆகவே தான் ஆசைப்படுபவர்கள் அதற்கு ஈடாகத் தங்கள் உடல் உழைப்பையோ, பொருளையோ கொடுத்தாக வேண்டும். பலரும் நினைப்பதுபோல இவ்வுலகில் இனமாக எதுவும் கிடைப்பதில்லை.

சிந்தனையும் உழைப்பும் சேரும்போதுதான் அங்கே ஒருமித்த பலன்கள் கிடைக்கின்றன. தனியாக ஒன்று மட்டும் எந்தச் சிறந்த பலனையும் அளிப்பதில்லை.

"எழுது" என்றார் ஞானி: "ஏன் என்றால், எழுதுமுன் சிந்திக்கிறாய், எழுதியபின் எழுதியபடி நடக்க முயல்கிறாய். ஆகவே எழுது." உலக மனிதர் களை நாம் இரண்டு விதமாகப் பிரிக்கலாம். பேசுபவர் கள் என்றும், செய்பவர்கள் என்றும். 'செய்பவர்' களாலேயே இவ்வுலகம் முன்னேறி வருகிறது. உழைப் பாளிகளின் கைவண்ணமே நமக்கு உணவாகவும், உடையாகவும், வீடாகவும் அமைகிறது.

ஆசிரியர் மகன் ஆசிரியர் என்றோ அல்லது அரசி யல்வாதியின் மகன் அரசியல்வாதி என்றோ ஒரு நாலு தலைமுறை வளர்ந்தால், நாட்டில் ஒரு 'கையாலாகாத இனம்' தோன்றும் என்று நான் எண்ணுவதுண்டு.

துரதிருஷ்டவசமாக நமது நாட்டில் நாம் உழைப்பை — உடலுழைப்பை — கேவலமாக எண்ணி வருகிறோம். உழைப்பைக் கேவலமாய்க் கருதும் இனம் எங்கே உழைத்துப் பொருளுற்பத்தி செய்யப் போகிறது? உழைக்க வேண்டியவர்கள் வேறு யாரோ நமக்குக் கீழ் என்று நாம் எண்ணிக் கொண்டிருக் கிறோம். பள்ளிகளில், கல்லூரிகளில் கல்வி பயில்வது நமது அறிவை உபயோகித்துப் பிழைக்கத்தான் என்று நாம் திடமாக நம்பிக் கொண்டிருக்கிறோம். உழைப்பைப் பற்றி நம் மனோபாவம் திருந்தாதவரை நமது நாடு ஏழை நாடாக—இல்லாத நாடாக—இரந்து வாழும் நாடாகத்தான் இருக்கப் போகிறது.

தஞ்சை மாவட்டத்தில், எங்கள் ஊரில், விடியற் காலை நேரத்தில் காற்றில் மிதந்து வரும் நாதசுர இசை எங்களை விழிக்கச் செய்யும். நாதசுரம் கற்றுக் கொள்ளும் மாணவர்கள் விடியற்காலையில் எழுந்து கொண்டு சுமார் இரண்டு மணி நேரம் திரும்பத் திரும்பக் கடும் பயிற்சி செய்வது இன்னும் என் நினைவில் நிற் கிறது. அந்த இசை மன்னர்கள் எத்தனை காலம் கடும் பயிற்சிக்கு, உழைப்புக்குத் தங்களை ஆளாக்கிக் கொண்டிருக்கின்றனர் என்பது பலருக்குத் தெரியாது.

அதேபோல் அடுப்படியில் புகுந்த எந்தப் பெண் ணும் முதல் நாளே பெரிய சமையல் நிபுணராக வெளி வந்ததில்லை.

“மேதைத்தனம் என்பதெல்லாம் ஒரு சதம் உத் வேகமும் 99 சதம் கடும் உழைப்பும்தான்” என்றார் ஒரு மேதை.

வெற்றிக்கு உழைப்புதான் குறுக்கு வழி.

# சளைக்காத மனம்

**வா**ழ்க்கையில் வெற்றி பெறுவதும், சாதனைகள் புரிவதும் மன நிலையைப் பொருத்திருக்கிறது. அங்கு உலவும் எண்ணங்களைப் பொருத்திருக்கிறது. வெற்றிக் கான தாரக மந்திரத்தை இரு சொற்களில் வடிக்க வேண்டுமானால் அது 'சளைக்காத மனம்' என்பதாகத் தான் இருக்கும். சளைக்காத மனநிலை எந்தப் புற நிலையில் போய் முடிகிறது? சலியாத உழைப்பில், தொடர்ந்த ஈடுபாட்டில், இதில்தான் வெற்றியின் ரகசியமே தொங்கிக் கொண்டிருப்பதாக அறிஞர்கள் கருதுகிறார்கள்.

தோல்வி ஏற்படுவது இயல்பு. மனம் சளைப்பதும் சகஜம். ஏனெனில் நமது உடலில்கூட ஒருவித 'பருவ காலம்' தோன்றி மறைவதாக இப்போது மன மருத்து வர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள்; பதினைந்து நாளைக்கு ஒரு முறை சந்திரன் தோன்றி மறைவதுபோல, பெண்கள் உடலில் ஏற்படும் மாதாந்திர மாற்றம்போல, மனித உடலும் உற்சாகத்திற்கும் சோர்வுக்குமாக மேலும் கீழும் போய் வருகிறது என்று கண்டிருக் கிறார்கள்.

சமீபத்தில் அமெரிக்காவின் ஒரு புகழ் பெற்ற ஓர் உணவு விடுதி தொடர், ஒரு விளம்பரத்தை எல்லாப் பத்திரிகைகளிலும் வெளியிட்டது. அதன் வாசகம் இதுதான் :

"மேலே செல்லுங்கள். விடா முயற்சிக்கு ஈடாக இவ்வுலகில் எதுவுமில்லை. திறமை ஈடாகாது; திறமை

யிருந்தும் வெற்றியடையாத மனிதர்களைவிட சாதாரணமான விஷயம் வேறு எதுவும் இல்லை. மேதை ஈடாகாது. பலன் காணு மேதைகள் என்பது பழமொழி. கல்வி மட்டுமே ஈடாவதில்லை; இந்த உலகம் படித்தும் பாதை தவறியவர்களால் நிறைந்திருக்கிறது. விடா முயற்சியும் உறுதியும் மட்டுமே சர்வ வல்லமை படைத்தவை.''

லாபத்தை எண்ணி, தன் பொருளைப் பற்றி மட்டுமே விளம்பரம் செய்யாமல், இப்படிப் பொது மக்களுக்குப் போதிக்கும், உற்சாகமூட்டும், நல்ல வாசகங்கள் அமெரிக்கக் கம்பெனிகளால் அவ்வப்போது பிரசுரிக்கப்படுவதுண்டு. இது வெளிவந்தவுடன் பல அலுவலகங்களில் இதைக் கண்ணுடி போட்டு மாட்டியிருப்பதைக் கண்டேன்.

ரேக்கிராக் என்ற அந்த உணவு விடுதியின் தலைவர், அறுபது வயதுக்குமேல் எல்லாவற்றையும் செய்யத் துவங்கி முன்னுக்கு வந்தவர். எதற்கும் சளைக்காமல் கடைசிவரைப் போராடி வெற்றி கண்ட மனிதர் அவர்; அவரது விடா முயற்சியும் செயல்களும் படித்தால் நம்மைப் புல்லரிக்கச் செய்யும்.

மேலே கண்ட வாசகம் கால்வின் கூலிட்ஜ் என்ற அமெரிக்க ஜனுபதியின் கூற்று.

விடா முயற்சியுடன்—கிடைத்ததை விடாது பிடித்துக் கொண்டு முன்னேறியவர்கள் பலர். கால்வின் கூலிட்ஜ் கூறுவதுபோல முன்னேறிய பலருக்கும், பெரும் மேதைத்தனமோ கல்வி அறிவோ திறமையோ இல்லை. அவர்கள் அதிலேயே கிடந்து 'உழன்று கொண்டு' இருந்தவர்கள் என்ற ஒரே காரணம் அவர்களை முன்னுக்குத் தள்ளி இருக்கிறது.

ஒரு சிறு கதை எழுதத் திணறிய—திண்டாடிய எழுத்தாளர் இன்று பெரிய் நாவலாசிரியர் என்றால் நம்புவதற்குக் கஷ்டமாயிருக்கும். ஆனால் அந்தச் சாதாரண எழுத்தாளரோ உடும்புப் பிடியாக ஓயாது எழுதிக்கொண்டே இருந்தார். கைவண்ணம் தானே கூடியது; கற்பனை மெருகு பெற்றது. இன்று தலை சிறந்த எழுத்தாளராகப் போற்றப்படுகிறார். அவரது நண்பர்கள், அவரது எழுத்தைப் பரிகாசம் செய்த அன்றே அவர் நொந்து எழுத்திற்கு ஒரு முழுக்குப் போட்டிருந்தால் என்ன ஆகியிருக்கும் என்று எண்ணிப் பாருங்கள். அவரது விடாமுயற்சியும் உள்ள உறுதி யுமே அவரை உயரே அழைத்துச் சென்றன.

படிப்போ, திறமையோ, இல்லாத ஒரு சாதாரண மனிதர் வேறு வழியில்லாமல், வேறு தொழிலில்லாமல், அரசியல் கூட்டங்களுக்குச் சென்றும், பேசியும் வந்தார். அந்த மனிதர் நாளடைவில் பேசப் பேச, மக்களுக்குத் தெரிந்த நபராகி, பின் தலைவரானார். நம்மிடையே நடமாடும் இத்தகைய பல அரசியல்வாதி களை நீங்கள் உடனடியாக அடையாளம் கண்டு கொள் ளக்கூடும். வியப்பு அல்ல. என் உள்ளத்தில் எழுவது எப்படி ஒன்றிலேயே ஊறிப்போய் ஊடாடிக் கொண் டிருப்பது, அத்துறையை அறிந்து கொள்ளும் வாய்ப் பாய் அமைந்து அத்துறையில பின்னால் பிரகாசிக்கக் காரணமாய் இருக்கிறது என்பதுதான்.

அரசியல் என்று அல்ல. விஞ்ஞானத்துறையில் கூட மிகச் சாதாரணமாய் உள்ளே நுழைந்தவர்கள், விடாமுயறசியாலும் உறுதியாலும் நோபெல் பரிசு வாங்கியிருக்கிறார்கள். பாஸ்டியூர் என்ற மாபெரும்

விஞ்ஞானி கூறினர்: "ஒன்றை விடாமல் பிடித்துக் கொண்டிருப்பதுதான் எனது வலிமை" என்று. ஒரே கட்சியில் விடாப்பிடியாக உழன்று கொண்டிருக்கும் ஒரு சாதாரண தலைவருக்குள்ள செல்வாக்கையும், மூன்று நாளைக்கு ஒரு முறை கட்சி மாறும் ஒரு தலைவருக்கு உள்ள செல்வாக்கையும் ஒப்பிட்டுப் பாருங்கள்.

அமெரிக்காவில் முந்தைய ஜனாதிபதியாக இருந்த நிக்சன்; ஜான் கென்னடிபோல ஓர் அறிவாளி அல்ல; லிண்டன் ஜான்சன்போல் செயல் திறம் படைத்த வரல்ல; ப்ராங்களின் ரூஸ்வெல்ட் போல மக்களால் பெரிதும் விரும்பப்பட்ட தலைவருமல்ல.

1960–இல் ஜனாதிபதி பதவிக்கு நின்ற நிக்சன் தோற்றார். பின் அதற்கும் கீழான, கலிபோர்னியா கவர்னர் பதவிக்கு நின்று இதிலும் தோற்றார். பத்திரிகைக்காரர்கள் அவர் சகாப்தம் முடிந்தது என்று எழுதினார்கள். ஆனால் அவரோ தமது கட்சித் தலைவர்களை யெல்லாம் சந்தோஷப்படுத்திக் கொண்டு தன் கட்சியின் ஒப்புதலைப் பெற்றார். ஜனாதிபதியாக, விடாமுயற்சிக்கும் உறுதிக்கும் ஓர் எடுத்துக்காட்டுக் கூறவேண்டுமானால் நிக்சனைத்தான் கூறவேண்டும். அந்த விடா முயற்சியே அவரை அமெரிக்க ஜனாதிபதி பதவியில் வைத்தது.

தோல்வியைக் கண்டு சிறிதும் சளைக்காத சிலந்தியின் கதையையும் ராபர்ட் புரூசின் கதையையும் நீங்கள் அறிவீர்கள்.

இன்றைய அமெரிக்க டெலிவிஷன் செய்தி ஆசிரியர்களுள் எரிக் சவரைட் என்பவர் புகழ் பெற்றவர்.

அவர் கூறுகிறார்: "நாங்கள் பர்மா காட்டிற்குள் சிக்கிக் கொண்டோம். பலர் இறந்துபோனார்கள். எங்கள் கதி என்ன என்று பிறர் அறிய வழி ஏதும் இல்லை. என் காலில் காயங்கள்; காலை எடுத்து வைத்து நடக்க முடியாத நிலை. சுமார் 140 மைல்கள் நடந்தால் நகர எல்லைக்கு—எங்கள் முகாமுக்குப் போய்ச் சேரலாம். எனக்கு நம்பிக்கை இல்லை. எனினும் நடந்தேன். ஒரு மைல் நடப்போம். ஏதாவது ஊர் வரும் என்று எண்ணியவாறு நடந்தேன். ஒவ்வொரு மைலாக நடந்தேன். சில நாளைக்குப் பிறகு ஒரு கிராமம் தெரிந்தது."

இக்கட்டான நேரங்களில் அந்த முதல் மைலை மட்டும் எண்ணி நடப்பதுதான் உறுதி—விடாமுயற்சி.

பெரிய காப்பியங்கள் வரி வரியாகத்தான் எழுதப் படுகின்றன.

எல்லாச் சாதனைகளுக்கும் பின்னால் ஒளிந்து கொண்டிருக்கும் பெரு நபரின் பெயர் 'சளைக்காத மனம்' என்பதாகும்.

# பயம் தரும் எண்ணம்

மனிதனின் எதிரிகள் இரண்டு. ஒன்று பயம்; மற்றது கவலை. பயம், வலுப்படைந்த வியாதி; கவலை மெல்ல அரிக்கும் நோய். பயத்தாலும், கவலையாலும் மனிதன் தன் வாழ்வை நரகமாக்கிக் கொள்கிறான். சூழ்ந்திருப்போரின் வாழ்வையும் கெடுக்கிறான். இப்படிப் பட்ட பலரை நம்மிடையே நாம் காணக்கூடும். எந்தச் சாதாரண விஷயத்தை இவர்களிடம் கொண்டு சென்றாலும், நாம் எதிர்பார்க்காத பயங்களை அபாயங்களை நம்முள் பரப்பிவிட அவர்களையும் அறியாமல் அவர்கள் முயல்வார்கள். இவர்கள் சந்தேகப் பிராணிகள். இவர்கள் தங்களைச் சுற்றிலும் எண்ணங்களால்—பயம் கவலை என்ற எண்ணங்களால்—பெரிய சுவர்களை எழுப்பிக் கொண்டிருப்பவர்கள்.

காரியங்களைச் செய்ய முடியாதவர்கள் இவர்கள். இளம் வயதில் ஏற்பட்ட சிறு சம்பவங்கள் இவர்களை இப்படியோர் எண்ணப்பாதையில் இறக்கிவிட்டிருக்கும். செய்ய முடியாதவர்கள், செயல்திறன் கொண்டவர்களை ஒரு நாளும் மன்னிப்பதில்லை. பிறரது உற்சாகத்தை இவர்கள் முளையிலே கிள்ளி எறியப் பார்ப்பார்கள்.

நமது எண்ணங்கள் எழுப்பியிருக்கும் சுவர்களை நாம் நன்கு புரிந்துகொள்ள வேண்டும். அத்துடன் எண்ணச் சுவர்களாய் விளங்கும்—ஒப்பாரி வைக்கும் மனிதச் சுவர்களின் இயல்புகளையும், நம்மைச் சூழ்ந் திருப்போரிடம் புரிந்துகொள்ள வேண்டும்.

'அஞ்சுவ தஞ்சாமை பேதமை' என்றார் வள்ளுவர். பயப்படக்கூடிய விஷயங்களுக்கு நாம்

பயப்பட வேண்டாம். அதை விட்டுவிட்டு எடுத்ததற்கெல்லாம் பயந்து கொண்டிருப்பது பேடியின் செயலாகும். அன்று வள்ளுவர் இப்படிப் பயத்தைப் பாகுபடுத்தியதையே இன்று மனோதத்துவ நிபுணர்கள், பயத்தின் இரு பிரிவுகளென ஏற்றுக் கொள்கின்றனர்.

பயம்-பெரும்பாலும் நமது கற்பனையில் விளைவது. எதிர்காலத்தில் நிகழப் போகிற ஒன்றை 'இப்படிப் போகுமோ, அப்படி நடக்குமோ' என்று பலபல கற்பனை செய்துகொண்டு அவதிப்படுவதே பயம். நான்கு முறை இதே பாதையில் சிந்திக்கத் துவங்கியதும்; பயம் நமது இயல்பாக-பழக்கமாக மாறிவிடுகிறது.

'அஞ்சி அஞ்சிச் சாவார்-இவர் அஞ்சாத பொருளில்லை அவனியிலே' என்றார் பாரதி.

சிலருக்கு மருத்துவர்களைக் கண்டு பயம்; சிலருக்கு மேலதிகாரிகளைக் கண்டு பயம்; சிலருக்குத் தங்கள் மனைவியைக் கண்டு பயம்.

பெரும்பாலான பயம் அனைத்தும் நமது அசாதாரணக் கற்பனையினால் விளைவது. ஒரு சம்பவம் நிகழுமுன் நமது பயங்களை எழுதி வைத்து, பின்னால் அவற்றைச் சாவகாசமாகப் படித்துப் பார்த்தால், எப்படி உப்புப் பெறாத விஷயங்களுக்கெல்லாம் நாம் பயந்திருக்கிறோம் என்பது தெரியவரும்.

பயம்-மனித லட்சியங்களின் அடியில் லேசாகக் குழி பறிக்கும் இயல்புடையது. மனித நம்பிக்கையை அசைக்கும் தைரியத்தை ஆட்டங்காண வைக்கும் தன்மை கொண்டது. நோயினால் சாகுமுன், சாவின் பயத்தால் மனிதர்கள் செத்திருக்கிறார்கள். எதிரியால் தோற்கடிக்கப்படும்முன், வெறும் பயத்தால் படைகள் நாட்டைப் பறிகொடுத்திருக்கின்றன.

பயம் ஒரு நஞ்சு; விஷம். நமது உடலில் பலத்த மாறுபாட்டை அது உண்டு பண்ணுகிறது. பயப்படும் ஒருவன் ஒன்று ஓட முயல்கிறான்; அல்லது தற்காப்புக்காகச் சண்டைபோடத் தயாராகின்றான். அப்போது மனிதனின் கண்கள் பெரிதாகின்றன; ரத்தத்தில் சர்க்கரை வேகமாய்ப் பாய்கிறது; வேகமாகப் மூச்சுப் போய் வருகிறது. இதய ஓட்டத்தையும் சீரண நீர் சுரப்பதையும் இது பாதிக்கிறது.

பயம் உண்மையாயிருக்கலாம். அல்லது நமது கற்பனையாயிருக்கலாம். நாம் எப்படி நம்புகிறோமோ அதற்கேற்ப நம் உடல் மாறுபடுகிறது.

பயப்படுபவர்கள் சர்வ ஜாக்கிரதையான மனிதர்கள். எதற்கும் முன்னே செல்ல, முதலில் செய்யத் தயங்குவார்கள். வீடு என்ற நான்கு சுவருக்குள்தான் அவர்கள் நிம்மதியாயிருப்பார்கள். இவர்களை அடையாளம் கண்டு கொள்வது எளிது.

பல பேச்சாளர்களுக்கும், பேராசிரியர்களுக்கும் கூட்டத்திற்கோ, வகுப்பிற்கோ போகுமுன் சதைகள் முறுக்கேறி நெருக்கடி நிலையில் அவர்கள் இருப்பதுண்டு. அப்போது உடல் வியர்க்கும்; வார்த்தைகள் தடுமாறும்; வயிறு குமட்டும்.

பயத்தில் வாழ்பவர்களெல்லாம், எப்படி மோகன்தாஸ் காந்தி என்ற இளைஞர், வழக்கறிஞராய் வாழ்வைத் துவங்கினார் என்பதை ஆராய வேண்டும். முதல் வழக்கின்போது வாதிட எழுந்தார் காந்தி. கண்கள் இருண்டன; காதுகள் பஞ்சடைந்தது; நாத்தழுதழுத்தது. அழாத குறையாக மன்னன் அமர்ந்தார். பிற வழக்கறிஞர்களும், நீதிபதியும் புன்னகைத்திருக்கக் கூடும். ஆனால் காந்தி அதை உணரும் நிலையில் இல்லை! அத்தகைய மனிதர் இந்தியாவின் விடுதலை கோரிக்

ளையை எடுத்துக்கொண்டு இங்கிலாந்தின் பாராளு மன்றத்திலே பின்னல் விவாதித்தார். எத்தகைய மாற்றம் பாருங்கள்.

தத்துவ ஞானி எமர்சன் கூறுகிறார்: "எதைக் கண்டு பயப்படுகிறீர்களோ அதைச் செய்யத் துவங்குங்கள். பயம் செத்துப் போவதைக் காண்பீர்கள்" என்று.

தண்ணீரைக் கண்டு பயப்படுபவன் குளத்திலிறங்கி நீந்தக் கற்றுக் கொள்ளவேண்டும்? பின் நீரைப்பற்றிய பயம் போகும்.

இரு வழிகளில் பயத்தைப் போக்கலாம். 'ஏன் பயப்படுகிறோம்? ஏன் பயப்பட வேண்டும்? தலையா போய்விடும்?' என்று, தீவிரமாகப் பயத்தை அக்குவேறு ஆணிவேருக அலசுவது முதல் வழி. அலசினுல் காரணமில்லாததற்கு நாம் பயந்து கொண்டிருக்கிறோம் என்பது விளங்கும்.

இரண்டாவது எதைக் கண்டு பயப்படுகிறோமோ அதில் சிறிது சிறிதாக நுழைந்து காரியங்களைச் செய்யத் துவங்குவது. 'செயலே பயத்தைப் போக்கும் அருமருந்து' என்கிருர்கள் அறிஞர்கள்.

பயம் நெஞ்சைக் கவ்வியிருக்கும்போது அதை அப்புறப்படுத்துவது எளிதல்ல. நம்பிக்கைதான் பயத்தின் மாற்று. பயத்திற்கு நேர்மாருன, தைரியமான எண்ணங்களை மனதிற்குள் விடுவது, அதைப் பற்றிச் சிந்திப்பது நல்ல பலனைத் தரும்.

பயத்தைப்பற்றி யோகானந்தர் ஒரு கதை சொல்வதுண்டு.

ஒரு ஞானியின் நிஷ்டை கலைந்தபோது ஒரு சிறு எலி வந்தது. "சுண்டெலியே, உனக்கு என்ன வேண்டும்?" என்றார் ஞானி. "இந்தப் பூனையைக் கண்டு பயமாயிருக்கிறது. என்னை ஒரு பூனையாக

மாற்றிவிட்டால் உங்களுக்குப் புண்ணியம் உண்டு'' என்றது எலி. ஞானி எலியைப் பூனையாக மாற்றினார். இரண்டு நாள் கழித்து மீண்டும் அப்பூனை வந்தது. "இப்போதென்ன பிரச்னை?'' என்றார்.

"சதா என்னை நாய் விரட்டுகிறது; என்னை நாயாக மாற்றிவிட்டால் தேவலாம்'' என்றது பூனை. பூனையை நாயாக மாற்றினார் ஞானி. சில நாளில் அந்த நாய் வந்து சொல்லியது.

"இந்தப் புலி என்னைப் படாத பாடுபடுத்துகிறது. தயவு செய்து புலியாக என்னை மாற்றி விடுங்கள்'' என்றது. ஞானி, நாயைப் புலியாக மாற்றினார். ஆனால் சில நாளில் மீண்டும் புலி அங்கே வந்து மன்றாடியது. "இக்காட்டில் வேடன் என்னை வேட்டையாட வருகிறான். தயவு செய்து என்னை வேடனாக மாற்றிவிடுங்கள்'' என்றது புலி. புலியை வேடனாக மாற்றினார் ஞானி. எனினும் சில நாளில் வேடன் ஞானிமுன் வந்து நின்றான்.

"இப்போது உனக்கு என்ன வந்தது?'' என்றார் ஞானி.

"எனக்கும் பிற மனிதர்களைக் கண்டால் பயமாய் இருக்கிறது. ஆகவே...'' இடைமறித்தார் ஞானி.

"ஏ, சுண்டெலியே! உன்னை எதுவாக மாற்றினால் என்ன? உன் பயம் உன்னைவிட்டுப் போகாது. நீ பழையபடி சுண்டெலியாக இருக்கத்தான் லாயக்கு. உனக்குச் சுண்டெலியின் இதயம்தான் இருக்கிறது'' என்றார் ஞானி. உள்ளத்தில் பயம் அகலாதவரை எதுவாக மாற்றினால் என்ன?

பயம் ஓர் எண்ணம். அதை அகற்றி, நம்பிக்கை, துணிவு என்ற மாற்று எண்ணங்களை வைக்காதவரை பயமே நம்மை ஆட்டிப் படைக்கும்; பயமே நம்மை விரட்டிக் கொண்டிருக்கும்.

# தாழ்வு மனப்பான்மை

'பயம்—சில குடும்பங்களி தாய்ல் தரும் நோய்" என்று சில மன நூலார் கருதுகின்றனர். "இருட்டில் போகாதே; அதைச் செய்யாதே, இதைத் தொடாதே" என்று எதற்கெடுத்தாலும் பயந்து தன் குழந்தையைக் கட்டுப்படுத்தும் தாய், தன் பாலுடன் பயத்தையும் ஊட்டுகிருள் என்கிருர்கள். "போரில் புற முதுகிட்டான் தன் மகன் என்று அவனுக்குப் பாலூட்டிய தாய், தன் மார்பகங்களை வாளால் வெட்டியெறிந்த வீரத்தாய், தமிழ்த் தாய்" என்று நம் இலக்கியம் கூறுகிறது. இன்றைய நிலை என்ன? "நெஞ்சு பொறுக்குதில்லையே— இந்த நிலைகெட்ட மனிதரை நினைத்துவிட்டால்" என்று குமைகிருர் பாரதி.

பணிந்து போவது நல்லதுதான். ஆனல் அதற்கும் ஓர் எல்லை இருக்கிறது. இப்போது நாம் அதிகாரத்தைக் கண்டு அஞ்சுகிருேம். ஆணவத்திற்குத் தலை பணிகிருேம். மாறுபட்ட கருத்துக்களைத் தெரிவிக்கவும் தயங்குகின்றனர் படித்தவர்கள். பயம், பல நிலையில் மக்களிடை காணப்படுகிறது.

நமது பணிவு என்ற பண்பு, மறு கோடிக்குச் சென்று மனிதனைக் கோழையாய், பேடியாய் மாற்றி விட்டிருப்பதைக் காண முடிகிறது. எப்படியோ வாழ்ந்தால் போதும் என்ற மன நிலையை உணர முடிகிறது. பாரதியும் அதைத்தான் கூறினுர். நம்மிடை நைச்சிய மனேபாவம் மிகுந்திருப்பதாக, அடிமைப் புத்தி மலிந்திருப்பதாக.

அமெரிக்காவில் தோரோ என்ருெரு சிந்தனையாளர் இருந்தார். 1845-ல், அடிமைத்தனத்தை எதிர்த்து, வரி கொடுக்க முடியாது என்று அரசாங்கத்துடன் போராடித் தண்டனையாக ஒரு நாள் சிறைக்குப் போனுர் அவர். அவரது கருத்துக்களே லியோ டால்ஸ்டாய் என்ற ரஷ்ய எழுத்தாளரையும், பின்னர் மகாத்மா காந்தியையும் செயல்படத் தூண்டின. அதன் விளைவாகவே தமது புகழ் பெற்ற ஒத்துழையாமை இயக்கத்தைத் துவக்கினுர் மகாத்மா. மெலிந்து ஒல்லியான காந்தி எங்கே? சூரியன் அஸ்தமிக்காத பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் எங்கே? காந்தி அதிகாரத்தை, ஆணவத்தைக் கண்டு அஞ்சவில்லை. மாருக, உள்ளத்தில் ஓர் உறுதியை வளர்த்தார்; சத்திய நெறியை வளர்த்தார். பிரிட்டிஷ் அரசாங்கம் அடிபணிந்தது. அதிகாரத்தைக் கண்டு பயப்படுபவர்கள் காந்தியைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். முன் மாதிரியாகக் கொள்ள வேண்டும்.

மாணவர்கள் பரீட்சையைக் கண்டு பயப்படுகின்றனர். பயப்படுவதினுல் நம்மைப் பலவீனப்படுத்திக் கொள்கிருேம். பயம் நமது ஞாபக மறதியை அதிகமாக்கி, நமக்கு அறிவு மிகவும் தேவைப்படும் நேரத்தில் அறிவைக் கைவிடச் செய்கிறது.

மனிதர்களைக் கண்டு மனிதர்கள் பணிவு காட்டும் நிலை நமது ஊரில் முற்றிலும் விசித்திரமானது. அதிகாரிகள் பலர் தமக்குக் கீழே வேலை செய்பவர்களை, வேலைக்காரர்களாகக் கருதுகின்றனர். பிறருக்குக் கீழ் வேலை பார்ப்போர் பலர் தங்களைத் தாழ்த்திக் கொள்வதன் மூலம் அதிகாரியின் நிலையை உயர்த்தலாம் என்றும், அவரைத் திருப்திப்படுத்தலாம் என்றும் எண்ணுகின்றனர். நமது ஊரிலே மனிதன் மனிதனுக்

வாழாமல், வாழ முடியாமல் முதுகெலும்பற்ற மண் புழுவாய் நெளிகிறான்; உழல்கிறான். நம்மிடையே அடிமைத்தனம் இல்லை என்று நாம் பெருமையோடு கூறிக்கொள்கிறோம். ஆனால் இருப்பவன் இல்லாதவனை நடத்தும் முறையும்,அதிகாரமும் பதவியும் குடிமக்களை நடத்தும் முறையும் நம் அடிமைப் புத்தியையே காட்டுகின்றன.

நம் அனைவருள்ளும் இப்பிரபஞ்ச அறிவு உறைகிறது. நம் அனைவருள்ளும் ஆண்டவன் குடியிருக்கிறான். அதை உணராது, நம்மை நாமே தாழ்த்திக் கொள்ளும் ஒரு மன நிலையை—தங்களைத் தாங்களே சிறுமைப்படுத்திக் கொள்ளும் ஒரு உள்ள நிலையை—உலகில் நாம் வேறெங்கும் காண முடியாது. நேருவின் காலில் விழுந்து வணங்கிய ஒரு மனிதரை அலாக்காய்த் தூக்கிக் கூட்டத்தில் வீசியெறிந்த சம்பவத்தை எண்ணிப் பாருங்கள். இப்படித் தன்னம்பிக்கை இழந்துவிட்ட ஒரு சமுதாயத்தை, தன்னைத் தாழ்த்திக் கொண்டு வாழும் ஒரு மக்கள் கூட்டத்தை, பிறரை இரந்து வாழும் ஒரு மனோபாவம் கொண்ட மக்கள் சமுதாயத்தை உலகில் வேறெங்கும் காண முடியாது.

"நம்மால் முடியுமா?" என்ற பயமே, "நம்மால் முடியாது" என்ற நம்பிக்கையாய் ஊறி நமது தாழ்வு மனப்பான்மையாய் வெளி வருகிறது. நமக்கேற்படும் பயத்தினால், நாம் பிறரைச் சார்ந்து நிற்க விரும்புகிறோம். பிறரிடம் நமது பொறுப்புக்களை ஒப்புவிப்பதன் மூலம் நமது பிரச்னைகளிலிருந்து—அவற்றைச் சமாளிப்பதிலிருந்து—தப்பிக்கப் பார்க்கிறோம்.

கடல் பூராவும் தண்ணீர் இருந்தாலும், கடல் நீர் கப்பலுக்குள் புகாதவரை,கப்பல் அமிழ்ந்துபோவதில்லை.

அதே போலத்தான் பயமும். மனம் என்ற கப்பலுக்குள் சஞ்சலம், பயம், திகில், பீதி, சந்தேகம் என்று ஓட்டைகள் ஏற்படாதவரை எந்த உலகப் பிரச்னைகளும் நம்மை அசைக்க முடியாது.

சிலர் எழுதும் கடிதங்கள் அழுகையாகவும், ஒப்பாரியாகவும் இருக்கும்போது, அவர்களுக்கு நான் கூறும் யோசனை, கொஞ்சம் தைரியத்தை விலைக்கு வாங்குங்கள் என்பதுதான். பலர், "தைரியம் எந்தக் கடையில் விற்கிறது?" என்று வியப்புடன் கேட்கிறார்கள். புத்தகக் கடைகளிலெல்லாம் சுமார் நான்கு ரூபாய்க்கு "பாரதியின் பாடல்கள்" என்ற பெயரில் தைரியம் விலைக்கு விற்கப்படும்போது, ஏன் பலர் அழுகிறார்கள் என்பது புரியவில்லை.

மீசை வைத்துக்கொள்ளும் வழக்கமில்லாத ஒரு குடும்பத்தில் மீசை வைத்துக்கொண்டவர் பாரதி. அதுவும் எப்படிப்பட்ட மீசை, தொங்கு மீசையல்ல அவருடையது. வீரம் முறுக்கேறி நிற்கும் கொம்பு மீசை. அதன்மீது ஒரு கம்பீர முண்டாசு.

"பயமெனும் பேய்தனை அடித்தோம். பொய்மைப் பாம்பைப் பிளந்துயிரைக் குடித்தோம்" என்று வீர முழக்கமிடுகிறார் பாரதி. நமது உள்ளத்திலே பயத்திற்கு மாற்றான வீர எண்ணங்களை உள்ளேவிட, பாரதியின் வீரம் செறிந்த பாடல்களைப்போல் சக்தி மிகுந்தவை வேறில்லை.

# எண்ணங்களின் சுமைதாங்கி

மனிதனை அலைகழிக்கும் மற்றொரு மனநோய் கவலை. மக்களில் பலர், "எனக்குத் தொழில் கவலை" என்று வாழ்க்கையை நடத்துகின்றனர். கவலைக்கு முதல் காரணம் சும்மா இருப்பதுதான். வேலையில்லாமல் சும்மா இருக்கும்போது மனம் பலவற்றையும் எண்ணு கிறது. மனம் எதைப்பற்றியாவது கவலைப்படத் துவங்குகிறது. கவலைப்படும் மனிதன் நாளடைவில் நோயாளியாகிறான். அவன் முகத்தில் கவலை, தன் கோடுகளைப் போட்டுவிடுகிறது.

ஒரு காரியம் செய்யுமுன் ஏற்படும் பயம், கவலை யாய் மாறுகிறது. பல சமயம் காரியங்களை ஒத்திப் போடுவதனால், ஒத்திப் போடப்பட்ட காரியம் பெரும் சுமையாய்க் கவலை தருகிறது. சுறுசுறுப்பாக இருப் பதன் மூலமும், அவ்வப்போது காரியங்களை முடிப்பதன் மூலமும், கவலையிலிருந்து நம்மைக் காப்பாற்றிக் கொள்ளலாம்.

பரீட்சை எழுதுபவர்களுக்கு முடிவு என்ன ஆகுமோ என்று கவலை. கவலைப்படுவதால் முடிவு மாறுவ தில்லை. ஆனாலும் பலருக்குக் கவலைப்படுவது ஒரு பொழுது போக்காயிருக்கிறது. வெளி ஊருக்குப் போகும வழியில், "கொல்லைக் கதவைப் பூட்டினேனா?" என்ற கவலை. கோயிலுக்குள் போகும்போது 'செருப்பு பத்திரமாக இருக்குமா?' என்ற கவலை. கவலைப்பட ஒரு விஷயம் வேண்டும் என்பதில்லை. எதைப்பற்றியும் கவலைப்படலாம்.

கவலைப்படும் ஒரு மனிதருடன் ஒருநாள் நான் கழிக்க நேர்ந்தது. நாங்கள் இருவரும் ரயில் ஏறினோம். ரயில் கிளம்புவதற்குள் காப்பி விற்பவன் வருவானோ என்று கவலைப்பட்டார் அவர். பின் ரயில் கிளம்பியது. ஒவ்வொரு ஸ்டேஷனில் ரயில் நிற்கும்போதும் 'சரியான நேரத்தில் ஊருக்குப் போவானோ?' என்று கவலைப் பட்டார். பின் ரயிலிலிருந்து இறங்கியதும் பஸ்ஸில் இடம் கிடைக்குமா? என்று கவலைப்பட்டார். பின் பஸ்ஸில் ஏறியதும், கிராமத்திலிருந்து வண்டி வந்திருக்குமா என்று மனிதர் தலையைப் பிய்த்துக்கொண்டார். ஊரில் வண்டி ஏறியதும் வீட்டில் சமையல்காரன் தூங்கி இருப்பானோ என்று கவலைப்பட்டார். சாப்பிட்டானதும் மறு நாள் மழை பெய்யுமோ எனக் கவலைப்பட்டார். என் பொறுமை எல்லை மீறிக் கொண்டிருந்தது. "நீங்கள் மிகவும் 'லாஜிக்' ஆன பேர்வழி. ஒன்று மாற்றி ஒன்று எனக் கவலைப்பட இத்தனை வைத் திருக்கிறீர்களே" என்று பாராட்டிவிட்டுத் தூங்கப் போனேன்.

"கவலைப்படுபவர்கள் பிறரது கவனத்திற்காகப் பாதுகாப்புக்காக, அரவணைப்புக்காக ஏங்குகிறவர்கள்" என்கின்றனர் மனோதத்துவ நிபுணர்கள்.

மருத்துவம் படிக்கும் மாணவர்களுக்குப் பாடமும் பரீட்சையும் கஷ்டமாயிருக்கும்போது, பாடப் புத்தகத் தில் தாங்கள் படித்த எல்லா நோயும் தங்களுக்கு இருப்பதாக ஒரு பிரமை ஏற்படும். நெருக்கடியான பரீட்சைக்கு ஆளான என் நண்பன் ஒருவன், மருத்துவ ரிடம் சென்று, முதல் நாளிரவிலிருந்து தன் இதயம் துடிப்பது நின்றுவிட்டது என்று முறையிட்டான்; மருத்துவர் வெகு அமைதியாகக் கூறினார்: "என்

இதயம் ஒரு வாரமாக ஓடவில்லை. எனக்கு அத்தனை பிரச்னைகள்'' என்றார் அவர்!

கவலை உண்டு பண்ணும் பல நோய்களில் மிக முக்கியமானது தலைவலி. ஆண்டுதோறும் அமெரிக்காவில் சுமார் எட்டாயிரம் டன் ஆஸ்பிரின் தலைவலி மாத்திரை தயார் செய்கிறார்கள் என்றால் அதிலிருந்து மனிதனது கவலைகளின் அளவை புரிந்து கொள்ளலாம்.

பலர், கிடைக்காததை எண்ணிக் கவலைப்படுவார்கள். கவலைக்கு மாற்று, நமக்கிருக்கும் வசதிகளையும் வாய்ப்புக்களையும் உடல் நலத்தையும், நமது குடும்பத்தைப்பற்றி—அதில் உள்ள நல்ல விஷயங்களை எண்ணுவதாகும்; அந்த நல்ல விஷயங்களுக்காகக் கடவுளுக்கு நன்றி செலுத்துவதாகும்.

பலர், இருக்கும் நிலையில் ஏற்பட்டுள்ள நன்மைகளைப்பற்றி நினைப்பதில்லை. எண்ணி மகிழ்வதில்லை. அவர்கள் தங்கள் வாழ்க்கையை என்றும் அனுபவிப்பதில்லை. ஆங்கிலத்தில் இதை **Count Your Blessings** என்று கூறுவார்கள். மகிழத் தெரிந்தால்தான் மகிழ்ச்சி கூடும். மகிழத் தெரியாதபோது துக்கம் மேவும்.

அமைதியான இரவில் தூங்கப் போகும்போது ஒரு தவளை கொடுக்கும் குரல் ஏதோ பெரிதாக உலகமே கத்துவதாகத் தோன்றும். அதே போலத்தான் சிறு கவலையும். ஒரு சிறு கவலை மனித உள்ளத்தை நிறைக்கப் போதுமானது; மன நிம்மதியை அழிக்கப் போதுமானது.

கவலையைப் போலவே கோபம், பொறாமை, வெறுப்பு, பேராசை, காமம் என்ற எண்ணங்களும்,

இவை அனைத்தும் நம் சக்தியை வடித்து விடுகின்றன. சிலசமயம் கோபப்பட்ட பிறகு நம் உடல் ஒரு தளர்ந்த நிலையில்—சக்தி வடிந்த நிலையில் இருப்பதை உணர லாம். பின்னால் நாமே வருந்துவோம். நமது உணர்ச்சிகளுக்காக மன்னிப்பைக் கோருவோம்.

இதற்கு மாறாக அன்பு, கருணை, பெருந்தன்மை, நட்பு, காதல் என்கிற உணர்ச்சிகளை உள்ளே விட்டுப் பாருங்கள். பொங்கும் நீரூற்றுப்போல நம் உணர்ச்சி கள் இனிமையாய்ப் பொங்கி வருவதை உணரமுடியும்.

உள்ளத்தில் வன்மமும், பகையும், பொறாமையும் கொண்டவர்கள் உலகில் என்னதான் முன்னேறினாலும் பின்னால் ஒருநாள் அவற்றின் பலன் அவர்கள் வாழ் வைப் பாதிப்பதை உணரக்கூடும்.

இதைத்தான் சிலப்பதிகாரம் 'சூழ்வினை தான் மூந்துறும்' என்கிறது. நமது செயல்கள், நம்மை முந்திக்கொள்ளும் என்று எண்ணலாமா? வினைகள் பயனைக் கொடுக்கின்றன; நல்வினை நல்ல பயனையும், தீய எண்ணங்கள் தீய பயனையும் உண்டு பண்ணு கின்றன.

இது இவ்வளவு எளிதான உண்மையாயிருக்கும் போது, பிறரைப் பற்றிப் பொறாமையும், பிறருக்குக் கேடு பயக்கும் எண்ணங்களையும் சுமப்பது எவ்வளவு கெடுதல் என்பதை எண்ணிப் பாருங்கள்.

அதனால்தான் எல்லா மதங்களும் 'அன்பே கடவுள்' என்று போதிக்கின்றன.

பிறரது வளர்ச்சியில் பொறாமை, ஓர் இனத்தை— கட்சியைக் கண்டு வெறுக்கும் உள்ளம் என்று நாம் பல விதங்களில் நம் மனத்தில் சுமை ஏற்றுக் கொண்டிருக் கிறோம்.

நம்மில் பல தீய எண்ணங்களின் சுமைதாங்கியாக நம் மனத்தை ஆக்கிவைத்திருக்கிறோம். இதனால் நம் நிம்மதி குறைந்து வாழ்வில் நெருக்கடிகள் ஏற்படுகின்றன. தீய எண்ணங்களை அகற்றுங்கள்; தீமை புரிவோரையும் மனத்தால் மன்னித்து விடுங்கள்; வாழ்த்துங்கள். உங்கள் மனம் சுவை குறைந்து லேசாவதையும், நாளடைவில் சூழ்நிலையில் மாற்றங்கள் ஏற்படுவதையும் உணர்வீர்கள். தெரியாமலா சொன்னார் பாரதி, 'பகைவனுக்கருள் நன்னெஞ்சே, பகைவனுக்கருள்வாய்' என்று?

இரவில் படுக்கப் போகுமுன் வெறுப்பவர்களை, பிடிக்காதவர்களை, மன்னித்து விட்டுப் படுக்கச் செல்லுங்கள். மனம் அமைதியாக உறங்கும். மனத்தில் ஆக்க சக்திகளை உள்ளே புக இது வழி செய்யும்.

# பாராட்டும் உள்ளம்

'நமது உள்ளத்திலே பயம், பொறாமை, கவலை; பேராசை, காமம்' என்று பல தடைக் கற்களை எழுப்பிக் கொண்டிருக்கிறோம். இத் தடைகளினால் நமது நல்ல எண்ணங்கள் வெளியே சென்று காரியங்களை நிகழ்த்துவது தடைப்படுகிறது. அதுபோலவே வெளியிலிருக்கும் பிரபஞ்ச அறிவிலிருந்து நமக்கு நல்ல யோசனைகளும் வழி முறைகளும் நம்மை வந்தடைவதை இத்தீய உணர்ச்சிகள் தடுக்கின்றன.

மனம் இத் தீய உணர்வுகளில் சிக்காதபோது தான்—மனம் நிச்சலனமாய் இருக்கும்போதுதான்—மனத்தின் ஆக்க சக்திகள் வேலை செய்கின்றன. பல பெரியவர்களைப் பற்றியும் எண்ணிப் பாருங்கள். நாட்டைத் துண்டாட வேண்டும் என்று ஜின்னா சொன்னபோதும், காந்தி அதற்காக அவரை வெறுக்கவில்லை. கீழான உணர்ச்சிகளான-பொறாமை, வேறுப்பு போன்றவை—உள்ளே புக, காந்தி இடமே கொடுக்கவில்லை. தாம் வழக்கறிஞராய் இருந்த போதிலும், வழக்கில் தாம் வெற்றி பெறவேண்டும் என்று காந்தி விரும்பியதில்லை. வழக்கு சுமுகமாக இரு தரப்பாருக்கும் ஏற்ப முடியவேண்டுமென்றே அவர் பாடுபட்டார்; அங்கே வஞ்சம் தீர்க்கும உணர்வு இல்லை. விவாதத்திற்குரிய பிரச்னைகளிலும் தகராறுகளிலும் நாமும்-உயர வேண்டும், எதிரியையும் உயர்த்த வேண்டும்—முன்னை விட நெருக்கம் நிறைந்த நண்பர்களாய் முடிவில் கட்சிக்காரர்கள் ஆகவேண்டும் என்பதுதான் காந்திஜியின்

தத்துவம். இத்துடன், ஒருவரை ஒருவர் தூற்றிக் கொள்ளும் இன்றைய அரசியல்வாதிகளை ஒப்பிட்டுப் பாருங்கள்.

கெட்ட உணர்ச்சிகளை, தீய எண்ணங்களை அகற்ற ஒரு வழி இருக்கிறது. எல்லாவற்றையும் உருவகப் படுத்துங்கள் என்கின்றனர் மன நூலார். நமது கோபம், ஆத்திரம், வெறுப்பு எல்லாவற்றையும் எழுதி ஒரு பெட்டியில் போடுங்கள். இவ்வுணர்வுகள் மனத்தை விட்டொழியும். அல்லது எல்லாவற்றையும் எழுதி ஊமைத்துரை செய்ததுபோல் சுக்கு நூருய்க் கிழித் துக் காற்றில் ஊதுங்கள். பயத்தை எழுதிக் கொளுத் துங்கள். தீய எண்ணம் தோன்றும்போது அருகில் உள்ள மின்சார விளக்கை நிறுத்தி அறையை இருள் அடையச் செய்யுங்கள். அவ்வெண்ணங்கள் மனத்தில் இருண்டு போகும் என்கின்றனர்.

சிறிய விஷயங்களைப்பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்? அதனால் ஒன்றும் தலை போய்விடாது. பெரிய விஷயங்களைப்பற்றி ஏன் கவலைப்படவேண்டும்? என்ன கவலைப்பட்டாலும் அதன் விளைவுகள் மாறப் போவதில்லை. ஆகவே எப்படிப் பார்த்தாலும் சிறிய விஷயங்களுக்கோ அல்லது பெரிய விஷயங்களுக்கோ கவலைப்படுவதில் அர்த்தமே இல்லை.

தனி மனித முன்னேற்றத்திற்குப் பெரிய தடை யாய் இருப்பது, மனிதன் தன் மனத்தில் பிறரைப் பற்றிக் கொண்டுள்ள பொருமை, வெறுப்பு போன்ற உணர்ச்சிகளே. இவ்வுணர்வுகளே நம்மைச் சங்கிலி யாய்ப் பிணைத்து நம்மைக் கட்டிப்போட்டிருக்கின்றன. நாம் இதை உணரும்போது, நாம் இதை அகற்றும் போது தவயோகிகளின் கருணை நம்மிடமிருந்தும் புறப்படும்.

போன பாதையில் போய், பல புது விஷயங்களும் புது வழிகளும் கண்டுபிடிக்கப்படுவதில்லை. புதிய சிந்தனை, புதியவழி என்று நம்மிடம் புதுமை விரும்பும் மனோபாவமும், புதிய பாதையில் நடக்கத் தைரியமும் வேண்டும். ஒரு குடும்பத்தில் எல்லோரும் விவசாயிகளாக இருக்கும்போது, ஒருவர் விஞ்ஞானியாக விரும்பினால் அதற்கும் தைரியம் வேண்டும். பிற எதிர்ப்புக்களைச் சமாளிக்கும் துணிவு வேண்டும். பெரிய சனாதனக் குடும்பத்தில் பிறந்த பெண், சினிமா நடிகையாக விரும்பினால் அதற்கு அசாதாரண தைரியம் வேண்டும். புதிய கருத்துக்கள் மூளையில் புதிய புரதப் பொருள்களை உருவாக்குகின்றன என்கிறார்கள் மூளைமருத்துவர்கள்.

புதிய வழியில் செல்லும்போது பெரும்பாலோர் எதிர்ப்பார்கள்; கண்டிப்பார்கள்; பயமுறுத்துவார்கள். கொஞ்சம் மாறுபட்ட உடை உடுத்திக்கொண்டு வெளியில் சென்று பாருங்கள், நமது ஊரில் எல்லோரும் நமது உடையைப் பற்றியே குறிப்பிடுவார்கள். உடைக்கே இப்படி என்றால் மனமொத்துக் காதல் திருமணம் செய்துகொள்வதைப் பற்றிக் கேட்கவே வேண்டாம். பொது அபிப்பிராயம் நம்மைப் பயமுறுத்தலாம. ஆனால் அதற்காகப் பொது அபிப்பிராயம் என்றும் சரியாக் இருக்க வேண்டும் என்பதல்ல. பொது மக்கள் எப்போதுமே 'சாயுற பக்கமே சாயும்' செம்மறியாடுகள். ஆனால் நமக்கு நம் கொள்கையில் உறுதி வேண்டும். பிறர் கண்டனத்தைக் கண்டு கலங்காத உள்ளம் வேண்டும்.

சில சமயம் நாம் காலத்திற்கு முன்னால் இருப்போம். பர்னாட்ஷாவின் கருத்துக்களும், பெரியாரின் கருத்துக்களும் காலத்திற்கு முன் வந்தவை. ஆனால்

அவர்களோ வலுவான மனிதர்கள். கொள்கையில் உடும்புப்பிடி கொண்டவர்கள்.

வயதிற்கு நாம் மதிப்புத் தரவேண்டும்; ஆனால் வெறும் வயதைக் காட்டிப் பயமுறுத்த நாம் அனுமதிக்கக்கூடாது. பதவியைக் காட்டிப் பயமுறுத்துவதும் அப்படியே. 'பதவி நிரந்தரமல்ல, நமது சத்திய நெறியே நிரந்தரம்' என்பதை நாம் உணரும்போது பதவி, வயது, அதிகாரம், பழைமை எல்லாம் பொடிப் பொடியாக உதிர்கின்றன.

பாராட்டுவது ஒரு வளர்ந்த மனப் பண்பு. பாராட்டு எங்கு தேவையோ அங்கு பாராட்டவேண்டும். பிறரைப் பாராட்டும்போது நாம் உயர்கிறோம். பாராட்டப்படுபவர் உற்சாகத்தால் தன்னம்பிக்கை பெற்று மேலும் உயர்கிறார்.

இருபதாம் நூற்றாண்டின் முன் பகுதியில் கல்கி ஒரு மகத்தான மறுமலர்ச்சியைத் தமிழ் நாட்டில் தோற்றுவித்தார். கலையில், இசையில், நாட்டியத்தில், சிற்பத்தில், இலக்கியத்தில் என்று அவர் தோற்றுவித்த மறுமலர்ச்சியை நாளை சரித்திரம் எழுதும். எங்கு யார் யார் நல்ல வேலை செய்கிறார்களோ அவர்களைக் கண்டெடுத்துப் பாராட்டினார். ராஜாஜியைப் பாராட்டினார். எம்.எஸ்.ஸைப் பாராட்டினார். காந்தியை மாந்தருக்குள் ஒரு தெய்வம் என்றார். நேருவை மனித குல மாணிக்கம் என்றார். அண்ணாவைத் தமிழ்நாட்டு பர்னார்டு ஷா என்றார்.

அதைப் போலவே அண்ணாவும், வ. ரா. என்ற அந்தப் பெரிய எழுத்தாளரை 'அக்கிரகாரத்தில் அதிசயப் பிறவி' என்று மனதாரப் பாராட்டினார்.

நினைவில் கொள்ளுங்கள். கோவிலில் தேவாரமும் திருவாசகமும் பாடும்போதும், அர்ச்சனை செய்யும் போதும் நாம் கடவுளைப் புகழ்கிறோம்; பாராட்டுகிறோம். கடவுள் சொல்கிறாரா பாராட்டு என்று? இல்லை. எதைப் பாராட்டுகிறோமோ, அதுவாக நாம் மாறு கிறோம். அதுதான் உண்மை.

கடவுளைத்தான், தலைவனைத்தான் பாராட்டவேண் டும் என்பதில்லை. நமக்குக் கீழ் வேலை செய்வோரை நாம் பாராட்ட வேண்டும். அடி நிலையிலுள்ளோர் தன்னம்பிக்கைக்காக ஏங்கி மேல் நோக்குகின்றனர். தயங்காது பாராட்டுங்கள்.

பாராட்டு பல நல்ல காரியங்களையும் அற்புதங் களையும் செய்யத் தூண்டுகிறது. இனிய வார்த்தைகள் இருக்கும்போது இன்னாத வார்த்தைகளை நாம் ஏன் உபயோகிக்க வேண்டும்.

ஒரு மனிதனைக் கேவலமாக நடத்துவதன் மூலம் நாம் அவனிடமிருந்து முதல் தரமான வேலையை எதிர் பார்க்க முடியாது. நாம் முதல்தரமான மனிதராக இருக்க வேண்டுமெனில், நாம் எல்லோரையும் முதல் தரமாக நடத்தப் பழக வேண்டும்; முதல் தரமான எண் ணங்களை, பாராட்டும் பெருந்தன்மை மிக்க எண்ணங் களை உள்ளே விடக் கற்றுக்கொள்ள வேண்டும்.

# விஞ்ஞானம் முடியும் இடம்

சூரியன் நமது வாழ்வில் ஒரு புத்துணர்ச்சியை யும் ஓர் ஆக்க சக்தியையும் ஊட்டுகிறுன். சூரியன் இல்லாத இரவு மனத்தில் பயம் தரும் எண்ணங்களை யும், குறிப்பாக மூச்சு சம்பந்தமான ஆஸ்த்மா போன்ற வியாதிகள் அதிகம் துன்புறுத்தக் காரணமாயிருக் கிறது என்றும் விஞ்ஞான ஆராய்ச்சி கூறுகிறது. அதே போல சந்திரனின் வளர் பருவம் வளரும் விதை களில் பெரிய மாறுபாட்டை உண்டுபண்ணுகின்றன என்று விஞ்ஞான ஆராய்ச்சி தெரிவிக்கிறது. இதிலிருந்து பிற கோளங்களும் அதிலிருந்து புறப்படும் கதிர்களும்· நம் வாழ்வைப் பாதிக்குமோ என்ற பல சிந்தனைகள் பல விஞ்ஞானிகளுக்கும் ஏற்படுகின்றன.

வட துருவம்—தென் துருவம் என்பவற்றின் காந்த சக்திகூட நம் நிம்மதியையும் தூக்கத்தையும் இாவில் பாதிக்கும் என்று நம்பப்படுகிறது. சில சமயம் விஞ்ஞான ஆராய்ச்சி எங்கே முடிகிறது, எங்கே 'மூட நம்பிக்கைகள்' துவங்குகின்றன என்ற அச்சம் எழுகிறது. இன்றைய விஞ்ஞானிகளின் உள்ளத்தில் விஞ்ஞான மந்திரக்கோல் பட்டு, நமது பழைய நம்பிக் கைகள் இன்று புரட்சிகரமான மாறுதலடைந்து வரு கின்றன.

உலகில்—இப்பிரபஞ்சத்தில் எல்லாம் ஓர் சக்கரம் போல் தோன்றி முடிவடைந்து, மறுபடி தோன்றிக் கொண்டிருக்கும் ஓர் ஒழுங்கை நாம் காண்கிறோம்

முட்டைகள் குஞ்சாவதும், குஞ்சு பறவையாவதும் பறவை முட்டையிடுவதும் என ஓர் ஒழுங்கை— வாழ்க்கைச் சக்கரத்தைக் காண்கிறோம். சூரியன் தினம் காலையில் தோன்றி மாலையில் மறைகிறது; பிறகு மீண்டும் தோன்றுகிறது. பூமி தன்னைத்தானே சுற்று கிறது ஓர் ஒழுங்கில். காலநிலைகளான பருவ காலங்கள் எல்லாம் சக்கரம்போல் வருகின்றன. பருவமெய்திய பெண்களின் உடல் மாறுபாடு 28 நாட்களுக்கு ஒரு முறை நிகழ்வதைப்போல வேறு கால ஒழுங்கில் ஆண் களின் வாழ்க்கையிலும் இத்தகைய சக்கரம் இருப்ப தாக விஞ்ஞானிகள் கருதுகின்றனர்.

'ஆம்பிடமின்' என்ற மருந்தை எலிகளின் வாழ்வில் ஒரு குறிப்பிட்ட காலத்தில் கொடுத்தபோது 77 சதம் எலிகள் செத்ததையும், மற்றச் சமயங்களில் அதைக் கொடுத்தபோது சுமார் 8 சதமே இறந்ததையும், கண்டார்கள்.

அதேபோல் நமது கல்லீரலின் வேலையும், நமது மூளையில் நிலவும் சர்க்கரை அளவும் பகல் நேரத்தில் ஒரு சக்கரம்போல் மாறுவதைக் கண்டிருக்கிறார்கள் மருத்துவர்கள்.

பெண்களுக்கு வீட்டுவிலக்கின்போது ஒரு தளர்வு, தலைவலி, கவனக்குறைவு, எரிச்சல், தெளிவு, குறைந்த பார்வை என்று ஏற்படுவதைப் போலவே, ஆண்களுக் கும் உற்சாகம் குறைந்த, நம்பிக்கை தளர்ந்த நேரங்கள் ஒரு சக்கரம்போல் வாரந்தோறுமோ மாதந்தோறுமோ வருகிறது எனக் கூறுகிறார்கள்; நமது டயரியில் நமது மனநிலையை அன்றாடம் குறித்து வைப்பதன் மூலம் நமது உயர் நாளையும் தளர் நாளையும் புரிந்துகொள்ள

லாம். ஆக நாமறியாத புற விஷயங்கள் நம் வாழ்வைப் பாதிக்கின்றன; நமது எண்ணங்களைப் பாதிக்கின்றன.

அதேபோல் ஒளியை வெளியிலிருந்து உறிஞ்சிக் கொள்ளும் பிளாஸ்டிக் நார்களை மூளைக்கருகில் பதித்த போது அதிக ஒளி உறிஞ்சப்பட்டு, அதன் விளைவாக ஆண்—பெண் உறவில் அதிக ஈடுபாடு தோன்றியதைக் கண்டிருக்கிறார்கள்.

ஒளி நமது கண்மூலம் மட்டும் போவதில்லை; நமது பூரா உடலும், செடி கொடிகள்போல ஒளியை வாங்கிப் பயன்படுத்துகிறது என்று அறியப்பட்டிருக்கிறது; இதன்படி, ஒழுங்கற்ற வீட்டு விலக்கிற்கு ஆளாகி வந்த பெண்களை வீட்டு விலக்கேற்பட்ட 14, 15, 16 நாட்களில் நல்ல ஒளியுள்ள அறையில் தூங்கச் செய்வதன் மூலம், அப்பெண்கள் உடலில் ஓர் ஒழுங்கைக் கொண்டு வர முடிந்தது.

காலச்சக்கரம், ஒளி என்று இவை நம் உடலையும் உள்ளத்தையும் பாதிப்பதைப் பார்த்தோம். அதேபோல் நம்மைச் சூழ்ந்திருக்கும் காற்று நம் வாழ்வையும் எண்ணங்களையும் பாதிக்கிறது. காற்றில் மின்னணுக்கள் இருக்கின்றன. அதனால், காற்று—நேர் மின்னணு (Positive Ions) கொண்டதாகவோ, எதிர் மின்னணு (Negative Ions) கொண்டதாகவோ இருக்கக் கூடும்.

சகஜமாக ஒரு கன சென்டிமீட்டர் அளவு காற்றில் சுமார் 1,500-லிருந்து 4,000 வரை மின்னணுக்கள் இருக்கின்றன. இவை 6 நேர் மின் அணுவுக்கு, 5 எதிர் மின்னணு என்ற விகிதத்தில் இயற்கையில் அமைந்திருக்கிறன.

மின்னணுக்களின் மொத்தத் தொகையை அதிகரிப்பது செடி கொடிகளின் வளர்ச்சியை அதிகப் படுத்துகிறது. பார்லி, ஓட்ஸ் பயிரிட்ட நிலங்களில் மின்னணுவை அதிகப்படுத்திச் சுமார் 50 சதம் அறுவடையை அதிகப்படுத்தினர்.

மின்னணு இல்லாதபோதும், அல்லது காற்றில் நேர் மின்னணுவின் தொகை அதிகமாயிருக்கும் போதும் இன்புளுயன்ஸா நோய் கண்ட எலிகள் இறந்து போவதைக் கண்டார்கள். மாறாக மின்னணுக்கள் தொகை அதிகமாயிருக்கும்போதும், அல்லது எதிர் மின்னணுவின் எண்ணிக்கை அதிகப்படும்போதும் எலிகள் நோயிலிருந்து பிழைத்துக் கொள்வதைக் கண்டார்கள்.

ஜப்பானில் நடந்த ஒரு சோதனையில் மனித வாழ் விலும் மின்னணுக்கள் இப்படியொரு நிலைமையைத் தோற்றுவித்தன. தீயினால் சுட்டபுண் குணமாவதிலும் கிருமிகளால் ஏற்பட்ட நோய் குணமாவதிலும், அதிக எதிர் மின்னணுவின் புழக்கம் நலம் விளைத்ததைக் கண்டார்கள்.

நமது ஊரில் நமது பெரியவர்கள் சில சமயம் ''கெட்ட காற்று, உள்ளே போ'' என்றும், ''ஊதைச் சாரல்—உடம்புக் கொவ்வாது'' என்றும் கூறுவதை நாம் கேட்டிருக்கிறோம். இதேபோல் ஜப்பானில் 'ஷராவிலிருந்து அடிக்கும் காற்று' என்பதும் ஜெர்மனி யில் 'போன் நகரிலிருந்து வீசும் கெட்ட காற்று' என்பதும் மிகப் பிரசித்தமான செய்திகள். இக்காற்று வீசும் காலங்களில், மக்கள் தூக்கமின்மையாலும், வயிற்றுக் குமட்டலினாலும், தலைவலியாலும், மனச் சோர்வாலும் கஷ்டப்படுவார்கள்.

ஆராய்ந்ததில் இக்காற்றில் நேர்மின்னணு அதிக மாயிருந்தது தெரிய வந்தது.

நமது ஊரில் ஞானிகள், யோகிகள் ஏன் மலை உச்சியிலும், நீருக்கருகில் கடற்கரை ஓரங்களிலும் தங்கள் ஆசிரமங்களை அமைக்கின்றனர் என்பதை இத்துடன் இணைத்து எண்ணிப் பாருங்கள். அங் கெல்லாம் நல்ல காற்று இருக்கிறது; எதிர் மின்னணு நிறைந்த காற்று வீசுகிறது.

நமது மருத்துவர்கள் சில சமயம் 'கடற்கரை வாசம் செய்யுங்கள்' என்று யோசனை கூறக் கேட் டிருப்பீர்கள். அல்லது 'மலைவாசஸ்தலம் செல்லுங்கள்' என்று சொல்லக் கேட்டிருப்பீர்கள்.

"ஊதல் காற்று வீசுகிறது. உள்ளே போ'' என்று என் தந்தை கூறியபோதெல்லாம், சிறு வயதில் ஓர் இளஞ்சிரிப்புடனும், நகைப்புடனுமே நான் உள்ளே போயிருக்கிறேன். இப்போதோ வியப்பு மேலிட நமது ஞானத் தந்தையரின் அறிவை எண்ணிச் சிந்திக் கிறேன்.

# பிரபஞ்ச அறிவு

பிரபஞ்சம் நம்மைச் சூழ்ந்திருக்கிறது; பிரபஞ்ச அறிவும் நம்மைச் சூழ்ந்திருக்கிறது. பிரபஞ்சம் எல்லையற்றது; பிரபஞ்ச அறிவும் எல்லையற்றது. ஒருவேளை நம்மைச் சூழ்ந்திருக்கும் எல்லையற்ற பிரபஞ்சத்தையே பிரபஞ்ச அறிவு என்று கூறுகிறோமோ என்ற சந்தேகம் எழுகிறது. பிரபஞ்சமும் பிரபஞ்ச அறிவும் ஒன்றிலிருந்து ஒன்று வேறுபட்டிருப்பதாகத் தெரியவில்லை.

பிரபஞ்ச அறிவு பற்றி ஏதும் விஞ்ஞான ஆதாரம் இல்லை; நேரடி ஆதாரமும் இல்லை. பிரபஞ்ச அறிவு பற்றிய நமது கருத்தெல்லாம் மறைமுக ஆதாரத்திலிருந்து பெறப்பட்டவை.

விஞ்ஞானிகள் தங்களது மகத்தான விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளை எங்கிருந்து பெறுகிறார்கள் என்ற கேள்வியை எழுப்பினோமானால், 'அந்த உண்மை எங்கோ இருந்தது, இருக்கிறது என்பதும், மனம் அந்த இடத்திற்கு ஒரு புதுத் தொடர்பை ஏற்படுத்தியது' என்பதும் விளங்கும். உண்மைகள் எங்கோ இருக்கும் இடத்தைத்தான் 'பிரபஞ்ச அறிவு' என்கிறோம்.

இதுவன்றி, எல்லோருடைய வாழ்விலும், எப்போதாவது ஏதோ நம்மைவிட ஒரு பெரிய சக்தி உலவுவது போல, நமக்கு உதவுவதுபோல—ஓர் உணர்ச்சி நமக்கு ஏற்படாமல் போவதில்லை. அவரவர் சொந்த அனுபவமாக விளங்கும் இந்த உணர்வும் மறைமுக ஆதாரம் தான்.

உடனடியாக இப் பிரபஞ்ச அறிவுடன் தொடர்பு காண ஒரு வழி இருக்கிறது. அதையே தியானம், யோகம் என்று சொல்கிறோம். ஒரு தனி அறையில் உட்கார்ந்து கொண்டு கண்களை மூடுங்கள். ஏதாவது ஒரு பொருளைப்பற்றிச் சிந்தியுங்கள். புலனறிவை அடையுங்கள். எங்கோ எண்ணம் உச்சியில் போய் நம் தலையிலுள்ள ஒரு பெட்டியில் சட்டென்று பூட்டிக் கொள்வதைப்போல் நீங்கள் உணரக்கூடும். சிலசமயம் ஒளிமயமான உள்ளுலகம் தோன்றும். ஏதோ நாம் இப்பிரபஞ்சத்துடன் பெரிய அளவில் தொடர்பு கொண்டிருப்பதாக ஓர் உணர்வு எழக்கூடும்; நமது உடல் நம் கற்பனையில் பெருத்தோ அல்லது சிறுத்தோ எங்கோ ஐக்கியமாகிவிட்ட ஓர் அனுபவம் ஏற்படும்.

அப்போது நாம் பிரபஞ்சத்தை உணர முடியும்—அறிய முடியும். அதை ஜப்பானிய ஞானி சொன்னார்: 'ஒரு கை, உண்டு பண்ணும் சத்தம்' என்று. ஒரு கை எப்படிச் சப்தத்தைத் தோற்றுவிக்கும்? சிந்தித்துப் பாருங்கள்.

அந்தத் தியான நிலையை ஓப்பன் ஹீமர் என்ற அணுசக்தி விஞ்ஞானி விளக்குகிறார்: "சிந்தனை இரு வகைப்படும். காலம் வரலாறு, வாழ்க்கை என்ற ஒரு வகை. இது நேர்கொண்ட பாதை. மற்றொரு சிந்தனை, காலம் கடந்தது. அங்கே காலம், இடம் இதற்கெல்லாம் பொருளில்லை. அது விரிந்து கிடக்கும் ஒரு பிரபஞ்சம்."

மேனாட்டுக் கல்வியும் அறிவும், இக்கால வரலாற்று—பகுத்தறிவு நிலையில் நிகழ்வது. கீழை நாட்டு அனுபவமோ காலங்கடந்த பிரபஞ்சத் தொடர்பில் நிற்பது. இவை இரண்டும் ஒன்றை ஒன்று தழுவி நிற்கின்றன.

மனிதன் இவ்விரண்டினையும் புரிந்துகொண்டு தன் வாழ்க்கையை அதற்கேற்ப அமைத்துக் கொள்ளும் போதுதான் அவன் பூரணத்துவம் பெறுகிறான்.

பிரபஞ்சம் ஒரு தீக்கோளாய், காற்று வடிவாய், சக்தி வடிவாய் இருந்தது. அதிலிருந்து நட்சத்திரங் களும் கோள்களும் பிறந்தன என்று வானநூல் கூறு கிறது. இக்கோள்களில் சக்தி பொருள் வடிவமாய் அமைந்தது. அப்பொருள் வடிவே கல் மண்ணென்ற உயிரற்ற கனிவளமாகவும், உயிருள்ள தாவர மிருக இனமாகவும், மனித இனமாகவும் தோன்றியது. ஆக, நாமெல்லாம் அப்பிரபஞ்சத்தின் சிறு துளிகள்.

விஞ்ஞானிகள் இப்பிரபஞ்சம் விரிவடைவதாகக் கூறுகிறார்கள். உண்மையில் விரிவடைவதும் சுருங்கு வதும் ஒரு காசின் இருபக்கங்கள்போல. ஒரு பக்கத் தில் பிரபஞ்சம் நட்சத்திரங்களாகவும், கோள்களாக வும், உயிர்களாகவும் விரிகிறது. மறுபக்கத்தில் உயிர் களோ, மூலப்பொருளை நாடி ஐக்கியமடைய விரும்பு கின்றன; சுருங்கத் துவங்குகின்றன.

அமெரிக்காவில் எட்கார் கேசி என்று ஒரு போட்டோகிராபர் 1920-இல் வாழ்ந்தார். ஒரு சமயம் அவருக்குத் திடீரென்று குரல் பேச முடியாமல் போக, ஒரு மருத்துவர் அவரை 'ஹிப்னடைஸ்' செய்து குணப் படுத்தினார்.

சில நாள் கழித்து அவருக்கு மீண்டும் பேசவராமல் போகவே, அவரை மீண்டும் ஹிப்னடைஸ் செய்தார் மருத்துவர். அப்போது ஹிப்னடிச நிலையிலிருந்த எட்கார் கேசி தாமே தம் குரல் நிலையை எடுத்துக் கூறி அதற்கான சிகிச்சையும் கூறினார்.

அதிலிருந்து அவர் ஹிப்னடிச நிலைக்குச் சென்று பிறருடைய நோய் நொடிகளைக் குணமாக்கும் வழிகளைக் கூறினார். பல மருத்துவர்களும் தீர்க்க முடியாத நோய்களைக் குணமாக்க அவர் உதவியை நாடினார்கள்.

ஒரு சமயம் ஒரு நோயாளியைப் பற்றிக் குறிப்பிடும் போது, 'அவன் தன் பூர்வ ஜன்ம பலனை அனுபவிக்கிறான்' என்றொரு வாசகம் அவரிடமிருந்து தூக்கநிலையில் வந்தது. பூர்வ ஜன்மம்பற்றி நம்பிக்கையில்லாத அவர் ஏதோ கெட்ட தேவதை தம்மை ஆட்கொண்டிருப்பதாகக் கூறி இப்படிக் குணப்படுத்துவதை விட்டு விட்டார். அப்போது அவருக்கு மீண்டும் பேச முடியாமல் போயிற்று. எட்கார் கேசி அதிலிருந்து ஏதும் சந்தேகப்படாமல் தம் பணியை முப்பதாண்டுகள் செய்து வந்தார்.

அவரிடம் மக்கள், உலகம், அரசியல், எதிர்காலம் என்று பலவும் கேட்டார்கள். அவர் கூறியது அனைத்தும் உண்மையாக இருந்தன.

ஒரு சமயம் "எங்கிருந்து இந்த விஷயங்களைப் பெறுகிறீர்கள்?" என்று கேட்டதற்கு, "ஆகாயக் குறிப்பேடுகளிலிருந்து—பிரபஞ்ச அறிவிலிருந்து" என்றார் அவர்.

பிரபஞ்ச அறிவை மனிதன் தொட முடியும் என்பதற்கு எட்கார் கேசி ஒரு சிறு உதாரணம். பிரபஞ்ச அறிவுடன் தொடர்பு கொள்ளும் பெரியோர்களும், ஞானிகளும் நமது ஊரில் இருக்கிறார்கள்.

பிரபஞ்ச அறிவுதான் நாம் புறப்பட்ட இடம். அதனால்தான் பிறந்த இடம் நோக்கி—மூலப்பொருள்

நோக்கி—ஓடும் ஓர் ஆத்மிக தாபம் மனித இயல்பாக அமைந்திருக்கிறது. அந்தத் தொடர்பை நாம் தியானத்தால்—யோகத்தால் பெற முடியும். அப்படிச் சிந்தையை ஒன்றின்பால் செலுத்தும்போது நம் எண்ணங்களிலும் உடலிலும் ஒரு நிம்மதி—மகிழ்வு ஏற்படுகிறது. பொங்கிப் பிரவகிக்கும் அன்பு—கருணை நம்மிடமிருந்து புறப்படுகிறது. நாம் புது மனிதனாகிறோம். மனிதன் தேவன் ஆகிறான்.

